ஓம் ஸப்தார்ச்சிஷே நம:
ஓம் த்ரிநயனாய நம:
ஓம் த்ரிவேணீ பலதாயகாய நம:
ஓம் கிருஷ்ணவர்மணே நம:
ஓம் வேதமுகாய நம:
ஓம் தாருமண்டல மத்யகாய நம:
ஓம் வீர நூபுர பாதாப்ஜாய நம:
ஓம் வீரகங்கண பாணிமதே நம:
ஓம் விஸ்வமூர்த்தயே நம: 930
ஓம் சுத்தமுகாய நம:
ஓம் சுத்தபஸ்மானு லேபனாய நம:
ஓம் சும்பத்வம்ஸினீ ஸம்பூஜ்யாய நம:
ஓம் ரத்னகும்ப குலாந்தகாய நம:
ஓம் நிஷாதாதி ஸ்வரப்ரீதாய நம:
ஓம் நமஸ்கார பலப்ரதாய நம:
ஓம் பக்தாரி பஞ்சதா தாயினே நம:
ஓம் ஸஜ்ஜீக்ருத சராயுதாய நம:
ஓம் அபயங்கர மந்த்ரக்ஞாய நம:
ஓம் குப்ஜிகா மந்த்ர விக்ரஹாய நம: 940
ஓம் தூம்ராஸ்த்ராய நம:
ஓம் தூம்ரதேஜஸ்வினே நம:
ஓம் தசகண்ட விநாசனாய நம:
ஓம் ஆசுகாயுத ஹஸ்தாப்ஜாய நம:
ஓம் கதாயுத கராம்புஜாய நம:
ஓம் பாசாயுத ஸுபாணயே நம:
ஓம் கபாலாயுத ஸத்புஜாய நம:
ஓம் ஸஹஸ்மூர்த்த வதனாய நம:
ஓம் ஸஹஸ்ர த்வயலோசனாய நம:
ஓம் நானாஹேதிதனுஷ் பாணயே நம: 950
ஓம் நானாஸ்தி பூஷண ப்ரியாய நம:
ஓம் ஆச்யாம கோமள தனவே நம:
ஓம் ஆரக்தாபாங்க லோசனாய நம:
ஓம் த்வாதசாஹக்ரது ப்ரீதாய நம:
ஓம் பௌண்டரீக பலப்ரதாய நம:
ஓம் அப்தோர்யாம க்ரதுமயாய நம:
ஓம் சயனாதி பலப்ரதாய நம:
ஓம் பசுபந்த பலதாத்ரே நம:
ஓம் வாஜபேயாத்மதை வதாய நம:
ஓம் ஆப்ரஹ்மகீட ஜனாவனாத்மனே நம: 960
ஓம் சம்பகப்ரியாய நம:
ஓம் பசுபாச விபாகக்ஞாய நம:
ஓம் பதிக்ஞான ப்ரதாயகாய நம:
ஓம் கல்பேச்வராய நம:
ஓம் கல்ப வர்யாய நம:
ஓம் ஜாதவேதப்ரபா கராய நம:
ஓம் கும்பீச்வராய நம:
ஓம் கும்பபாணயே நம:
ஓம் குங்குமாங்கித லலாடகாய நம:
ஓம் சிலீந்த்ர பத்ர ஸங்காசாய நம: 970
ஓம் ஸிம்ஹ வக்த்ர ப்ரமர்த்தனாய நம:
ஓம் கோகிலத்வனிதா கர்ணினே நம:
ஓம் காலநாசன தத்பராய நம:
ஓம் நையாயிகம தக்னாய நம:
ஓம் பௌத்தஸங்க விநாசனாய நம:
ஓம் ஹேமாப்ஜாத்ருத பாணயே நம:
ஓம் ஹோமஸந்துஷ்ட மானஸாய நம:
ஓம் பித்ருயக்ஞஸ்ய பலதாய நம:
ஓம் பிதேவஜன ரக்ஷகாய நம:
ஓம் பதாதிகர்ம நிரதாய நம: 980
ஓம் ப்ருஷதாஜ்ய ப்ரதாயகாய நம:
ஓம் மஹாஸுர வதோத் யுக்தாய நம:
ஓம் ஸ்வாஸ்தர ப்ரத்யஸ்த்ர வர்ஷகாய நம:
ஓம் மஹா வர்ஷதிரோதானாய நம:
ஓம் நாகாத்ருத கராம்புஜாய நம:
ஓம் நமஸ்வாஹாவஷட் ச்ரௌஷட் பல்லவ ப்ரதிபாதகாய நம:
ஓம் மஹீரஸத்ருசக்ரீவாய நம:
ஓம் மஹீரஸ த்ருசஸ்தவாய நம:
ஓம் தந்த்ரீ வாதன ஹஸ்தாக்ராய நம:
ஓம் ஸங்கீதப்ரியமானஸாய நம: 990
ஓம் சிதம்சமுகுராவாஸாய நம:
ஓம் மணிகூடாத்ரி ஸஞ்சாராய நம:
ஓம் லீலா ஸஞ்சார தனுகாய நம:
ஓம் லிங்க சாஸ்த்ர ப்ரவர்த்தகாய நம:
ஓம் ராகேந்துத்யுதி ஸம்பன்னாய நம:
ஓம் யாககர்ம பலப்ரதாய நம:
ஓம் மைநாக கிரிஸஞ்சாராய நம:
ஓம் மது வம்ச விநாசனாய நம:
ஓம் தாளகண்டபுரா வாஸாய நம:
ஓம் தமா லஸ தேஸஜஸே நம:
ஓம் (தமால நிப தேஜஸே) நம: 1000
ஓம் பவஸ்ய தேவஸ்ய ஸுதாய நம:
ஓம் சர்வஸ்ய தேவஸ்ய ஸுதாய நம:
ஓம் ஈசானஸ்ய தேவஸ்ய ஸுதாய நம:
ஓம் பசுபதேர் தேவஸ்ய ஸுதாய நம:
ஓம் ருத்ரஸ்ய தேவஸ்ய ஸுதாய நம:
ஓம் உக்ரஸ்ய தேவஸ்ய ஸுதாய நம:
ஓம் பீமஸ்ய தேவஸ்ய ஸுதாய நம:

ஓம் மஹதோர் தேவஸ்ய ஸுதாய நம:1008

ஸ்ரீ பூர்ணா புஷ்கலாம்பா ஸமேத ஸ்ரீ ஹரிஹர புத்ரஸ்வாமி நே நம:
நாநாவித பரிமள பத்ர புஷ்பாணி ஸமர்ப்பயாமி |

h h h h h

## ஸ்ரீ தர்ம சாஸ்தா அஷ்டோத்தரசத நாமாவளி

ஓம் மஹா சாஸ்த்ரே நம:
ஓம் மஹா தேவாய நம:
ஓம் மஹா தேவஸுதாய நம:
ஓம் அவ்யாய நம:
ஓம் லோக கர்த்ரே நம:
ஓம் லோக பர்த்ரே நம:
ஓம் லோக ஹர்த்ரே நம:
ஓம் பராத்பராய நம:
ஓம் த்ரிலோக ரக்ஷகாய நம:
ஓம் தன்வினே நம: 10
ஓம் தபஸ்வினே நம:
ஓம் பூதஸைனிகாய நம:
ஓம் மந்த்ர வேதினே நம:
ஓம் மஹா வேதினே நம:
ஓம் மாருதாய நம:
ஓம் ஜகதீச்வராய நம:
ஓம் லோகாத்யக்ஷாய நம:
ஓம் அக்ரண்யே நம:
ஓம் ஸ்ரீமதே நம:
ஓம் அப்ரமேய பராக்ரமாய நம: 20
ஓம் ஸிம்ஹாரூடாய நம:
ஓம் கஜாரூடாய நம:
ஓம் ஹயாரூடாய நம:
ஓம் மஹேச்வராய நம:
ஓம் நாநா சஸ்த்ர தராய நம:
ஓம் அநர்க்காய நம:
ஓம் நாநா வித்யா விசாரதாய நம:
ஓம் நாநா ரூபதராய நம:
ஓம் வீராய நம:
ஓம் நாநாப்ராணி நிஷேவகாய நம: 30
ஓம் பூதேசாய நம:
ஓம் பூதிதாய நம:
ஓம் ப்ருத்யாய நம:
ஓம் புஜங்க பரணோத்தமாய நம:
ஓம் இக்ஷுதன்வினே நம:
ஓம் புஷ்ப பாணாய நம:
ஓம் மஹாரூபாய நம:
ஓம் மஹா ப்ரபவே நம:
ஓம் மாயா தேவீ ஸுதாய நம:
ஓம் மான்யாய நம: 40
ஓம் மஹா நீதாய நம:
ஓம் மஹா குணாய நம:
ஓம் மஹா சைவாய நம:
ஓம் மஹா ருத்ராய நம:
ஓம் வைஷ்ணவாய நம:
ஓம் விஷ்ணு பூஜகாய நம:
ஓம் விக்னேசாய நம:
ஓம் வீரபத்ரேசாய நம:
ஓம் பைரவாய நம:
ஓம் ஷண்முகத்ருவாய நம: 50
ஓம் மேருச்ருங்க ஸமாஸீனாய நம:
ஓம் முனிஸங்க நிஷேவிதாய நம:
ஓம் தேவாய நம:
ஓம் பத்ராய நம:
ஓம் ஜகந் நாதாய நம:
ஓம் கண நாதாய நம:
ஓம் கணேச்வராய நம:
ஓம் மஹா யோகினே நம:
ஓம் மஹா மாயினே நம:
ஓம் மஹா க்ஞானினே நம: 60
ஓம் மஹா ஸ்திராய நம:
ஓம் தேவசாஸ்த்ரே நம:
ஓம் பூதசாஸ்த்ரே நம:
ஓம் பீமஹாஸ பராக்ரமாய நம:
ஓம் நாகஹாராய நம:
ஓம் நாககேசாய நம:
ஓம் வ்யோம கேசாய நம:
ஓம் ஸநாதனாய நம:
ஓம் ஸுகுணாய நம:
ஓம் நிர்குணாய நம: 70
ஓம் நித்யாய நம:
ஓம் நித்ய த்ருப்தாய நம:
ஓம் நிராச்ரயாய நம:
ஓம் லோகாச்ரயாய நம:
ஓம் கணாதீசாய நம:
ஓம் சது:ஷ்ஷ்டி கலாமயாய நம:
ஓம் ரிக் யஜுஸ் ஸாம அதர்வண ரூபிணே நம:
ஓம் மல்லகாஸுர பஞ்ஜனாய நம:
ஓம் த்ரி மூர்த்தயே நம:
ஓம் தைத்ய மதனாய நம: 80
ஓம் ப்ரக் ருதயே நம:
ஓம் புருஷோத்தமாய நம:
ஓம் கால ஞானினே நம:
ஓம் மஹா ஞானினே நம:
ஓம் காமதாய நம:
ஓம் கமலே க்ஷணாய நம:
ஓம் கல்ப வ்ருக்ஷாய நம:

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஓம் மஹா வ்ருக்ஷாய | நம: | | ஓம் பாப பஞ்ஜனாய | நம: | |
| ஓம் வித்யா வ்ருக்ஷாய | நம: | | ஓம் புஷ்கலா பூர்ணா ஸம்யுக்தாய | நம: | |
| ஓம் விபூதிதாய | நம: | 90 | ஓம் பரமாத்மனே | நம: | 100 |
| ஓம் ஸம்ஸார தாப விச்சேத்ரே | நம: | | ஓம் ஸதாங்கதயே | நம: | |
| ஓம் பசுலோக பயங்கராய | நம: | | ஓம் அனந்தாதித்ய ஸம்காசாய | நம: | |
| ஓம் ரோக ஹந்த்ரே | நம: | | ஓம் ஸுப்ரஹ்மண்ய அனுஜாய | நம: | |
| ஓம் ப்ராண தாத்ரே | நம: | | ஓம் பலினே | நம: | |
| ஓம் பரகர்வ விபஞ்ஜனாய | நம: | | ஓம் பக்தானு கம்பினே | நம: | |
| ஓம் ஸர்வ சாஸ்த் ரார்த்த தத்வக்ஞாய | நம: | | ஓம் தேவேசாய | நம: | |
| ஓம் நீதிமதே | நம: | | ஓம் பகவதே | நம: | |
| | | | ஓம் பக்தவத்ஸலாய | நம: | 108 |

ஸ்ரீ பூர்ணாபுஷ்கலாம்பா சமேத ஸ்ரீ ஹரிஹர புத்ரஸ் வாமிநே நம:
நாநாவித பரிமளபத்ர புஷ்பாணி ஸமர்ப்பயாமி

h h h h h

**பின் குங்கும அர்ச்சனை அம்பாளுக்கு செய்யவும்**

## ஸ்ரீ லலிதா அஷ்டோத்ர சத நாமாவளி

ஓங்கார பஞ்ஜரசுகீம் உபநிஷத் உத்யானகேளி கலகண்டீம்|
ஆகமவி பினமயூரிம் ஆர்யாம் அந்தர்வி பாவயே கௌரீம்||

| | |
|---|---|
| ரஜதாசல ஸ்ருங்கார மத்யஸ்தாயை \| | நமோ நம: |
| ஹிமாசல மஹாவம்ச பாவனாயை \| | நமோ நம: |
| சங்கரார்த்தாங்க ஸௌந்தர்ய சரீராயை \| | நமோ நம: |
| லஸந் மரகத ஸ்வச்ச விக்ரஹாயை \|\| | நமோ நம: |
| மஹாதிசய ஸௌந்தர்ய லாவண்யாயை \| | நமோ நம: |
| சசாங்க சேகர ப்ராண வல்லபாயை \|\| | நமோ நம: |
| ஸதா பஞ்சதசாத்மைக்ய ஸ்வரூபாயை \| | நமோ நம: |
| வஜ்ர மாணிக்ய கடக கிரீடாயை \|\| | நமோ நம: |
| கஸ்தூரீ திலகோத்பாஸி நிடிலாயை \| | நமோ நம: |
| பஸ்ம ரேகாங்கித லஸன் மஸ்தகாயை \|\| | நமோ நம: |
| விகாசம்போருஹ தல லோசனாயை \| | நமோ நம: |
| சரச்சாம்பேய புஷ்பாப நாஸிகாயை \|\| | நமோ நம: |
| லஸத் கனக தாடங்க யுகலாயை \| | நமோ நம: |
| மணி தர்ப்பண ஸங்காச கபோலாயை \|\| | நமோ நம: |
| தாம்பூல பூரித ஸ்மேர வதனாயை \|\| | நமோ நம: |
| ஸுபக்வ தாடிமீ பீஜ ரதனாயை \| | நமோ நம: |
| கம்பு பூக ஸமச்சாய கந்தராயை \|\| | நமோ நம: |
| ஸ்தூல முக்தாஃபலோதார ஸுஹாராயை \| | நமோ நம: |
| கிரீச பத்த மாங்கல்ய மங்கலாயை \|\| | நமோ நம: |
| பத்ம பாசாங்குச லஸத் கராப்ஜாயை \| | நமோ நம: |
| பத்ம கைரவ மந்தார ஸுமாலின்யை \|\| | நமோ நம: |
| ஸுவர்ண கும்ப யுக்மாப ஸுகுசாயை \| | நமோ நம: |
| ரமணீய சதுர்பாஹு ஸம்யுக்தாயை \|\| | நமோ நம: |
| கனகாங்கத கேயூர பூஷிதாயை \| | நமோ நம: |

| | |
|---|---|
| ப்ருஹத் ஸௌவர்ண ஸௌந்தர்ய வஸனாயை \| | நமோ நம: |
| பிருஹந்நிதம்ப விலஸத் ரஸனாயை \|\| | நமோ நம: |
| ஸௌபாக்ய ஜாத ஸ்ருங்கார மத்யமாயை \| | நமோ நம: |
| திவ்ய பூஷண ஸந்தோஹ ரஞ்ஜிதாயை \|\| | நமோ நம: |
| பாரிஜாத குணாதிக்ய பதாப்ஜாயை \| | நமோ நம: |
| ஸுபத்மராக ஸங்காச சரணாயை \|\| | நமோ நம: |
| காமகோடி மஹா பத்ம பீடஸ்தாயை \| | நமோ நம: |
| ஸ்ரீ கண்ட நேத்ர குமுத சந்த்ரிகாயை \|\| | நமோ நம: |
| ஸசாமர ரமா வாணீ வீஜிதாயை \| | நமோ நம: |
| பக்த ரக்ஷண தாக்ஷிண்ய கடாக்ஷாயை \|\| | நமோ நம: |
| பூதேசாலிங்கனோத் பூத புளகாங்க்யை \| | நமோ நம: |
| அனங்க ஜனகா பாங்க வீக்ஷணாயை \|\| | நமோ நம: |
| பிரம்மோ பேந்த்ர சிரோரத்ன ரஞ்ஜிதாயை \| | நமோ நம: |
| சசீமுக்யா மரவதூ ஸேவிதாயை \|\| | நமோ நம: |
| லீலாகல்பித பிருமாண்ட மண்டலாயை \| | நமோ நம: |
| அம்ருதாதி மஹாசக்தி ஸம்வ்ருதாயை \|\| | நமோ நம: |
| ஏகாத பத்ர ஸாம்ராஜ்ய தாயிகாயை \| | |
| ஸனகாதி ஸமாராத்ய பாதுகாயை \|\| | நமோ நம: |
| தேவர்ஷிஸம்ஸ் தூயமான வைபவாயை \| | நமோ நம: |
| கலசோத்பவ துர்வாஸ பூஜிதாயை \|\| | நமோ நம: |
| மத்தேபவக்த்ர ஷட்வக்த்ர வத்ஸலாயை \| | நமோ நம: |
| சக்ரராஜ மஹாயந்த்ர மத்ய வர்த்யை \|\| | நமோ நம: |
| சிதக்னிகுண்ட ஸம்பூத ஸுதேஹாயை \| | நமோ நம: |
| சசாங்க கண்ட ஸம்யுக்த மகுடாயை \|\| | நமோ நம: |
| மத்தஹம்ஸ வதூ மந்தகமனாயை \| | நமோ நம: |
| வந்தாரு ஜன ஸந்தோஹ வந்திதாயை \|\| | நமோ நம: |
| அந்தர்முக ஜனானந்தஃ பலதாயை \| | நமோ நம: |
| பதிவ்ரதாங்கனா பீஷ்டஃ பலதாயை \|\| | நமோ நம: |
| அவ்யாஜ கருணாபூர பூரிதாயை \| | நமோ நம: |
| நிரந்தர சிதானந்த ஸம்யுக்தாயை \|\| | நமோ நம: |
| ஸஹஸ்ர ஸுர்ய ஸம்யுக்த ப்ரகாஸாயை \| | நமோ நம: |
| ரத்ன சிந்தாமணி க்ருஹ மத்யஸ்தாயை \|\| | நமோ நம: |
| ஹானி வ்ருத்தி குணாதிக்ய ரஹிதாயை \| | நமோ நம: |
| மஹாபத்மாடவீ மத்ய நிவாஸாயை \|\| | நமோ நம: |
| ஜாக்ரத் ஸ்வப்ன ஸுஷுப்தீனாம் ஸாக்ஷிபூத்யை \| | நமோ நம: |
| மஹாதாபௌக பாபானாம் விநாசின்யை \|\| | நமோ நம: |
| துஷ்டபீதி மஹாபீதி பஞ்ஜனாயை \| | நமோ நம: |
| ஸமஸ்த தேவ தனுஜ ப்ரேரகாயை \|\| | நமோ நம: |
| ஸமஸ்த ஸ்ருதாயம் போஜ நிலயாயை \| | நமோ நம: |
| அனாஹத மஹாபத்ம மந்திராயை \|\| | நமோ நம: |
| ஸஹஸ்ரார ஸரோ ஜாத வாஸிதாயை \| | நமோ நம: |
| புனராவ்ருத்தி ரஹித புரஸ்தாயை \|\| | நமோ நம: |
| வாணீ காயத்ரீ ஸாவித்ரீ ஸந்நுதாயை \| | நமோ நம: |
| நீலா–ரமா–பூ ஸம்பூஜ்ய பதாப்ஜாயை \|\| | நமோ நம: |
| லோபா முத்ரார்ச்சித ஸ்ரீ மச்சரணாயை \| | நமோ நம: |
| ஸஹஸ்ர ரதி சௌந்தர்ய சரீராயை \|\| | நமோ நம: |
| பாவனாமாத்ர ஸந்துஷ்ட ஹ்ருதயாயை \| | நமோ நம: |
| நத ஸம்பூர்ண விக்ஞான ஸித்திதாயை \|\| | நமோ நம: |

த்ரிலோசன க்ருதோல்லாஸ பலதாயை௺ | நமோ நம:
ஸ்ரீ ஸுதாப்தி மணத்வீப மத்யகாயை || நமோ நம:
தக்ஷாத்வர வினிர்ப்பேத ஸாதனாயை | நமோ நம:
ஸ்ரீநாத ஸோதரீ பூத சோபிதாயை || நமோ நம:
சந்த்ரசேகர பக்தார்த்தி பஞ்ஜனாயை | நமோ நம:
ஸர்வோபாதி வினிர்முக்த சைதன்யாயை || நமோ நம:
நாமாபாராயணா பீஷ்ட பலதாயை | நமோ நம:
ஸ்ருஷ்டி ஸ்திதி திரோதான ஸங்கல்பாயை || நமோ நம:
ஸ்ரீஷோட சாக்ஷரீ மந்த்ர மத்யகாயை | நமோ நம:
அனாத்யந்த ஸ்வயம்பூத திவ்யமூர்த்யை || நமோ நம:
பக்த ஹம்ஸ வதீமுக்ய நியோகாயை | நமோ நம:
மாத்ரு மண்டல ஸம்யுக்த லலிதாயை || நமோ நம:
பண்டதைத்ய மஹாஸத்ம நாசனாயை |
க்ரூர பண்ட சிரச்சேத நிபுணாயை || நமோ நம:
தராச்யுத ஸுராதீஸ ஸுகதாயை | நமோ நம:
சண்டமுண்ட நிஸும்பாதி கண்டனாயை || நமோ நம:
ரக்தாக்ஷ ரக்தஜிஹ்வாதி சிக்ஷணாயை | நமோ நம:
மஹிஷாஸுர தோர்வீர்ய நிக்ரஹாயை || நமோ நம:
அப்ரகேச மஹோத்ஸாஹ காரணாயை | நமோ நம:
மஹேசயுக்த நடன தத்பராயை || நமோ நம:
நிஜ பர்த்ரு முகாம்போஜ சிந்தனாயை | நமோ நம:
வ்ருஷபத்வஜ விக்ஞான தபஸ்ஸிதத்யை || நமோ நம:
ஜன்மமிருத்யு ஜரா ரோக பஞ்ஜனாயை | நமோ நம:
வீரக்தி பக்தி விக்ஜான ஸித்திதாயை || நமோ நம:
காம க்ரோதாதி ஷட்வர்க நாசனாயை | நமோ நம:
ராஜராஜார்ச் சிதபத ஸரோஜாயை || நமோ நம:
ஸர்வ வேதாந்த ஸித்தாந்த ஸுதத்வாயை | நமோ நம:
ஸ்ரீ வீரபக்த விக்ஞான நிதனாயை || நமோ நம:
அசேஷ துஷ்டதனுஜ ஸீதனாயை | நமோ நம:
ஸாஷாத் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி மனோஜ்ஞாயை || நமோ நம:
ஹயமேதாக்ர ஸம்பூஜ்ய மஹிமாயை | நமோ நம:
தக்ஷப்ராஜபதிஸுத வேஷாட் யாயை || நமோ நம:
ஸும பாணேக்ஷு கோதண்ட மண்டிதாயை | நமோ நம:
நித்ய யௌவன மாங்கல்ய மங்களாயை || நமோ நம:
மஹாதேவ ஸமாயுக்த மஹாதேவ்யை | நமோ நம:
சதுர்விம்ஸதி–தத்வை–ஸ்வரூபாயை || நமோ நம:
ஆதி பராசக்தி தேவ்யை நமோ நம:
நானாவித (குங்குமார்ச்சனானி) பத்ரபுஷ்பாணி பூஜயாமி.

பின்பு தூப தீபம் மஹா நைவேத்யம் காட்டி நாமாவளிகளை ஆரம்பிக்கலாம் அல்லது பஜனையை முடித்துவிட்டு (நேரத்தைப் பொறுத்து) கடைசியில் தூப, தீபம் மஹா நைவேத்யம், பானகம், பழங்கள் நைவேத்யம் பண்ணி கற்பூர ஹாரத்தி காட்டி பூஜயை முடிக்க வேண்டும்.

ஸத்குரு நாதனே.................. சரணம் ஐயப்பா
குருர்ப்ரம்மா குருர்விஷ்ணு குருதேவோ மஹேச்வர:|
குருஸ்ஸாக்ஷாத் பரப்ருஹ்ம தஸ்மை ஸ்ரீ குருவே நம:||

1. மணி குருநாதா சரணமய்யப்பா
எங்கள் குருநாதனே சரணமய்யப்பா
நல்வழி தந்திடுவார் சரணமய்யப்பா
எங்கள் நடமாடும் தெய்வமே சரணமய்யப்பா (மணி)

ஐயன் சரணமதில் மகிழும் நாதனே—ஈசன்
திருவருளை பெற்றவராம் சரணமய்யப்பா
அன்புள்ளம் கொண்டவராம் சரணமய்யப்பா—எங்களை
ஆதரிக்கும் தெய்வமாம் சரணமய்யப்பா (மணி)

இல்லை இல்லை இல்லை என்று ஏங்கும் மாந்தரின்
உள்ளம தனைக்குளிர வைப்பார் சரணமய்யப்பா
பிணியகல வழிவகுக்கும் எங்கள் குருநாதன்—ஞான
பணிபுரிய அருள் புரிவார் சரணமய்யப்பா (மணி)

வினையறுத்து பவமளிக்கும் எங்கள் குருநாதன்
நம்மைத் துணை இருந்து காத்திடுவார் சரணமய்யப்பா
பக்தி முக்தி நாயகனே சரணமய்யப்பா
பக்தர்களை காத்திடுவார் சரணமய்யப்பா (மணி)

தவசரணம் மமசரணம் சரணமய்யப்பா
மமசரணம் பஜசரணம் சரணமய்யப்பா
பஜசரணம் குருசரணம் சரணமய்யப்பா
சரணம்சரணம் சரணம்சரணம் சரணமய்யப்பா (மணி)

★★

2. குரு மௌளிம்ஹணே பஜேபவந்தம்
சரணாகத சிந்தாமணே (குரு)

கல்யாணம் மயி கலயமுனீந்த்ர
துல்யவிபவ போதேந்த்ர யதீந்த்ர (குரு)

அங்கித ஹரி நாம வாக பிராம
சசாங்கவதன ஸ்ரீவெங்கடராம
கண்டிதமானஸ சத்ருஸ்தோம
பண்டித பூஜித கோதண்டராம (குரு)

ஸாது ஜனச்லாகித ஸத்கீர்த்தே
ஸ்ரீதர வேங்கட குலகுரு மூர்த்தே
நாம ப்ரஹ்ம பராயணஸிம்ஹ
பாமர ஜன பாவன நரஸிம்ஹ (குரு)

★★

3. சிந்தனை செய்குவோம் ஸ்ரீ குரு நாதனை
சந்ததம் அவரடி பணிவோமே – நாமே (சிந்தனை)

தேஜோமயமான ஜோதி ஸ்வரூபனை
தீவினை தீர்த்திடும் காந்த கிரீசனை (சிந்தனை)

அண்டமெல்லாம் போற்றும் கண்ணனே ஜகத்குரு
சின்மயவடிவாகும் சிவமே குல குரு
ஷண்மத ஸ்தாபக சங்கர சத் குரு
சங்கர நாராயணன் மருமகனே நம் குரு (சிந்தனை)

ஐயப்பனின் தாஸன் குரு சுப்ரமண்யன்
பக்தர்களின் தாஸன் பிரபு நீலகண்டன்
ஸாது ஜனப்ரிய குரு சிவராமன்
விச்வமெல்லாம் போற்றும் வீரமணி தாஸன் (சிந்தனை)

★★

4. குருநாதா குருநாதா ஸத்குருநாதா குருநாதா (குரு)
யார் தருவார் எனக்கு அருளினால் அனுபவம்
ஆண்டவனே குருநாதா
பேரறிவாகிய ப்ரம்ம நிலைகண்டு
பேசறியேன் குருநாதா (குரு)
அந்தகன் போலவே அலைந்து திரிந்த என்னை
ஆண்டவனே குருநாதா
சிந்தை தெளிந்தெனக்கு சிவபதம் அருளிய
சின்மயனே குருநாதா (குரு)
காஸம் படர்ந்த கண்ணை கடுவெளியாக்கிவைத்த
காரணனே குருநாதா
பாசமறுத்து என்னை பதிதனில் நாட்டுவித்த
பண்டிதனே குருநாதா (குரு)
மரமேறி கைவிட்ட மானிடர் போலே நான்
மாண்டு பிறவாமல் குருநாதா
வரமெனக் கீந்ததும் தேவரீரல்லவோ
தேசிகனே குருநாதா (குரு)

★★

5. ஸச்சிதானந்தகுரு ஸச்சிதானந்த
ஸச்சிதானந்தகுரு ஸச்சிதானந்த
ஓம்குரு ஜயகுரு ஸச்சிதானந்த
ஸ்ரீகுரு சிவகுரு ஸச்சிதானந்த
அபிநவ வித்யாகுரு ஸச்சிதானந்த
ஆதிசங்கரகுரு ஸச்சிதானந்த
காமகோடி ஜகத்குரு ஸச்சிதானந்த
சந்த்ரமௌளி ஸத்குரு ஸச்சிதானந்த
சிருங்கேரி ஜகத்குரு ஸச்சிதானந்த
சாரதா பீடகுரு ஸச்சிதானந்த
பரமதயாளகுரு ஸச்சிதானந்த
பரமஹம்ஸ குரு ஸச்சிதானந்த
நிச்சயமாய் ஹரியைக் காட்டும் ஸச்சிதானந்த
உச்சியில் வைத்தாடிடுவோம் ஸச்சிதானந்த

★★

6. சங்கர குரோ ஜயசங்கரகுரோ
சங்கர பகவத் பாத சங்கரகுரோ
சங்கரகுரோ ஜய சங்கரகுரோ
ஷண்மத ஸ்தாபக சங்கரகுரோ
ஜகத்குரோ ஜய ஜகத்குரோ
காமகோடி பீடவாஸின் ஜகத்குரோ
ச்ருங்கேரி பீடவாஸின் ஜகத்குரோ
அபார மஹிமா குருநாதா
க்ருபா ஸாகரா குருநாதா
அனுதினம் வந்தே குருநாதா – எம்மை

அனுக்ரஹம் செய்வாய் குருநாதா
ஜய ஜய சங்கர ஹர ஹர சங்கர (சங்கர)

★★

7. அருள்வழி காட்டும் குருநாதா – உந்தன்
திருவடி பணிந்தோம் குருநாதா (அருள்)

குருநாதன் சரணங்கள் துணையாகுமே – அவன்
திருநாமம் தெவிட்டாத அமுதாகுமே. (அருள்)

நல்லன செய்திடும் குருநாதா – எனக்கு
நல்வழி காட்டும் குருநாதா (அருள்)

மனஇருள் நீக்கும் குருநாதா – உன்
மலரடி பணிந்தோம் குருநாதா (அருள்)

★★

8. எங்கள் குருநாதனே சரணமய்யப்பா
எங்கள் குருநாதனே ”

சத்தியத்தின் உத்தமரே ”
நித்தியமும் உனைத்தொழுதோம் ”
துதிப்போர்க்கு துணையானாய் ”
துயரங்களை போக்கிடுவாய் ” (எங்கள்)

சாதிசமய பேதமெல்லாம் ”
சரணம் போட்டு பறக்குதையா ”
சக்தி பூஜை கொண்டவரே ”
சங்கடங்கள் தீர்ப்பவரே ” (எங்கள்)

பரமனின் திருமகனே ”
மணியாக வந்தவரே ”
கருணையுள்ளம் கொண்டவரே ”
காந்தம் போல் இருப்பவரே ” (எங்கள்)

முடிகள் தாங்கி வருபவர்க்கே ”
முடிவில் நம்மை காத்திடுவார் ”
மகரஜோதி காணவைத்தாய் ”
மானிடராய் வாழவைத்தாய் ” (எங்கள்)

சபரிமலை தெய்வமப்பா ”
சற்குருவாய் வந்தவரே ”
சஞ்சலங்கள் தீர்க்கவரும் ”
சுவாமியே சரணமப்பா ” (எங்கள்)

h h h h h

கன்னி மூல கணபதி பகவானே...................... சரணம் ஐயப்பா

1. ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை
இந்தின் இளம் பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினை
புந்தியில் வைத்தடி போற்றுவோம் யாமே.

2. வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது – பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கையான் பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு.

3. பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும் இவை
நாலும் கலந்துனக்கு நான் தருவேன் கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே! நீ எனக்குச்
சங்கத் தமிழ் மூன்றும் தா.

4. ஆனை முகனே ஆதிமுத லானவனே
பானை வயிற்றோனே பக்தர்களை காப்பவனே
மோனை பொருளே மூத்தவனே கணேசா ஏனென்று
கேளுமையா இந்த ஏழை முகம் பாருமய்யா.

5. உச்சிமலை தனிலே ஒய்யாரமா யிருக்கும்
அச்சமதை தவிர்த்த ஆறுமுகன் முதல்வா
இச்ஜெக மதில் யானுன் கவிபாட
அக்ஷணமே வந்தருள்வாய் நந்திமுகன் நாயகனே
கங்கணமும் பொற்சதங்கை கையிலணி மோதிரமும்
கிங்கிணி யென ஒலிக்க கிருபை செய்ய வேணுமய்யா
தங்களணி கங்கைசடை சிவனருளும் குமரா
எங்கள் பணியேற்றிடுவாய் ஏகாந்த நாயகனே.

h h h h h

1. கைத்தல நிறைகனி யப்பமோ டவல்பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணி
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவ
கற்பக மெனவினை கடிதேகும்

மத்தமு மதியமும் வைத்திடு மரன்மகன்
மற்பொருள் திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே

முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட வெழுதிய முதல்வோனே
முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா

அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடு
அப்புன மதனிடை யிபமாகி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமானே

2. ப்ரபோ கணபதே பரிபூரண
வாழ் வருள் வாயே (ப்ரபோ)

சார்ந்து வணங்கி துதிபாடி ஆடி உந்தன்
சன்னதி சரணடைந் தோமே
சாந்த சித்த சௌபாக்கியம் யாவையும்
தந்தருள் ஸத்குரு நீயே (ப்ரபோ)

ஆதிமூல கணநாத கஜானன
அற்புத தவள ஸ்வரூபா
தேவதேவ ஜெய விஜய வினாயக (தேவ)
சின்மய பரசிவ தீபா (சிவ சின்மய) (ப்ரபோ)

தேடித்தேடி எங்கோ ஓடுகின்றார் – உன்னை
தேடிக்கண்டு கொள்ள லாமே (உள்ளே தேடி)
கோடிக்கோடி மதயானைகள் பணிசெய்ய (பலகோடி)
குன்றென விளங்கும் பெம்மானே (குண குன்றென) (ப்ரபோ)

ஞான வைராக்கிய விசாரதாள ஸ்வர
ராக லய நடந பாதா
நாம பஜனகுண கீர்த்தன நவவித (நாம)
நாயக ஜெய ஜெகந் நாதா (அதி நாயக) (ப்ரபோ)

பார்வதி பால அபார பாரவர
பரமபக்த பவ தரணா
பக்தஜன ஸூமுக ப்ரணவ விநாயக (பக்த)
பாவன பரிமள சரணா (பவ பாவன) (ப்ரபோ)

3. வெள்ளிக் கொம்பன் வினாயகனே
வினைகள் தீர்க்கும் ஐங்கரனே
அன்னை பராசக்தி அருந்தவப் புதல்வா
ஆனை முகத்துவி னாயகனே (வெள்ளி)

அகமும் புறமும் இருப்பவனே
அடியார்கள் துயர் துடைப்பவனே
ஆற்றோரத்திலும் குளக்கரை தனிலும்
அமர்ந்தர சாட்சி புரிபவனே (வெள்ளி)

ஓங்காரப் பொருளின் தத்துவனே
உள்ளத்தில் குடி கொண்டவனே
உன்புகழ் பாடும் பக்தர்கள் குறையை
உடனடியாகத் தீர்ப்பவனே (வெள்ளி)

பக்தர்கள் நாங்கள் ஒன்றுகூடி
பாத மலர்களை பணிகின்றோம் – இங்கு
எழுந் தருள வேண்டு மய்யா – எங்கள்
குறைகளைத் தீரு மய்யா! (வெள்ளி)

4. பிள்ளையார் பிள்ளையார் பெருமை வாய்ந்த பிள்ளையார்
பிள்ளையார் பிள்ளையார் பெருமை வாய்ந்த பிள்ளையார் (பிள்ளை)

ஆற்றங்கரை ஓரத்திலே அரசமரத்து நிழலிலே

வீற்றிருக்கும் பிள்ளையார் வினைகள்தீர்க்கும் பிள்ளையார் (பிள்ளை)

ஆறுமுக வேலவனின் அண்ணனான பிள்ளையார்
நேருந்துன்பம் யாவையுமே நீக்கிவைக்கும் பிள்ளையார் (பிள்ளை)

மஞ்சளிலே செய்திடினும் மண்ணினாலே செய்திடினும்
ஐந்தெழுத்து மந்திரத்தை நெஞ்சில்காட்டும் பிள்ளையார் (பிள்ளை)

அவல்பொரி கடலையும் அரிசிகொழுக் கட்டையும்
கவலையின்றி தின்னுவார் கண்ணைமூடி தூங்குவார் (பிள்ளை)

கலியுகத்தின் விந்தைகளை காணவேண்டி அனுதினம்
எலியின்மீது ஏறியே இஷ்டம்போலச் சுற்றுவார் (பிள்ளை)

சக்தியின் மைந்தனாம் சாத்திரத்தின் முதல்வனாம்
சகலத்திற்கும் மூலனாம், சக்திவாய்ந்த பிள்ளையார் (பிள்ளை)

5. அன்னை தந்தையை வலம்வந்தாய்
அருட்கனி யதனைக் கரம்கொண்டாய்
அன்னை அறிந்த நாயகனே – இந்த
தரணியைக் காப்பாய் விநாயகனே (அன்னை)

நன்னீர்க் கரையில் மண்கொண்டு
நறுங்கொடி அதனில் கண்கொண்டு
உன்உரு அமைப்போம் நாயகனே – எங்கள்
ஊழ்வினை அகற்று விநாயகனே (அன்னை)

பூவில் பலவகை இருக்கையிலே – நீ
பிரியம் வைத்தாய் எருக்கையிலே
நாவால் துதிப்போம் நாயகனே – பல
நன்மைகள் தருவாய் விநாயகனே (அன்னை)

அப்பம் அவல்பொரி எள்ளுருண்டை – நீ
அதிகமாய் விரும்பும் கொழுக்கட்டை
முப்பழம் படைப்போம் நாயகனே – நீ
மூஷிகத் துடன்வா விநாயகனே (அன்னை)

படிக்கும் அகவல் குரல்கேட்டுப்
பரிவுடன் அவரவர் நிலைபார்த்துக்
கொடுப்பாய் நல்லருள் நாயகனே – கரம்
கூப்பித் தொழுவோம் விநாயகனே. (அன்னை)

6. அப்பளம் உளுந்தவடை பொங்கலைப்பாரு – நம்ம
கன்னிமூல கணபதிக்கு பூஜையைப்பாரு (அப்பளம்)
கிழக்குமுகம் பார்த்திருக்கும் தொந்தியைப்பாரு – நம்ம
கீர்த்தியான கணபதிக்கு பூஜையைப்பாரு (அப்பளம்)

மேற்குமுகம் பார்த்திருக்கும் தொந்தியைப்பாரு – நம்ம
மேன்மையான கணபதிக்கு பூஜையைப்பாரு (அப்பளம்)

வடக்குமுகம் பார்த்திருக்கும் தொந்தியைப்பாரு – நம்மை

வாழவைத்த தெய்வத்துக்கு பூஜையைப்பாரு (அப்பளம்)

அரச மரத்தைச் சுற்றிநாம அவரை வேண்டணும் – அவர்
யாருக்காக காத்திருக்கார் தெரியலைப்பாரு (அப்பளம்)

7. கணேச சரணம் சரணம் கணேசா
கணேச சரணம் சரணம் கணேசா (கணேச)

மூலமுதற் பொருள் சரணம் கணேசா
மூத்தவன் நீயே சரணம் கணேசா
பார்வதி பாலா சரணம் கணேசா
மாலவன் மருகா சரணம் கணேசா (கணேச)

சக்தியின் மைந்தா சரணம் கணேசா
சகலமும் அருள்வாய் சரணம் கணேசா
யானை முகவா சரணம் கணேசா
நானுன்னைப் பணிந்தேன் சரணம் கணேசா (கணேச)

கானில் வாழும் சரணம் கணேசா
ஞாலம் போற்றும் சரணம் கணேசா
என்பிழை பொறுப்பாய் சரணம் கணேசா
ஈஸ்வரன் மைந்தா சரணம் கணேசா (கணேச)

உன்னருள் இன்றி சரணம் கணேசா
உலகம் மகிழுமோ சரணம் கணேசா
கனிதனைப் பெற்றிட சரணம் கணேசா
கணமதில் ஞாலமாய் சரணம் கணேசா (கணேச)

கனிவுடன் தாயை சரணம் கணேசா
தந்தையை சுற்றியே சரணம் கணேசா
கனிதனைப் பெற்றவா சரணம் கணேசா
கன்னி மூலத்தவா சரணம் கணேசா (கணேச)

இனியெனைக் காத்திட சரணம் கணேசா
தடையென மூலவா சரணம் கணேசா (கணேச)

8. வருவாய் விரைவாய் வரம்எனக் கருள்வாய்
மூஷிக வாகன விக் னேஸ்ஸா
சக்தியின் மைந்தா சண்முக சோதரா
சங்கடம் தீர்ப்பாய் சர் வேஸ்ஸா (வருவாய்)

ஞானை முகவா பேழை வயிறா
பிழைகள் பொறுப்பாய் விக் னேஸ்ஸா
பெருச்சாளி வாகனா பிள்ளையா ரப்பா
பிணிகள் தீர்ப்பாய் சர் வேஸ்ஸா (வருவாய்)

ஐந்து கரவா அன்பரின் தலைவா
அனுக்கிரகம் புரிவாய் விக் னேஸ்ஸா
கணங்களின் தலைவா கணபதி ராஜா
காத்திட வருவாய் சர் வேஸ்ஸா (வருவாய்)

9. பாஹி பாஹி கஜானன, பார்வதி நந்தன கஜானன
பாஹி பாஹி கஜானன, பார்வதி நந்தன கஜானன (பாஹி)

மூஷிக வாகன கஜானன, மோதக ஹஸ்த கஜானன
சாமரகர்ண கஜானன, விளம்பித சூத்ர கஜானன (பாஹி)

வாமன ரூப கஜானன, மகேஸ்வர புத்ர கஜானன
பக்த ஜனப்பிரியா கஜானன, பார்வதி தனயா கஜானன (பாஹி)

யானை முகவா கஜானன, பேழை வயிற்றவ கஜானன
விக்ன விநாயக கஜானன, பாத நமஸ்தே கஜானன (பாஹி)

10. சித்திபுத்தி நாயகனே சிங்கார கணபதியே
முக்திதரும் மூலவனே மூஷிக வாகனனே (சித்தி)

வழியிலே நீயிருந்து வழிவிடும் விநாயகனே
மொழிகளை எழுதயிலே முன்னேயே சுழியாவாய் (சித்தி)

அரசமரம்உன்வீடு ஆலயங்கள் தனிவீடு
கரங்கள் ஐந்துடனே காத்திட வந்திடுவாய் (சித்தி)

மாம்பழம் பெற்றவனே மனக்கவலை தீர்ப்பவனே
ஓம்மெனும் மந்திரத்தின் ஒலிவடிவம் ஆனவனே (சித்தி)

சக்திஉமை பாலனே சண்முக சோதரனே
கொம்பொடித்து எழுதிடுவாய் தும்பிக்கை காத்திடுமே (சித்தி)

காரியங்கள் தொடங்கையிலே கையெடுத்து கும்பிடுவோம்
ஆயிரம் வெற்றிகளை அள்ளியே தந்திடுவாய் (சித்தி)

11. விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான்
விநாயகனே விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாய்
தன்மையினால் கண்ணிற் பணிமின் கனிந்து

விநாயகனே வினை தீர்ப்பவனே
வேழ முகத்தோனே ஞான முதல்வனே (விநாயகனே)

குணா நிதியே குருவே சரணம்
குறைகள் களைய இதுவே தருணம் (விநாயகனே)

உமா பதியே உலகம் என்றாய்
ஒருசுற்றினிலே வலமும் வந்தாய் (உமா)
கணநா யகனே மாங்கனியை உண்டாய்
கதிர் வேலவனின் கருத்தில் நின்றாய் (விநாயகனே)

12. கணபதியே வருவாய் அருள்வாய்
கணபதியே வருவாய் அருள்வாய்
கணபதியே வருவாய்......... (கணபதி)

மனம் மொழி மெய்யாலே தினம் உன்னை துதிக்க

மங்கள இசை எந்தன் நாவினில் உதிக்க (கணபதி)

ஏழு சுரங்களில் இன்னிசை பாட
எங்கணும் இன்பம் பொங்கியே ஓட
தாளமும் பாவமும் ததும்பிக் கூத்தாட
தரணியில் யாவரும் புகழ்ந்து கொண்டாட (கணபதி)

தூக்கிய துதிக்கை வாழ்த்துக்கள் அளிக்க
தொனியும் மணியென கணீரென் றொலிக்க
ஊக்குக நல்லிசை உள்ளம் களிக்க
உண்மை ஞானம் செல்வங் கொழிக்க (கணபதி)

13. ஆதிமுதலாகி ஆனந்த வடிவாகி
நாத ஒலியாகி, நம்பிக்கை பொருளாகி
வேதம் புகழும், எங்கள் விநாயகப்பெருமானே – உன்
பாதம் பணிந்தோம், எங்கள் பாட்டுக்கு புகழ் கூட்டு

காரியங்கள் நிறைவேற்றும் கணபதியே
சிவனார் மகனே குண நிதியே (காரியங்கள்)

அன்னையின் வடிவாக பெண்கேட்டு அடம் பிடித்தாய்
அப்பனே உலகென்று வலம்வந்து புகழ்படைத்தாய் (அன்னை)

தம்பிக்கு உடன்இருந்து வள்ளியை மணம்முடித்தாய் (தம்பி)
தர்மத்தின் கீதைதன்னை தமிழ்எனும் மொழியில்
நலம் பெருகும் வகையில் பூமிக்கும், சாமிக்கும் நியாயத்தை வழங்கியே
(காரியங்கள்)

காக்கையின் உருவாகி அகத்தியன் புரு அமர்ந்தாய்
கமண்டலம் தனைசாய்த்து காவிரி ஓடவிட்டாய் (காக்கை)
சூரபதுமன்கொண்ட ஆணவம் சுட்டெரித்தாய் (சூர)
சூட்சமமாக நின்று சுகங்களை மலரும் யுகங்களில்
வழங்கும், ஆனந்த பேரின்ப, ஞானத்தின் தலைவனே (காரியங்கள்)

14. கணநாதன் புகழ்பாடும் கீதம் – அந்த
கணபதி அருள்தானே இசைக்கான நாதம் (கண)

உயிராலே இசைமீட்டி ஓம்எனும் சுரம்காட்டி
மயிலேச கணபதியை தினம் பாடினேன் (உயி)
அயராத மனம்கொண்டு அதன்மூலம் பகைவென்று
புவிமீது உனைகொண்டு புகழ் தேடினேன் (அய) (கண)

பக்திஎன்னும் விளக்கில் வரும் சக்திஎன்னும் ஒளியே (பக்தி)
இசைவித்தை அத்தனையும் நித்தம் கத்து தரும்
உனக்கும் எனக்கும் மணக்கும் உறவினை (கண)

வடிவேலன் விளையாட மயிலொன்றை பரிசாக்கி
இதமாக இளயோனின் மனம் தேற்றினாய் (வடி)
உமையாளும் சிவனாரும் உறவாட சுகம்தேட

மணநாளை உருவாக்கி நீ காட்டினாய் (உமை) (கண)
கற்ற வித்தை வளர, அதில் வெற்றி வந்து மலர (கற்ற)

உனை பற்றிகொண்ட இனம் சுற்றி வந்து தினம்
வணங்கும், இணங்கும், நினைக்கும் நினைவினை (கண)

15. இசைமீட்கும் கைகளுக்குள் விளையாடும் கீதம்
இதயத்தை தூய்மை செய்யும் ஓம்எனும் நாதம் (இசை)

ஞான கருவூலம் கணபதி பாதம் (ஞான)
நாளும் மனம்யாவும் சுகம் வந்து மோதும் (நாளும்) (இசை)

மாசிவரும் செவ்வாய் விரதத்தை ஏற்றால்
பூஜைகள் நீசெய்து பூஅள்ளி போட்டால் (மாசி)
ஆசிகள் வழங்கி அருள்கொண்டு பார்ப்பான் (ஆசி)
ஆனைமுகத்தானே புகழ்யாவும் சேர்ப்பான் (இசை)

ஆண்டி பிறப்பெடுத்த தக்கனைமாற்றி
ஆனைவடிவில் வந்து மாலையும் சூட்டி (ஆண்டி)
வேண்டிய வரம்தந்து ஆனந்தம் கொண்டாய்
வாழ்வில் அவரோடு துணையாக நின்றாய் (வேண்டிய) (இசை)

16. தண்ணீர் குளத்தருகே சந்யாசி போலிருக்கும்
ஞான திருமகனே கணபதியே (தண்ணீர்)
கனியே, மணியே, கால குருமுனியே
கனிவுடன் எனைபார்த்து தருவாயே அருள்மணியே (தண்ணீர்)

சிவசக்தி உலகென்று முடிவாகவே – மாங்
கனி ஒன்றை அடைந்தாய் நீ கதையாகவே (சிவ)
அறிவுக்கு பலம்யாவும் தலைதாழ்த்தவே (அறி) – உன்
அவதாரம் புகழ்பாட வழிகாட்டியே (உன்) (தண்ணீர்)

அமராபதி வாழும் தேவேந்திரன் – செல்வ
அழகாபுரி ஆளும் செல்வேந்திரன் (அமரா)
பழம்கொள்ள இவர்செய்த பெரும்தந்திரம் (பழம்) – இங்கே
கணபதி உனைசொன்ன இருமந்திரம் (இங்கே) (தண்ணீர்)

17. ஓரானை கன்றை உமையாள் திருமகனை
பேரானை கற்பகத்தை பேணினால் – வாராத
புத்திவரும் வித்தைவரும் புத்திர சம்பத்துவரும்
சக்தி தரும் சித்திதருந் தான்

சுழி போட்டு செயலெதுவும் தொடங்கு – பிள்ளையார் (சுழி)
அதன் துணையாலே சுகம்கூடும் தொடர்ந்து (அதன்)
அழியாத பெருஞ்செல்வம் அவனே – தில்லை
ஆனந்த கூத்தனின் மகனே (அழி) (பிள்ளையார்)

வழியின்றி வேலனவன் திகைத்தான் – குற
வள்ளி யவள்கை பிடிக்க துடித்தான் (வழி)
மறந்துவிட்ட அண்ணனையே நினைத்தான் (மற)
மறுகணத்தினிலே மகிழ்ச்சியிலே திளைத்தான் (மறு) (பிள்ளையார்)

கேட்டதெல்லாம் கொடுக்கவரும் பிள்ளை – அவன்

கீர்த்திசொல்ல வார்த்தைகளே இல்லை
ஆட்டமென்ன பாட்டமென்ன அனைத்தும் – அவன்
நாட்டமின்றி எவ்வாறு நடக்கும் (அவன்) (பிள்ளையார்)

தும்பிக்கை நம்பிக்கை கொடுக்கும் – வரும்
துயர்யாவும் முன்நின்று தடுக்கும்
அஞ்சேலன் ஒருகைதான் அணைக்கும் – அவன்
அசைந்துவர அருள்மணிகள் ஒலிக்கும் (அவன்) (பிள்ளையார்)

18. கணபதி இருக்கும் வரை கவலையில்லை – என்றும்
கைகட்டி பதில் சொல்லும் நிலையுமில்லை
எனக்கொரு இசை தெய்வம் அவன்தானய்யா
அவன்புகழ் தினம்சொல்வோம் இவன்தானய்யா (கணபதி)

கணபதி என்றிட கலங்கும் வல்வினை
கணபதி என்றிட காலனும் கை தொழும்
கணபதி என்றிட கருமம் ஆதலால்
கணபதி என்றிட கவலை தீரு மே (கணபதி)

19. நாயகனைப்பாட நான்என்ன தவம்செய்தேன்
விநாயகனைப்பாட நான்என்ன தவம் செய்தேன் (நாய)

மூவுலகின் முதற்பொருளே, முதல்பிள்ளை ஒளிவடிவே
முக்கண்ணன் அருட்பொருளே, முக்கனியின் வேதப்பொருளாய் அமர்ந்த (நாய)

அரசமரம் சுற்றிவந்து முரசம்பல கொட்டிநின்று
பலவகை கனிஎடுத்து அது, பழரசம் அதில் வேதம் செய்து
பருப்போடு பாகும் பக்குவமாய், இனிக்கும்
தேங்காய் இளநீரும் தீர்த்தமும் மணக்கும் (நாய)

வெள்ளிரத ஊஞ்சலாட விருப்பமுடன் மனம்பாட (வெள்ளி)
வினைதீர்க்க, அருள் கொடுக்க, பொருள் குவிக்க மனம் களிக்க (நாய)

எருக்கம்பூ மாலையிலே இருக்கின்ற நாயகனே (எருக்)
கொடுக்கின்ற மனதினிலே பூக்கின்ற மூலவனே
சிரிக்கின்ற சிரிப்பினிலே செல்வமெல்லாம் தருபவனே (சிரிக்)
பேரமுதை தெளிப்பவனே சிவசக்தி நாயகனே (பேர) (நாய)

20. முந்திமுந்தி விநாயகனே முக்கண்ணனார் தன்மகனே
கந்தனுக்கு முன்பிறந்த கணபதியே வாருமய்யா (முந்தி)

பார்வதியின் புத்திரனே, பரமசிவன் பாலகனே
பக்தர்களை காத்திடவே, பரிவுடனே வாருமய்யா (முந்தி)

அரசமரம் அமர்ந்தவனே, ஆனைமுகம் படைத்தவனே
அடியவரை காத்திடவே,அன்புடனே வாருமய்யா (முந்தி)

பேழை வயிற்றோனே, பெருச்சாளி வாகனனே
பேணி காத்திடவே, பெருமையுடன் வாருமய்யா (முந்தி)

சக்திஉமை பாலகனே, சண்முக சோதரனே
சங்கடம் தீர்த்திடவே, சடுதியிலே வாருமய்யா (முந்தி)

h h h h h

## லோக மாதா ஸரஸ்வதி தேவியே சரணம் ஐயப்பா

1. ஸரஸ்வதி நமஸ்துப்யம் வரதே காமரூபிணி
   வித்யாரம்பம் கரிஷ்யாமி ஸித்திர் பவதுமே ஸதா

2. ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
   ஏய உணர்விற்கும் என்னம்மை தூய
   உருப்பளிங்கு போலல்லாள் என் உள்ளத்தின் உள்ளே
   இருப்பாளிங்கு வாராதிடர்

3. பாட்டும் பொருளும் பொருளாற் பொருத்தும் பயனுமென்பாற்
   கூட்டும் படிகின் கடைக்கண் நல்காயுளங் கொண்டு தொண்ட
   தீட்டுங் கலைத்தமிழ்த் தீம் பாலமுதம் தெளிக்கும் வண்ணம்
   காட்டும் வெள்ளோதிமப் பேடே சகலகலாவல்லியே

4. மண்கண்ட வெண்குடைக் கீழாக மேற்பட்ட மன்னருமென்
   பண்கண்டளவிற் பணியைச் செய்வாய்ப் படைப்போன் முதலாம்
   விண்கண்ட தெய்வம் பல்கோடியுண்டேனும் விளம்பிலுன் போற்
   கண்கண்ட தெய்வ முளதோ சகலகலாவல்லியே.

5. வெள்ளைத் தாமரைப் பூவில் இருப்பாள்
   வீணை செய்யும் ஒலியில் இருப்பாள்
   கொள்ளை யின்பம் குலவு கவிதை
   கூறும் பாவலர் உள்ளத்திருப்பாள்
   உள்ள தாம் பொருள் தேடி யுணர்ந்தே
   ஓதும் வேதத்தின் உள்நின் றொளிர்வாள்
   கள்ளமற்ற முனிவர்கள் கூறும்
   கருணை வாசகத்துட் பொருளாவாள்

h h h h h

1. சரஸ்வதி சரஸ்வதி சகல கலா வாணி சரஸ்வதி
   கொஞ்சிக் கொஞ்சிப் பாட அருள் சரஸ்வதி

குமரனையே தினம் சரஸ்வதி (கொஞ்சி)
வேலனையே தினம் சரஸ்வதி ,,
ஐயனையே தினம் சரஸ்வதி ,,
ஐயப்பனையே தினம் சரஸ்வதி ,,

2. ஜெகஜ்ஜனனி ஜெகன்மாதா வாணி சரஸ்வதி வாக்தேவி
   வாணி சரஸ்வதி வாக்தேவி வீணா பாணி சரஸ்வதி (ஜெகஜ்)

வீணாபாணி சரஸ்வதி பன்னக வேணி கலைவாணி
பன்னகவேணி கலைவாணி புஸ்தகபாணி சரஸ்வதி (ஜெகஜ்)

புஸ்தகபாணி சரஸ்வதி வித்யாதாயினி நமோஸ் துதே

3. ஹம்ஸவாகன தேவி அம்மா ஸரஸ்வதி
அகிலலோக கலைவாணி அம்மா ஸரஸ்வதி
ச்ருங்கசைல நிவாஸினி அம்மா ஸரஸ்வதி
ஸங்கீதரஸ விலாஸினி அம்மா ஸரஸ்வதி
நாதகீத விலாஸினி அம்மா ஸரஸ்வதி – எங்கள்
நாவில்வந்து நடனமிடு அம்மா ஸரஸ்வதி

4. ஜயஜய தேவி தயாலஹரி ஜனனி சரஸ்வதி பாலயமாம்
அமலே கமலாஸன ஸஹிதே அத்புத சரிதே பாலயமாம்
மாதர் மங்கள குணசாலே மனோக்ஞ சீலே பாலயமாம்
கிரீட குண்டல ஸுசோபிதே கின்னர கீதே பாலயமாம்
பகவதி பாரதி கீர்வாணி பன்னக வேணி பாலயமாம்

5. கல்விக்கரசி கலை மகளே
கலைகளுக் கதிபதி ஆனவளே
வெண்கலை தனையே தரித்தவளே
வெண்தா மரையில் அமர்ந்தவளே (கல்விக்)

முத்தாரம் தனையே அணிந்தவளே
முத்தமிழ் ஞானம் படைத்தவளே
நான்முகன் நாவில் உறைபவளே
நால்வகை கலைகளை உணர்ந்தவளே (கல்விக்)

கனிகள் தேங்காய் அவல்கடலை – அம்மா (கனி)
கற்கண்டு வெற்றிலை பாக்குடனே – வாணி
நின்னருள் வேண்டி நின்றோம் – வரமே
தந்திட வேண்டு மம்மா (கல்விக்)

6. வெள்ளை கமலத்திலே – அவள்
வீற்றிருப்பாள் புகழேற்றிருப்பாள்
கொள்ளை கனியிசை தான் – கண்டு
கொட்டுநல் யாழினை கொண்டிருப்பாள் (வெள்ளை)

கள்ளை கடலமுதை –நிகர்
கண்டதோர் பூந்தமிழ் கவிசொலவே
பிள்ளை பருவத்திலே – எனைப்
பேண வந்தாள் அருள் பூணவந்தாள் (வெள்ளை)

சொற்படு நய மறிவார் – இசை

தோய்த்திட தொகுப்பதின் சுவையறிவார்
விற்பனைத் தமிழ் புலவோர் – அந்த
மேலவர்நாவெனும் மலர் பதத்தாள் (வெள்ளை)

வாணியை சரண் புகுந்தேன் – அருள்
வாக்களிப்பாள் எனதிட மிகுந்தேன்
பேணிய பெருந் தவத்தாள் – நிலம்
பெயரளவும் பெயர் பெயராதாள் (வெள்ளை)

7. மாணிக்க வீணை ஏந்தும் மாதேவி கலைவாணி
தேன்தமிழ்ச் சொல்லெடுத்துப் பாடவந்தோம்
அம்மா பாடவந்தோம் அம்மா பாட வந்தோம்
அருள்வாய்நீ இசைதரவா நீ இங்குவருவாய்நீ நலம்தரவேநீ—அம்மா (மாணிக்க)

நாமணக்கப் பாடிநின்றால் ஞானம் வளர்ப்பாய்
பூமணக்கப் பூஜை செய்தால் பூவை நீமகிழ்வாய் (மாணிக்க)

வெள்ளைத் தாமரையில் வீற்றிருப்பாய் – எங்கள்
உள்ளக் கோவிலிலே உறைந்து நிற்பாய் (வெள்ளை)
கள்ளமில்லாமல் தொழும் அன்பர்க்கே – என்றும்
அள்ளி அறிவைத்தரும் அன்னையும் நீ
வாணி சரஸ்வதி மாதவி பாரதி வாகதீஸ்வரி மாலினி
காணும் பொருளினில் தோன்றும் கலைமணி
வேண்டும் வரம்தரும் வேணிநீ
நான்முகன் நாயகி மோகன ரூபிணி நான்மறை போற்றிடும் தேவி நீ
வானவர்க்கமுதே தேனருள் சிந்தும் ஞான மனோகரி கல்யாணி
அருள்வாய்நீ இசை தரவாநீ இங்கு வருவாய்நீ நலம் தரவேநீ – அம்மா
(மாணிக்க)

8. வண்டார்குழலி வாணிஎன் தாயே வாழ்கவாழ்க நின தருளே
வெண்தாமரை எனதுள்ளம தாகநீ வீணையை மீட்டிடு வாயே –
அம்மா என் ஜீவனை மீட்டிடு வாயே (வண்டார்)

கருணையின் கனியே கலைகளின் நிலையே
காணவேண்டும் நின துருவே (கருணை)
வருக வருகஎன திதயமலரி லிருந்து மங்களமே தருவாயே
அம்மா என் வீணையை மீட்டிடு வாயே (வண்டார்)

கருவுடல்போயினும் கவியுடல் எய்தி நான்
காலமுழுதும் நிலை பெறுவேன் (கருவுடல்)
ஹரிநாராயண சிவசிவகுஹ எனும் நாமரஸம் தருவாயே —அம்மா
என் நாவினில் நடம்புரிவாயே (வண்டார்)

கோடிகோடி கவி பாடிடுவேன் – தமிழ் கோகிலமே வரு வாயே (கோடி)
எனதிதயம் ப்ரணவ த்வனிசெய்திடும் ஏக சுகம் தருவாயே – உன்
இசையமுதம் பொழி வாயே – அம்மா என் வீணையை மீட்டிடு வாயே(வண்டார்)

9. கலைகளெல்லாம் அள்ளி தருபவளே – இளம்
கன்னித்தமிழாய் திகழ்பவளே – நல்ல (கலை)
புலவரெல்லாம் புகழ் கலைமகளே – அறிவு
பொங்கி ததும்பும் திருவுருவே

வீணையைக் கையினில் நீஎடுத்தாய் – தூய
வெள்ளை கலையினை நீஉடுத்தாய்
வாணி அமுதத் தேன் நீ – எனக்கு
வற்றாக் கல்விசெல்வம் கொடுப்பவளே (கலை)

10. அகரமுதல எழுத்தெல்லாம் அறியவைத்தாய் தேவி
ஆதிபகவன் முதலென்றே உணரவைத்தாய் தேவி
இயல் இசை நாடக தீபம் ஏற்றி வைத்தாய்

ஈன்றவர் நெஞ்சை இன்று குளிர வைத்தாய் தாயே
உயிர்மெய் எழுத்தெல்லாம் தெரிய வைத்தாய்
ஊமையின் வாய்திறந்து பேசவைத்தாய் அம்மா பேச வைத்தாய் (அகர)

எண்ணும் எழுத்தென்னும் கண்திறந்தாய்
ஏற்றம் தரும் புலமை ஆற்றல்தந்தாய்
ஐயந் தெளிய வைத்து அறிவுதந்தாய்
ஒலிதந்து மொழிதந்து குரல்தந்தாய்
ஓங்கார இசைதந்து உயரவைத்தாய் – தேவி (அகர)

போற்றவைத்து புகழ் சாற்றவைத்து – அறி
வூற்றினோடு உயர் ஆற்றல் தந்தென்னை
அறிஞன் கவிஞன் கலைஞன் – இவனென
அருளும் தமிழும் திகழும் – கடவென
கற்றவரும் கொற்றவரும் முற்றுமே அறிந்தவரும்
நித்தம் நித்தம் புகழ்ந்திட நின்னருளைத் தந்தருள்வாய்
உற்றார் சுற்றம் உறவினர்மாந்தர்
யானைசேனை படையுடைவேந்தர்
மற்றும் பற்றை நீக்கிய ஞானி
பலரும் புகழ்ந்திட ஆக்கியவாணி
தாயில்லாத பிள்ளையென்று வாயில்லாத ஊமையென்று
ஆயிரங்களான கல்வி வாய்திறந்து தந்தசெல்வி
அன்னை உன்னை சரணடைந்தேன் தேவி (அகர)

11. கலைவாணி நின்கருணை தேன்மழையே
விளையாடும் என்நாவில் செந்தமிழே
அலங்கார தேவதையே வனிதாமணி – இசை
கலையாவும் தந்தருள்வாய் கலைமாமணி (கலை)

மரகத வளைக்கரங்கள் மாணிக்கவீணை தாங்கும்
அருள்ஞான கரம்ஒன்றில் ஜபமாலை விளங்கும்
ஸ்ருதியோடு லயபாவஸ்வரராக ஞானம்
சரஸ்வதி மாதாவுன் வீணையில் எழும்நாதம் (கலை)

வீணையில் எழும் நாதம் தேவிஉன் சுப்ரபாதம்
வேணுவில் வரும் நாதம் வாணிஉன் சக்ரவாகம்
வானகமும் வையகமும் உன்புகழ் பாடும்
வேண்டினேன் உன்னைப்பாட தருவாய் சங்கீதம் (கலை)

h h h h h

## ஆறுமுகன் சோதரனே.................. சரணம் ஐயப்பா

மயுரா திருடம் மஹாவாக்ய கூடம்
மனோ ஹாரி தேஹம் மஹச்சித்த கேஹம்
மஹீதேவ தேவம் மஹாவேத பாவம்
பஜேலோக பாலம் பராசக்தி புத்ரம்

1. நாள் என்செயும், வினைதான் என்செயும், எனை நாடி வந்த

கோள் என்செயும், கொடுங்கூற்று என்செயும் குமரேசர் இரு
தாளும், சிலம்பும், சதங்கையும், தண்டையும், சண்முகமும்
தோளும், கடம்பும் எனக்கு முன்னேவந்து தோன்றிடினே

2. விழிக்குத்துணை திருமென் மலர் பாதங்கள், மெய்மை குன்றா
மொழிக்குத்துணை முருகாவெனும் நாமங்கள், முன்பு செய்த
பழிக்குத்துணை அவன் பன்னிருதோளும், பயந்ததனி
வழிக்குத்துணை வடிவேலும் செங்கோடன் மயூரமுமே

3. சேந்தனை, கந்தனைச், செங்கோட்டு வெற்பினைச், செஞ்சுடர்வேல்
வேந்தனைச், செந்தமிழ் நூல்விரித்தோனை, விளங்கு வள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக், கார்மயில் வாகனனைச்,
சார்ந்துனை ஒருபோதும், மறவாதவர்க்கு ஒரு தாழ்வில்லையே

4. ஒருமையுடன் நினது மலரடி நினைக்கின்ற
உத்தமர் தம் உறவு வேண்டும்
உள்ளொன்று வைத்து புறமொன்று
பேசுவார் உறவு கலவாமை வேண்டும்
பெருமை பெறு நினதுபுகழ் பேசவேண்டும்
பொய்மை பேசாதிருக்க வேண்டும்
பெருநெறி பிடித்தொழுக வேண்டும்
மதமான பேய் பிடியாதிருக்க வேண்டும்
மருவு பெண்ணாசையே மறக்க வேண்டும்
உனை மறவாதிருக்க வேண்டும்
மதிவேண்டும் நின்கருணை நிதிவேண்டும்
நோயற்ற வாழ்வில் நான்வாழ வேண்டும்
தருமமிகு சென்னையில் கந்ததோட்டத்துள் வளர்
தலமோங்கு கந்தவேளே
தன்முகத் தூயமணி உன்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே

5. ஆறிரு தடந்தோள் வாழ்க ஆறுமுகம் வாழ்க
வெற்பைக்கூறு செய்தனிவேல் வாழ்க
குக்குடம் வாழ்க செவ்வேள் ஏறிய மஞ்ஞை வாழ்க
ஆனைதன் அணங்கு வாழ்க மாறிலா வள்ளி வாழ்க வாழ்க வாழ்கவே
வாழ்க சீரடியாரெல்லாம்

6. கருணை புரிந்து என்னைக் காத்திட வருவாயே
கழுகுமலை வாசா முருகையா அழகு மயில் வீரா
உன் பதம் பணிந்தேன் பரவசம் அடைந்தேன்
துதித்தேன் பூஜித்தேன் முருகையா காத்திட வருவாயே
இன்பமும் துன்பமும் சகலமும் நீயே
சிவகுரு நாதனே முருகையா கந்தப்பஸ்வாமியே
சூரசம்ஹாரா சம்புகுமாரா
சிங்கார வேலா முருகையா காத்திட வருவாயே
உன்னையன்றி வேறு தெய்வம்
நானறியேன் முருகையா நானறியேனே
திருப்பரங்கிரிவளர் தேவாதிதேவா
வள்ளி மணாளா முருகையா காத்திடவருவாயே
ஞான பண்டிதனே பால தண்டாயுதனே

ஆனந்த முருகனே வேலய்யா ஆனந்த முருகனே
தரிசனம் செய்தேன் ஜோதியைக் கண்டேன்
என்னை மறந்தேன் முருகையா காத்திட வருவாயே.

h h h h h

1. திருப்படிகள் ஏறிவந்தோம் பழனி ஆண்டவா – உந்தன்
திருவடியை நாடிவந்தோம் பழனிவேலவா
பழனிஆண்டவா பழனிவேலவா பழனிவேலவா பழனி ஆண்டவா (திருப்படி)

ஆடிப்பாடி காவடிகள் ஆயிரம் கோடி
ஆடிமாத கார்த்திகையில் கோவிலைத்தேடி
நாடி வந்தோம் குமராஉன் திருப்புகழ்பாடி
நாயகனாம் பழனிவாசன் அருள்முகம்தேடி (திருப்படி)

தங்கரதம் மீதிருப்பான் தணிகைமூர்த்தி
தரணியெங்கும் பரவுதம்மா குமரனின்கீர்த்தி
அங்கமெல்லாம் சிலிர்க்குதைய்யா அவன்பெயர் சொன்னால் என் (அங்கம்)
அழகன்குமரன் புகழைப்பாட ஆகுமோஎன்னால் (திருப்படி)

வேல் வேல் முருகா – வெற்றிவேல் முருகா
வெற்றிவேல் முருகா வேல் வேல் முருகா (வேல்...)

2. காவடியாம் காவடி கந்தவேலன் காவடி
கண்கொள்ளா காட்சிதரும் கடம்பனுக்கொரு காவடி (காவடி)

வேல்முருகன் நாமத்திலே விதவிதமாய் காவடி
வெற்றிவேலன் காவடி வீரவேலன் காவடி (காவடி)

சிங்கார வேலனுக்கு சின்னசின்ன காவடி
வண்ணமயில் தோகையோடு ஆடிவரும் காவடி (காவடி)

பழனிமலை பாலனுக்கு பால்குடத்தால் காவடி
தென்பழனி வேலனுக்கு சந்தனத்தால் காவடி (காவடி)
சுவாமிமலை வேலனுக்கு சந்தனத்தால் காவடி
பாலசுப்ர மணியனுக்கு பஞ்சாமிர்த காவடி (காவடி)

3. ஆதிமூல முருகா முருகா ஆதிதேவ முருகா
ஞானபால முருகா முருகா ஞானதேவ முருகா (ஆதி)

கோவில் நாடிவந்தேன் முருகா குறைகள்தீர்க்க வருவாய்
மலையை நாடிவந்தேன் முருகா மனமிரங்கி வருவாய்
படிகள் ஏறிவந்தேன் முருகா பரிவுடனே வருவாய்
கிரிகள் ஏறிவந்தேன் முருகா பெரிய வாழ்வு தருவாய் (ஆதி)

கவிகள் பாடிவந்தேன் முருகா கருணையோடு வருவாய்
துதிகள் பாடிவந்தேன் முருகா துணைவனாகி வருவாய்
அடிமை யாகிவந்தேன் முருகா அதிபனாகி வருவாய்
அருமை கண்டுவந்தேன் முருகா அகமகிழ்ந்து வருவாய் (ஆதி)

னைகள் நீங்கவந்தேன் முருகா வேலெடுத்து வருவாய்
அன்னை தந்தைஆனாய் முருகா அரிய செல்வம் ஆனாய்

என்னை யாளும்முருகா முருகா உன்னைஎன்றும் மறவேன்
துன்பம் நீங்கவேண்டும் முருகா இன்பம் ஓங்க வேண்டும் (ஆதி)

தருமம் ஓங்கவேண்டும் முருகா தானம்பெருக வேண்டும்
தவமும் ஓங்கவேண்டும் முருகா சாந்தி நிலவ வேண்டும் (ஆதி)

4. பழனிமலை ஆண்டவனும் எங்கேஎங்கே – அந்த
பழனிமலை போனா தெரியும் அங்கேஅங்கே (பழனி)

ஆண்டியாக நின்றவனும் எங்கேஎங்கே – அந்த
பழனிமலை போனாதெரியும் அங்கேஅங்கே
அய்யனே வேலய்யா அப்பனே கந்தையா
சாமியே முருகய்யா சரணங்கூறி பாடய்யா (பழனி)

தகப்பன்சாமி ஆனவனும் எங்கேஎங்கே – அந்த
சுவாமிமலை போனாதெரியும் அங்கேஅங்கே
மயிலேறி வாருமய்யா மனமிரங்கி வாருமய்யா
சாமியே முருகய்யா சரணங்கூறி பாடய்யா (பழனி)

சூரன்வதம் செய்தவனும் எங்கேஎங்கே – அந்த
திருச்செந்தூர் போனாதெரியும் அங்கேஅங்கே
வேலெடுத்து வாருமய்யா வினைதீர்க்க வாருமய்யா
சாமியே முருகய்யா சரணங்கூறி பாடய்யா (பழனி)

குறவள்ளி நாதனும் எங்கேஎங்கே – அந்த
திருத்தணிகை போனாதெரியும் அங்கேஅங்கே
தணிகைமலை வேலய்யா தானிரங்கி வாருமய்யா
சாமியே முருகய்யா சரணங்கூறி பாடய்யா (பழனி)

5. தமிழான உருவம் தான் தண்டபாணி – தமிழ்க்
கலையாவும் பெருமானின் திருமேனி – செந் (தமிழான)

அமிழ்தான உயிரெழுத்து பன்னிரெண்டு – குமரன்
அழகான கருவிழியும் பன்னிரெண்டு –செந் (தமிழான)

ஈராறு கரத்தொடும் ஒராறு சிரம் சேர்த்தால்
எண்ணிக்கை வருவதும் பதினெட்டாம்
சீராக இனம் பிரித்தால் தேனானமெய்யெழுத்து
நேராக வருவதும் பதினெட்டாம் – செந் (தமிழான)

வல்லினம் தனைக்கூறும் அவன் நெஞ்சம் – அவனை
வாழ்த்திடில் நம்மைக் கண்டு பகைஅஞ்சும்
மெல்லினம் அறுபடை வீடாகும் – முருகன்
மேனியே செந்தமிழ் ஏடாகும் – செந் (தமிழான)

ஒரெழுத்து தமிழில் ஆயுதமாம் – கையில்
ஒளிர்கின்ற வேல்முருகன் ஆயுதமாம்
யாரெழுத்து நம்மைத்தான் என்ன செய்யும் – வேல்
வீரங்கொண்டு வந்து வினைகொய்யும் – செந் (தமிழான)

6. வெள்ளிக் கிழமை பூஜையிலே வா முருகா வா – உனக்கு
வேலும் மயிலும் வாங்கி தாரேன் வா முருகாவா (வெள்ளி)

சனிக்கிழமை பூஜையிலே வா முருகாவா – உனக்கு
சந்தனத்தால் அபிஷேகம் வா முருகாவா (வெள்ளி)

ஞாயிற்றுக்கிழமை பூஜையிலே வா முருகா வா – உனக்கு
ஞானரதம் நான்தாரேன் வா முருகாவா (வெள்ளி)

திங்கள்கிழமை பூஜையிலே வா முருகாவா – உனக்கு
திருநீறால் அபிஷேகம் வா முருகாவா (வெள்ளி)

செவ்வாய்க்கிழமை பூஜையிலே வா முருகா வா – உனக்கு
சேவற்கொடி வாங்கி தாரேன் வா முருகாவா (வெள்ளி)

புதன்கிழமை பூஜையிலே வா முருகாவா – உனக்கு
புஷ்பத்தாலே அலங்காரம் வா முருகாவா (வெள்ளி)

வியாழக்கிழமை பூஜையிலே வா முருகா வா – உனக்கு
விதவிதமாய் அலங்காரம் வா முருகாவா (வெள்ளி)

7. வேல் வேல் வேல் வேல் வேலாயுதா
வேங்கைமர மானவரே வேலாயுதா (வேல் வேல்)

வேல் வேல் வேல் வேல் வேலாயுதா
வேதனைகள் தீருமையா வேலாயுதா (வேல் வேல்)

அருட்சுடராய் வந்தவரே வேலாயுதா
ஆறுமுக மானவரே வேலாயுதா (வேல் வேல்)

திருச்செந்தி லதிபனே வேலாயுதா
தெய்வயானை மணாளரே வேலாயுதா (வேல் வேல்)

குன்றக்குடிக் குமரனே வேலாயுதா
குறவள்ளி மணாளரே வேலாயுதா (வேல் வேல்)

கருணையோடு காத்தருள்வாய் வேலாயுதா – கந்தா
உன்னைத் தெண்டனிட்டோம் வேலாயுதா (வேல் வேல்)

8. சத்யஸ்வரூபா ஸத்குருநாதா சாந்திதா சரவணபாலா
கருணாசாகரா தீனதயாளா பாஹிமாம் பன்னிருகையா
பாஹிமாம் பழனிவேலா – பாஹிமாம் செந்தில் வேலா
கலியுகவரதா கார்த்திகேயா முக்திதா முருகாவேலா (சத்ய)

கணேசசோதரா பார்வதிபாலா பாஹிமாம் வள்ளி மணாளா
வடிவேல்முருகா முக்கண்ணன்பாலா முக்திதா முருகாவேலா
விக்னவிநாயகா கௌரீசங்கரா சாந்திதா சரவணபாலா
செந்தூர்வேலா உமையாள் பாலா முக்திதா சுப்ரமண்யா (சத்ய)

பாபவிதூர மணிகண்டசோதர பாஹிமாம் வள்ளிமணாளா
பார்வதிபாலா குமாரவேலா சாந்திதா சரவணபாலா
பக்தஜனப்பிரிய பங்கஜலோசன பாஹிமாம் பன்னிருகையா
எட்டுக்குடிவேலா சிங்காரபாலா சாந்திதர கதிர்காம வேலா (சத்ய)

9. முருகா மோகன தங்கமயில் வாகன சரவண பவனே வேலாயுதா
ஹேசிவ பாலா சூர சம்ஹாரா சர்வமும் நீயே ஜயசக்தி வேலா

10. பச்சை மயில் வாகனனே – சிவ
பாலசுப்ர மண்யனே வா – என்
இச்சையெல்லாம் உன்மேல் வைத்தேன் – அதில்
எள்ளளவும் ஐய மில்லையே (பச்சை)

கொச்சை மொழியானாலும் உன்னைக்
கொஞ்சிக் கொஞ்சிப் பாடிடுவேன் – எந்தன்
சர்ச்சை யெல்லாம் அகன்றதப்பா – எங்கும்
சாந்தி நிலவு தப்பா (பச்சை)

நெஞ்சமெனும் கோவி லமைத்தே – அதில்
நேர்மையெனும் தீபம் வைத்தே
செஞ்சிலம்பு கொஞ் சிடவேவா – வாவா
சேவற்கொடி மயில் வீரா (பச்சை)

வெள்ளமது பள்ளம் தனிலே – பாயும்
தன்மைபோல் உள்ளம் தனிலே – நீ
மெல்லமெல்லப் புகுந்து விட்டாய் – முருகா என்
கள்ளமெல்லாம் கரையு தப்பா (பச்சை)

அலைகடல் ஓரத்திலே எங்கள் அன்பான சண்முகனே நீ
அலையா மனம் தருவாய் உனக்கு அனந்தகோடி நமஸ் காரம் (பச்சை)

11. எங்கள் குலதெய்வம் எங்கள் குலதெய்வம்
எங்கள் குலதெய்வம் எங்கள் குலதெய்வம் (எங்கள்)

சிங்கார வேலவனாம் எங்கள் குலதெய்வம் – திருச்
செந்தூரில் வாழ்ந்துவரும் எங்கள் குலதெய்வம்
தங்கமயில் ஏறிவரும் எங்கள் குலதெய்வம் – இந்த
தரணியெல்லாம் வாழவைக்கும் எங்கள் குலதெய்வம் (எங்கள்)

தந்தைபோலதுணையிருக்கும் எங்கள் குலதெய்வம்
பெற்றதாயைபோல காத்துவரும் எங்கள் குலதெய்வம்
குருவைப்போல பாடம்சொல்லும் எங்கள் குலதெய்வம் – மனக்
குறையெல்லாம் தீர்த்துவைக்கும் எங்கள் குலதெய்வம் (எங்கள்)

குன்றுதோறும்நின்றாடும் எங்கள் குலதெய்வம் – தினம்
கும்பிட்டால் பலன்கொடுக்கும் எங்கள் குலதெய்வம்
கோயில்மணி ஓசையிலே எங்கள் குலதெய்வம் – மனம்
கோருகின்ற வரம்அருளும் எங்கள் குலதெய்வம் (எங்கள்)

12. வேலுண்டு வினையில்லை மயிலுண்டு பயமில்லை
குகனுண்டு குறைவில்லை மனமே – அந்த
கந்தனுண்டு கவலையில்லை மனமே (வேலுண்டு)

உலகமெனும் கடல்தனிலே உடலென்னும் ஓடமது
உன்னடிக் கரையடைய அருள்வாய் – முருகா
உன்னடிக் கரையடைய அருள்வாய் (வேலுண்டு)

ஊனுடலை வளர்ப்பதற்கு ஒவ்வொருநாளும் கழித்தேன்
உன்னருள் வளரவழி உணர்கிலேன் – முருகா

உன்னருள் வளரவழி உணர்கிலேன் (வேலுண்டு)

ஓயாது ஒழியாது உன்நாமம் சொல்பவர்க்கு
உயர்கதிதான் தந்திடுவாய் முருகா – நீ
உயர்கதிதான் தந்திடுவாய் முருகா (வேலுண்டு)

கருணையே வடிவமான கந்தசாமித் தெய்வமே
கழலடியைத் தந்து எனை ஆளுவாய் – முருகா உன்
கழலடியைத் தந்து எனை ஆளுவாய் (வேலுண்டு)

13. கனிவிலும்பழனி எங்கள் நினைவிலும்பழனி
கனகராஜன் கண்ணில்வந்த கந்தன்வாழும் பழனி (கனவிலும்)

திருநீற்றை அணிந்துகாட்டும் தீரன்வாழும் பழனி
தண்டாயுதம் தரித்தசீலன் வேலன்வாழும் பழனி (கனவிலும்)

தேவர்முனிவர் தேடிஆடி பாடிமகிழும் பழனி
திருப்புகழால் அடியார்கள் தினமும்பாடும் பழனி (கனவிலும்)

பழம்நீ என்று பரம்சொல்லி பகிர்ந்தளித்த பழனி
படிகள்தோறும் பால்மணக்கும் பாலன்வாழும் பழனி (கனவிலும்)

காவடி கொண்டாடுவோர்கள் கண்டெடுத்த பழனி

| | | |
|---|---|---|
| பால்காவடி | அரகரோகரா | அரோகரா |
| மயில் காவடி | அரகரோகரா | அரோகரா |
| சந்தனக் காவடி | அரகரோகரா | அரோகரா |
| சர்ப்பக் காவடி | அரகரோகரா | அரோகரா |
| மச்சக் காவடி | அரகரோகரா | அரோகரா |
| பன்னீர் காவடி | அரகரோகரா | அரோகரா |

14. வேல் எடுத்து வந்தபோது வெற்றிமாலை வந்தது
கால் எடுத்து வந்தபோது தமிழ் பாடல் வந்தது
உலகை வலம் வந்தபோது உண்மை ஒளி பிறந்தது
உள்ளக்கதவை திறந்தபோது ஞானப்பழம் கனிந்தது (வேல்)

கந்தன் திருமேனியை கண்டேன் வண்ணமயில் வந்தது
ஆறுபடை வீடுதோறும் சேவற்கொடி பறந்தது
ஆறுமுகமானபொருள் அறிவுகண்ணில் தெரிந்தது
ஆசைமனம் அறிந்தபோது வள்ளிமணம் புரிந்தது (வேல்)

கற்பனையில் உருவெடுத்து திருப்புகழும் உயர்ந்தது
அடியார்வினை தீர்த்தபோது அன்புஉறவு வளர்ந்தது
தேவர்குல தலைவன்என்றே தெய்வயானை மகிழ்ந்தது
விழிகளிலே கருணைஎன்னும் அன்பும்அருளும் மலர்ந்தது (வேல்)

15. வேல் முருகா மால்மருகா வாவா ஷண்முகா
கால் பிடித்தோம் காத்தருள்வாய் வாவா ஷண்முகா (வேல்)

நாலுதேவப் பொருளானாய் நாதா ஷண்முகா

நலமெல்லா முன்பால்கொண்டாய் நாதா ஷண்முகா
செல்லமாகச் சிவன் அணைக்கும் சேயே ஷண்முகா
செங்கதிர்வேல் தாங்கியஎன் தேவா ஷண்முகா (வேல்)

ஆறுபடை வீடுடைய ஆண்டவா ஷண்முகா
ஆனந்தமே அற்புதமே ஆண்டவா ஷண்முகா
தேறுதலைத் தருபவனே தேவா ஷண்முகா
சிங்கார ஓங்கார சீலா ஷண்முகா (வேல்)

பாடும்பணி தந்திடுவாய் பண்டிதா ஷண்முகா
பக்தருடன் கூடிடுவாய் முக்தனே ஷண்முகா
ஆடும்சேவற் கொடியழகா ஆண்டவா ஷண்முகா
அடியாருள்ளக் குகையமர்ந்த ஆனந்தா ஷண்முகா (வேல்)

வீடும்நாடும் நின்திருத்தாள் வேண்டினேன் ஷண்முகா
வீரன்சூரன் உடல்கிழித்த வேலனே ஷண்முகா
ஓடும்மனம் உன்னைநாட ஆடிவா ஷண்முகா
ஒருவனேயென் வினையொழித்த உத்தமா ஷண்முகா (வேல்)

தொல்லையெல்லாம் கடந்தபதம் தந்திடுவாய் ஷண்முகா
தோத்தரித்தோம் எங்கள்முன்னே வந்திடுவாய் ஷண்முகா
கல்லையொத்த மனமுருகக் கருணைசெய் ஷண்முகா
ஜல்லெனச் சிலம்பொலிக்க ஓடிவா ஷண்முகா (வேல்)

16. கார்த்தி கேயா கலியுகவரதா
கந்தா முருகா கருணாகரனே
கந்தா முருகா கருணாகரனே
கானகவள்ளி தெய்வானை மணாளா (கார்த்தி)

ஓசையும் ஆனாய் ஒளியாய்கந்தா
ஆசையும் ஆனாய் அருளாய்கந்தா
ஈசா இன்பா என்னுயிர்த் தலைவா
நேசா குமரா மலர்தாள் தரவா (கார்த்தி)

அணியும்மணியும் அடியார்வினையும்
அணியும்தோழா அழகாய்வருக
கண்ணின் மணியே கருணைக்கடலே
கனவிலும்உனையே மறவேன் வேலா (கார்த்தி)

வாழ்கமுருகா உன்திரு நாமம்
வாழ்கமுருகா உன்பெயர் சொலவும்
வாழ்கமுருகா நின்திருச் சங்கம்
வாழ்கமுருகா எல்லாம் உலகம் (கார்த்தி)

17. கந்தன்போட்ட கணக்கு தெரியவில்லை நமக்கு
வேலன்போட்ட கணக்கு அதுவிதவிதமாய் இருக்கு (கந்தன்)

ஒன்றும் ஒன்றும் இரண்டு ஓம்எழுத்தும் இரண்டு
இரண்டும் இரண்டும் நான்கு இனியவேதம் நான்கு (கந்தன்)

மூன்றும் மூன்றும் ஆறு முருகன்முகம் ஆறு

நான்கும் நான்கும் எட்டு நமக்குதிசைகள் எட்டு (கந்தன்)

ஐந்தும் ஐந்தும் பத்து அவன் அருள்பெறும் சொத்து
ஆறும் ஆறும் பனிரெண்டு முருகன் கரங்கள் பனிரெண்டு (கந்தன்)

18. வேல்வேல் வடிவேல் வேதாந்த வடிவேல்
வேதாந்த வடிவேல் வேல்வேல் வடிவேல்
அன்னையவள் தந்தவேல் ஆதிபரா சக்திவேல்
அன்புஎல்லாம் தரும்வேல் அதுநன்மைசெய்யும் நல்லவேல் (வேல்)

தேவியவள் தந்தவேல் தேவர்மூவர் போற்றும்வேல்
பாவங்கள் நீக்கும்வேல் பக்தர்களை காக்கும்வேல்
வீரந்தன்னை தந்திடும் வேலவனின் வீரவேல்
ஞானந்தன்னை வளர்த்திடும் ஷண்முகனின் ஞானவேல் (வேல்)

சூரவேல் வதைத்தவேல் சுந்தரத்தை தரும்வேல்
பாரதனை அளக்கும்வேல் பக்தியெல்லாம் தரும்வேல்
வீரவேல் வெற்றிவேல் ஞானவேல் சக்திவேல்
அழகுலே் பழகுவேல் ஆறுமுகன் ஏந்தும்வேல் (வேல்)

19. ஊரெல்லாம் பாரப்பா உன்கோவில் தானப்பா
உள்ளமெல்லாம் நீயப்பா உன்பேரு முருகப்பா (ஊரெல்லாம்)

பாரெல்லாம் உன்படைப்பு பழனிஒரு தனிசிறப்பு
நாளெல்லாம் உன்நினைப்பு நடப்பதெல்லாம் உன்தீர்ப்பு
குன்றெல்லாம் நீயப்பா குறத்திமண வாளனப்பா
குறைதீர்க்கும் வேலனப்பா குன்றக்குடி குமரனப்பா (ஊரெல்லாம்)

சேவற்கொடி நீயப்பா செந்தூரில் வீரனப்பா
பால்வடியும் முகமப்பா பார்க்கவேணும் பழனியப்பா
ஆறுபடைவீடப்பா அமர்ந்திருக்கும் அழகனப்பா
அங்கமெல்லாம் நீறப்பா ஆதரிக்கும் ஆண்டியப்பா (ஊரெல்லாம்)

20. அழைக்கட்டுமா சாமி அழைக்கட்டுமா – அந்த
ஆறுமுக வேலவனை அழைக்கட்டுமா – (அழை)

ஆறுபடை வீட்டோனை அழைக்கட்டுமா – அந்த,
ஆனைமுகன் தம்பியை அழைக்கட்டுமா
இனிய வடிவேலவனை அழைக்கட்டுமா – அந்த
இடும்பா யுதனையே அழைக்கட்டுமா (அழை)

ஈராறு கையோனை அழைக்கட்டுமா – அந்த
ஈசனுமை பாலனை அழைக்கட்டுமா
உள்ளம்கவர் கள்வனை அழைக்கட்டுமா – அந்த
உல்லாச குமரனை அழைக்கட்டுமா (அழை)

எட்டுக்குடி வேலவனை அழைக்கட்டுமா – அந்த
எங்கும் நிறைந்தவனை அழைக்கட்டுமா
ஏறுமயில் வாகனனை அழைக்கட்டுமா – அந்த
ஏழை பங்காளனை அழைக்கட்டுமா (அழை)

21. முத்தான முத்துகுமரா முருகையா வாவா
சித்தாடும் செல்வகுமரா சிந்தைமகிழ வாவா
வள்ளிமணாளா வடிவேலழகா வேலய்யா வாவா
கந்தாகடம்பா கதிர்வடிவேலா கந்தையா வாவா (முத்தான)

நீயாடும் அழகைகண்டு வேலாடி வருகுதய்யா
வேலாடும் அழகைகண்டு மயிலாடி வருகுதய்யா
மயிலாடும் அழகைகண்டு மனமாடி வருகுதய்யா
மனமாடும் அழகைகண்டு மக்கள் கூட்டம் பெருகுதய்யா (முத்தான)

பன்னீரால் நீராட்டி பட்டாடை உடுக்கவைத்து
சந்தனத்தால் சாந்தெடுத்து அங்கமெல்லாம் பூசிவைத்து
நீறுபூசி திலகமிட்டு நெஞ்சத்தில் உன்னைவைத்து
இன்று பூத்த மலரால் உன்னை அர்ச்சிப்பேன் வா முருகா (முத்தான)

22. காயத்திரி வாசி யல்லவா – என்னப்பனே
கந்தப்ப சுவாமி அல்லவா (காய)
எட்டுக்குடி வேல னல்லவா – என்னப்பனே
ஏழை பங்காளன் அல்லவா (காய)
பழனிமலை பால னல்லவா – என்னப்பனே
பக்தர்களின் வேல னல்லவா (காய)
குன்றகுடி குமர னல்லவா – என்னப்பனே
குறவள்ளி மணாள னல்லவா (காய)
காவடி பிரிய னல்லவா – என்னப்பனே
கண்கண்ட தெய்வ மல்லவா (காய)
அரோகரா கோஷ னல்லவா – என்னப்பனே
அண்டினோரை காப்ப னல்லவா (காய)
தைப்பூச மூர்த்தி யல்லவா – என்னப்பனே
தரணி போற்றும் முருக னல்லவா (காய)

23. மண்ணானாலும் திருச்செந்தூரில் மண்ணாவேன் – ஒரு
மரமானாலும் பழமுதிர்ச் சோலையில் மரமாவேன் (மண்)
கல்லானாலும் தணிகை மலையில் கல்லாவேன் கருங்(கல்) பசும்
புல்லானாலும் முருகன் அருளால் பூவாவேன் – நான் (மண்)

பொன்னானாலும் வடிவேல் செய்யும் பொன்னாவேன் – பனி
பூவானாலும் சரவண பொய்கையில் பூவாவேன் (பொன்)
பேச்சானாலும் திருப்புகழ் விளக்க பேச்சாவேன் தமிழ் (பேச்) மனம்
பித்தானாலும் முருகன் அருளால் முத்தாவேன் – நான் (மண்)

சொல்லானாலும் ஓம்மென்றொலிக்கும் சொல்லாவேன் – பழ
சுவையானாலும் பஞ்சாமிர்த சுவையாவேன் (சொல்)
அருள் உண்டானாலும் வீடும் பேறும் உண்டாவேன் (அருள்)
தனி உயிரானாலும் முருகன் அருளால் பயிராவேன் – நான் (மண்)

24. முத்தைத்தரு பத்தித் திருநகை
அத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்துக் குருபர எனவோதும்

முக்கட்பர மற்குச் சுருதியின்

முற்பட்டது கற்பித் திருவரு
முப்பத்துமு வர்க்கத் தமரரு மடிபேணப்;

பத்துத்தலை தத்தக் கணை தொடு
ஒற்றைக்கிரி மத்தைப் பொருதொரு
பட்டப்பகல் வட்டத் திகிரியி லிரவாகப்

பத்தற்கிர தத்தைக் கடவிய
பச்சைப்புயல் மெச்சத் தகுபொருள்
பக்ஷத்தொடு ரக்ஷித் தருள்வது மொருநாளே;

தித்தித்தெய வொத்தப் பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப் பயிரவி
திக்கொட்கந டிக்கக் கழுகொடு கழுதாடத்

திக்குப்பரி அட்டப் பயிரவர்
தொக்குத்தொகு தொக்குத் தொகுதொகு
சித்ரப்பவு ரிக்குத் த்ரிகடக எனவோதக்

கொத்துப்பறை கொட்டக் களமிசை
குக்குக்குகு குக்குக் குகுகுகு
குத்திப்புதை புக்குப் பிடியென முதுகூகை

கொட்புற்றெழ நட்பற் றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக் குலகிரி
குத்துப்பட வொத்துப் பொரவல பெருமாளே

25. முருகா என்றழைக்கவா முத்துக்குமரா என்றழைக்கவா
கந்தா என்றழைக்கவா கதிர்வேலா என்றழைக்கவா
எப்படி அழைப்பேன் உன்னை எங்கே காண்பேன் (முருகா)

அறுபடை வீடெங்கும் தேடி வந்தேனப்பா
அங்கெங்கும் காணாமல் வாடி நின்றேனப்பா
அருணகிரி மனம்நொந்து தவித்தபோது – நீ
அருள் கொடுத்து ஒளியாக நின்றாயப்பா (முருகா)

நாவினில் வேலால் எழுதிச் சென்றாயப்பா
நற்றமிழ் இசையைப்பாட வைத்தாயப்பா – அந்த
பாவினிலே மனம்உருகி நின்றாயப்பா – உலகுக்கு
பண்புமிகும் தமிழ்க்கவியை ஈன்றாயப்பா (முருகா)

முருகாற்றுப் படைபாடி நக்கீரர் அழைக்க – நீ
முன்தோன்றி வழியமைத்துக் கொடுத்தாயப்பா
கலிவெண்பா படைத்து குருபரர் நினைத்தாரப்பா – நீ
கந்தவேலாய் வந்துநின்று சிரித்தாயப்பா (முருகா)

நாளெல்லாம் உன்னைப்பாடு கின்றேனப்பா – முருகா
நல்லருள் பொழிந்து ஆடி வருவாயப்பா
கண்கள் குளிர வந்து நின்றாயப்பா
காலமெல்லாம் தமிழ் கனியாய் இருந்தாயப்பா (முருகா)

26. உன்னையும் மறப்பதுண்டோ மறந்தால்

உள்ளத்தில் அமைதியுண்டோ – முருகா
பயிர் மண்ணையும் மறப்பதுண்டோ மறந்தால்
மலரும் மணமும் உண்டோ முருகா – நான் (உன்னை)

கண்ணையும் மறந்திருப்பேன் – கையுடன்
கால்களும் மறந்திருப்பேன் முருகா
எண்ணத்தின் ஒளிச்சுடரே – உன்னை
எப்படி நான் மறந்திருப்பேன் – நான் (உன்னை)

பொன் பொருள் மறந்திருப்பேன்
இகழும் புகழும் மறந்திருப்பேன் – முருகா
என் உயிரான உன்னை – மறந்தால்
எவ்விதம் வாழ்ந்திருப்பேன் – நான் (உன்னை)

நித்திய நதி மறந்திருப்பேன் – வீடும்
நிலமும் மறந்திருப்பேன் – வடிவேல்
ஏந்திய உனை மறந்தால் – உலகில்
எத்தனை நாள் இருப்பேன் – நான் (உன்னை)

27. ஆயிரம் பாட்டெழுதி அத்தனைக்கும் பொருளெழுதி
பாயிரமும் எழுதி வந்தேன் – முருகா உனைப்
பார்த்து விட்டேன் பாட்டெதற்கு (ஆயிரம்)

கோடி பணம்திரட்டி கொட்டிவைக்க வீடுகட்டி
பாடுபட்டு அலைந்தேன் நான்– முருகா உன்னை
பார்த்து விட்டேன் வீடெதற்கு (ஆயிரம்)

ஆவி நிலைக்குமென்று ஆடுகின்ற கோடியில்ஓர்
பாவியென துடிக்கின்றேன் நான் – முருகா உன்னை
பார்த்து விட்டேன் துயர் எதற்கு (ஆயிரம்)

வேதங்கள் நான் அறிந்தேன் விளக்கம் கேட்டறிந்தேன்
பாதைகளின் முடிவே ஓம்–முருகா உன்னை
பார்த்து விட்டேன் நூல் எதற்கு . (ஆயிரம்)

28. அழகென்ற சொல்லுக்கு முருகா – உந்தன்
அருளின்றி உலகிலே பொருளேது முருகா
கனிக்காக மனம்நொந்த முருகா – முக்
கனியான தமிழ்தந்த தெய்வமே முருகா (அழ)

ஆண்டியாய் நின்றவேல் முருகா – உனை
அண்டினோர் வாழ்விலே இன்பமே முருகா
பழம்நீ அப்பனே முருகா – ஞானப்
பழமுன்னை அல்லாது பழமேது முருகா (அழ)

குன்றுதோறும் குடிகொண்ட முருகா –பக்தர்
குறை நீக்கும் வள்ளல் நீ அல்லவோ முருகா
சக்தி உமை பாலனே முருகா – மனித
சக்திக்கு எட்டாத தத்துவமே முருகா (அழ)

ப்ரணவப் பொருள் கண்டதிரு முருகா
பரம்பொருளுக்கு பொருளான தேசிகா முருகா

அரஹரசண்முகா முருகா என்றே
பாடுவோர் எண்ணத்தில் ஆடுவாய் முருகா (அழ)

அன்பிற்கு எல்லையோ முருகா – உந்தன்
அருளுக்கு எல்லைதான் இல்லையே முருகா
கண்கண்ட தெய்வமே முருகா – எந்தன்
கலியுக வரதனே அருள்தாரும் முருகா (அழ)

29. தெய்வத்தமிழ் தெய்வமய்யா
அருள் செய்யும் திருமுருகய்யா – ஐயா (தெய்வ)

சிரிக்கின்ற சிரிப்பெல்லாம் சிரிப்பாகுமா – உனைத்
தெரியாத உயிரெல்லாம் உயிராகுமா
பறிக்கின்ற மலரெல்லாம் மணம்வீசுமா – எனைப்
படைத்தபின் துணைசெய்ய மனம்கூசுமா (தெய்வ)

மயிலேறி விளையாடும் அழகோடுவா – கண்
மலராட வடிவேலின் துணையோடுவா
மயிலோடும் சிவஞானப் பழமாகவா – தமிழ்ப்
பணிவோடு உறவாடும் கலையாகவா (தெய்வ)

30. அறுபடை வீடுகொண்ட திருமுருகா
திரு முருகாற்றுப்படை தன்னிலே வருமுருகா முருகா (அறுபடை)
பாட்டுடைத் தலைவன்என்று உன்னைவைத்தேன் – உன்னை
பாடித் தொழுவதற்கே என்னை வைத்தேன் – முருகா (அறுபடை)

வேண்டிய மாம்பழத்தை கணபதிக்கு – அந்த
வெள்ளிப் பனித்தலைவர் கொடுத்தற்கு
ஆண்டியின் கோலமுற்று மலைமீது – நீ
அமர்ந்த பழனிஒரு படைவீடு (அறுபடை)

ஒரு பெரும் தத்துவத்தின் சாரெடுத்து – நல்ல
ஒமெனும் மந்திரத்தின் பொருளுரைத்து
தந்தைக்கு உபதேசம் செய்தமலை – எங்கள்
தமிழ்திரு நாடுகண்ட சுவாமிமலை (அறுபடை)

தேவர் படைதலைமை பொறுப்பெடுத்து – தோளின்
தினவெடுத்து சூரன் உடல் கிழித்து
கோவில் கொண்டே அமர்ந்த உருவீடு – கடல்
கொஞ்சும் செந்தூரிலுள்ள படைவீடு (அறுபடை)

குறுநகை தெய்வானை மலரோடு உந்தன்
குலமகளாக வரும் நினைவோடு
திருமணக்கோலம் கொண்ட ஒருவீடு – வண்ண
திருப்பரங் குன்றமென்னும் படைவீடு (அறுபடை)

தேவர் குறைதவிர்த்து சினந்தணிந்து – வள்ளி
தெள்ளு தமிழ்குறத்தி தனைமணந்து
காவல் புரியவென்று அமர்ந்தமலை – எங்கள்
கன்னித் தமிழர்திருத் தணிகைமலை (அறுபடை)

கள்ளமில்லாமல் வரும் அடியவர்க்கு – நல்ல
காட்சிதந்து கந்தன் கருணைதந்து

வள்ளி தெய்வானையுடன் அமர்சோலை – தங்க
மயில் விளையாடும் பழமுதிர்சோலை – முருகா (அறுபடை)

31. நான் உன்னை மறந்தாலும் நீ என்னை மறக்கவில்லை
ஆவினன் குடிவாழும் பெருமானே என் ஆவியிலே கலந்த முருகோனே (நான்)

தேனிருக்கும் பாலிருக்கும் தெவிட்டாத கனியிருக்கும் (தேனி)
ஆனாலும் மாறாமல் உன்அன்பொன்றே இனித்திருக்கும் (ஆனாலும்)
சுவாமிமலை வீற்றிருக்கும் குருநாதா – என்
சஞ்சலங்கள் தீர்க்கவரும் குருநாதா (நான்)

வாழ்வினையை முறித்திடவே ஓடிவரும் உன்கை வேல்
ஒரு கோடி துயர் வரினும் தடுத்து நிற்கும் நீலமயில்
வாழ்வதற்கு துணை உந்தன் திருநாமம் – என்றும்
வற்றாத பொய்கை அது கதிர்காமம் (நான்)

ஆறுபடை வீடுதனில் அமர்ந்திருக்கும் அழகேசா
அன்பர் மனக்கோவிலிலே வந்துநிற்கும் குமரேசா
நீயிருக்க எனக்கென்ன குறையய்யா – திரு நீறிருக்க பயமில்லை முருகையா
ஏழுகடல் தாண்டியொரு இசைக்கடலில் என்பயணம்
காலமெல்லாம் தொடரவைத்தாய் வேலவனே
தாய்தந்தை குருதெய்வம் யாவருமே நீதானே
தாள்மலர்கள் தலைவைத்தேன் தூயவனே – உன்(தாள்)...... (நான்)

32. முருகா உன்பாட்டெல்லாம் இனிக்கின்றது – அங்கே
முத்தான தமிழ் வந்து மணக்கின்றது
உருகாத மனம் இங்கே காணவில்லையே – கண்ணீர்
பெருகாத விழியேதும் தோண வில்லையே (முருகா)

துதிப்போர்க்கு வல்வினையும் போகுமென்றே – சஷ்டி
கவசத்தைப் பாட பக்தி பெருகுதய்யா
நாளென்ன கோளென்ன செய்யுமென்றே – கந்தர்
அலங்காரம் பாட மனம் உருகுதையா (முருகா)

அருணகிரி திருப்புகழை பாடுகையிலே... மனதில்
ஆனந்த உணர்ச்சியெல்லாம் கூடுதய்யா
கருணைமிகு நின்னருளை நாடிடவே உந்தன்
கழலடியை விழிகள் என்றும் தேடுதய்யா (முருகா)

33. ஒரு நாள் உன் திருக்கோயில் வருவேனே – சிவ
குமரா உன் மலர்பாதம் மறவேனே
குறையாவும் தீர்க்கின்ற குருநாதா – என்
அறியாமை நினைக்கண்டு அகலாதா (ஒரு நாள்)

தவமேதும் செய்யாத சிறுபிள்ளை நான் – என்
தாயாகித் தமிழ்தந்து வளர்த்தாயே நீ
ஒரு கோடிக் கவிபாடி உனை போற்றுவேன் – உன்
அருளாலே வருகின்ற துயர் மாற்றுவேன் (ஒரு நாள்)

வண்டூதும் மலர்ச்சோலை மருதாசலம் – நான்
வந்துன்னைக் காண்கின்ற வழி காட்டுவாய்
தண்டூன்றும் தனிக்கோலம் விருந்தாகுமே – நீ

தருகின்ற ஞானப்பால் மருந்தாகுமே (ஒரு நாள்)

34. தணிகைமலைப் படிகளெல்லாம் திருப்புகழ் பாடும் – அங்கே
தனைமறந்து மயில்களெல்லாம் நாட்டிய மாடும் (தணிகை)

கனிவுடனே முருகவேளும் சிரித்திடும் காட்சி – அதை
காண்பவர்க்கு எந்தநாளும் இல்லையே வீழ்ச்சி (தணிகை)

விளங்கிவரும் சேவற்கொடி விண்ணதிலாடும் – அது
வேல்முருகன் அடியவர்தன் வினையினைச்சாடும்
குலுங்கிவரும் தென்றலங்கே இசைமுடிக்கும் – திரு
குமரன் பேர்சொல்லி சொல்லி நம்மை மயக்கும் (தணிகை)

ஆடிவரும் காவடிகள் தேடிவரும் – வரும்
அன்பர் மனம் நினைத்ததெல்லாம் கூடிவரும்
பாடிவரும் பக்தருக்கு பசுமை வரும் – அவரை
நாடிநிதம் நன்மையெல்லாம் ஓடிவரும் (தணிகை)

35. பால் மணக்குது பழம் மணக்குது பழனிமலையிலே (பால்)
மலையைசுற்றி முருகன்நாமம் எங்கும் ஒலிக்குதாம் – பழனி (மலையை)
முருகா உன்னை தேடிதேடி எங்கும் காணேனே – அப்பப்பா (முருகா)
எங்கும் தேடி உன்னைகாணா மனமும் வாடுதே (எங்கும்) (முருகா)

தேன் இருக்குது தினை இருக்குது தென்பழனியிலே
முருகா – முருகா – முருகா – முருகா (தேன்)
தெருவை சுற்றி காவடிஆட்டம் தினமும் நடக்குதாம்
பால்காவடி பன்னீர்காவடி, புஷ்பக் காவடியாம் (பால்)
சர்க்கரைகாவடி, சந்தணகாவடி, சேவற்காவடியாம்
சர்ப்பகாவடி, மச்சகாவடி, புஷ்பகாவடியாம்
மலையைசுற்றி காவடிஆட்டம் தினமும் நடக்குதாம்
வேலனுக்கு அரோகரா, முருகனுக்கு அரோகரா கந்தனுக்கு அரோகரா,
அதோ வாராண்டி பழனி ஆறுமுகம்தாண்டி – அவன்
போனாபோராண்டி, முருகன் தானாவாராண்டி
வேல்இருக்குது மயில்இருக்குது விராலிமலையிலே (வேல்) அந்த (விராலி)
மலையைசுற்றி மயிலின்ஆட்டம் தினமும் நடக்குதாம் விராலி (மலையை)
முருகா உன்னை தேடிதேடி எங்கும் காணேனே – அப்பப்பா (முருகா)

36. அன்பருக்கு அன்பனே நீ வா வா முருகா
ஆறுபடை வீடுடையாய் ,, ,, ,,
இன்பமய ஜோதியே நீ ,, ,, ,,
ஈசன் உமை பாலகனே ,, ,, ,,
உரக நாபன் மருகனே ,, ,, ,,
ஊமைக்கு அருள் புரிந்தவனே ,, ,, ,,
எட்டுக்குடி வேலவா நீ ,, ,, ,,
ஏறுமயில் ஏறியே நீ ,, ,, ,,
ஐங்கரனுக்கு இளையவனே ,, ,, ,,
அகில லோக நாயகனே ,, ,, ,,
ஒய்யாரி வள்ளி லோலா ,, ,, ,,
ஓங்காரத் தத்து வமே ,, ,, ,,
ஔவைக்குப தேசித்தவா ,, ,, ,,

ஆறுமுக வேலவனே ” ” ”

37. சுட்ட திருநீறெடுத்து தொட்ட கையில் வேலெடுத்து
தோகை மயில் மீதமர்ந்த சுந்தரம் – அந்த
கட்டழகு கொண்டதொரு......
கந்தனை காட்டுவது ஆறெழுத்து மந்திரம் (சுட்ட)

ஆறெழுத்து மந்திரத்தில் ஆடும்ஒரு சுந்தரத்தை
அந்திபகல் சிந்தனைசெய் நெஞ்சமே – அந்த
ஆறெழுத்து மந்திரத்தை யாரெடுத்து ஓதிடினும்
ஆறுமுகம் வந்து நிற்கும் முன்னமே (சுட்ட)

கந்தரடியை நினைத்து சங்கத்தமிழ் மாலைகொண்டு
வந்தனை செய்வோர்கள் மனம் ஆறுமே
பரம் குன்றுவளர் நின்றதொரு கண்டுவழங்கும்
நின்றுவளர் செல்வம்பதி னாறுமே (சுட்ட)

38. முதல் வணக்கம் எங்கள் முருகனுக்கே
முன்னின்று காக்கும் இறைவனுக்கே
புகழ் மணக்கும் அவன் பெயர் சொன்னால்
பூச்சொரிந்தே மனம் பாடிவரும் (முதல்)

சிம்மாசனம் போன்ற மயிலாசனம்
செங்கோலும் அவன்கையில் சிரிக்கின்ற வேல்
அடியார்தம் இதயங்கள் குடிமக்களே
அருள் ஆட்சி எல்லாமே அவன் ஆட்சியே (முதல்)

முதல்சங்கம் உருவாக மொழியானவன்
இடைச்சங்கம் கவிபாட புகழானவன்
கடல்கொண்டும் அழியாத தமிழானவன்
கடைச்சங்கம் வாழ்வுக்கும் வழியானவன் (முதல்)

39. நீயல்லால் தெய்வமில்லை – எனது
நெஞ்சே நீவாழும் எல்லை – முருகா
தாயாகி அன்பு பாலூட்டி வளர்த்தாய்
தந்தையாய் நின்றே சிந்தைகவர்ந்தாய் (நீ)

குருவாகி எனக்கு நல்லிசை தந்தாய் – ஞானக் (குரு)
திருவே நீஎன்றும் என்உள்ளம் நிறைந்தாய்
நாயேனை நாளும் நல்லவனாக்க
ஓயாமல் ஒளியாமல் உன்னருள் தந்தாய் (நீ)

வாயாரப் பாடி மனமார நினைந்து
வணங்கிடலே எந்தன் வாழ்நாளில் இன்பம்
தூயாமுருகா மாயோன் மருகா – உன்னை
தொழுவதொன்றே இங்கு யான் பெற்ற இன்பம் (நீ)

40. நீயே என் வாழ்வுக்கு கதியானவன்
நிலையாக எனைக்காக்கும் துணையானவன் (நீ)
தாயாகி எனையாளும் தமிழ்த் தெய்வமே
தண்ணமுதாய் இனிக்கும் தனித் தெய்வமே (நீயே)

காயான உள்ளங்களைக் கனியாக்குவாய்

கந்தா என்றால் போதும் பிணி போக்குவாய்
வாயார உன்னைப் பாட வளங்கூட்டுவாய்
வாழ்த்தித் துதிப்போர்க்கு வழிகாட்டுவாய் – முருகா (நீயே)

h h h h h

## லோக மாதா ஆதிபராசக்தி தேவியே................ சரணம் ஐயப்பா

1. ஊன் ஆனாய் உயிர் ஆனாய் உயிரில் ஊறும் உணர்வானாய்
வான் ஆதி ஐம்பூத வகை எல்லாம் நீ ஆனாய்
தேன் ஆரும் மலர்க் கொன்றைச் சிவம் என்னும் பொருள் ஆனாய்
நான் ஆனாய் உயிர்க்கு உயிரே ஞானப் பேரொளி உமையே!

2. உதிக்கின்ற செங்கதிர் உச்சித்திலகம் உணர்வுடயோர்
மதிக்கின்ற மாணிக்கம் மாதுளம் போது மலர்க்கமலை
துதிக்கின்ற மின்கொடி மென்கடிக் குங்கும தோயமென்ன
விதிக்கின்ற மேனி அபிராமி என்றன் விழுந்துணையே.

3. ஆத்தாளை எங்கள் அபிராம வல்லியை அண்டம் எல்லாம்
பூத்தாளை மாதுளம்பூ நிறத்தாளைப் புவிஅடங்கக்
காத்தாளை அங்குச பாசம் குசும் கரும்பும் அங்கை
சேர்த்தாளை முக்கண்ணியைத் தொழுவார்க்கொரு தீங்கில்லையே.

4. கலையாத கல்வியும் குறையாத வயதுமோர்
கபடு வாராத நட்பும்
கன்றாத வளமையுங் குன்றாத இளமையும்
கழுபிணி யிலாத உடலும்
சலியாத மனமும் அன்பகலாத மனைவியும்
தவறாத சந்தானமும்
தாழாத கீர்த்தியும் மாறாத வார்த்தையும்
தடைகள் வாராத கொடையும்
தொலையாத நிதியும் கோணாத கோலுமொரு
துன்பமில்லாத வாழ்வும்
துய்யநின் பாதத்தில் அன்பும் உதவிப்பெரிய
தொண்டரொடு கூட்டு கண்டாய்
அலையாழி அரிதுயிலு மாயனது தங்கையே
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி
அருள்வாயே! அபிராமியே!

5. தந்திரமறியோம், முறைசெய் மந்திரமறியோம் மிகுதவங்களோடு
தேசுமறியோம் தன்மலரெடுத்து உனதடியில் அர்ச்சிக்க அறியோம்
சிந்தையுறு பக்தியாய்ப் போற்றவுமறியோம் செந்தமிழை ஓதவுமறியோம்
சித்தம்வைத்து எமைக்காப்பது உந்தனுக் கடனே யம்மா செப்பினோம்,
செப்பினோம், எம்தாயே, சந்திரசேகரி, கௌரி, ஜடாதரி,
முக்கண்ணி, சாம்பவி, வராகி, நீலதாயிமகமாயி, சதுர்வேக கிருபாகரி,
சாமுண்டி மகாபலி, பக்திமகிழ்வுடன் முத்தி தாண்டவமாடும் பூம்பாத
கமலினீ, ஜெகமீதில் உற்பவித்தோங்கும், மலர் யாவையும் எண்ணமிட்டு
எந்நேரமும் உன்செங்கமல மலர்ப்பாத மீதில் அர்ச்சித்து, பூஜித்து

அடிவணங்க எமதுடல் பொருள் ஆவியாவையும் உனக்கடிமையாக்கி
உனையே யெண்ணி உறவாடும் இந்த எளியோர்களைக் காத்தருளுமம்மா!
சாம்பவி, உமையே, தாயே, பராசக்தி அம்மையே உன் பொன்னடிகளுக்கே
சரணம், சரணம் அம்மா!

h h h h h

1. திருவடி தாரும் அம்மா தேவி மீனாக்ஷி (திருவடி)

திருமால் ப்ரிய சோதரி த்ரிகுணாதீத ஹ்ரீம்காரி
ஜெகம் புகழும் உதாரி தேஜோமய சரீரி (திருவடி)

எத்தனையோ ஜென்மங்கள் நான் எடுத்தென்ன சுகம் கண்டேன்
இறப்பதும் பிறப்பதும் எனது தொழிலாய்ப் பூண்டேன்
மித்யையாகிய ஜெக போகம் நான் இனி வேண்டேன்
விண்ணோர் போற்ற மதுரையில் விளங்கும் உன்னைக் கண்டேன் (திருவடி)
சிலையதுபோல் உன் மனம் சிறிதும் இளகாததேனோ
தீன ரக்ஷகி என்று செப்பும் நாமமும் வீணோ
மலைமகளே தந்தையை மனதாயடைந்ததேனோ
மருதீச தாசன்மீது வஞ்சனை செய்வதேனோ (திருவடி)

2. அஞ்சாத செஞ்சடைச்சி மாகாளி
ஆதிசிவன் பத்தினியே திரிசூலி (அஞ்சாத)
கொஞ்சும் சதங்கைஒலி கேட்குதம்மா – உன்
கொடைகூத்துக் கண்டுமனம் குளிருதம்மா (அஞ்சாத)
திருச்சடையை அலங்கரிக்கும் ஆயிரம் நாகம் உன்
தேகமெல்லாம் விளையாடும் பலவகை நாகம் (அஞ்சாத)
செவ்வரளி மாலை போட்டு மாகாளி உனக்கு
செய்திடுவேன் பூஜைதனை திருசூலி (அஞ்சாத)
முல்லைப்பூ மாலை போட்டு மாகாளி உந்தன்
முன்நின்று வணங்கிடுவோம் திரிசூலி (அஞ்சாத)
மல்லிகைப்பூ மாலை போட்டு மாகாளி உந்தன்
மலரடியை தொழுதிடுவோம் திரிசூலி (அஞ்சாத)
வையகம் தன்னிலேதான் மாகாளி உன்னை
வணங்காத பேர்களில்லை திரிசூலி (அஞ்சாத)
ஆயிரம் கண்ணுடையாள் மாகாளி அம்மா
அன்பர்களை ஆதரிப்பாய் திரிசூலி (அஞ்சாத)
வடக்குவாசல் செல்விஅம்மா மாகாளி உன்னை
வணங்காத பேர்களில்லை திரிசூலி (அஞ்சாத)
தஞ்சமென்றால் அருள்தரும் தாயே யம்மா
கொஞ்சம் கண்திறந்து எங்களைநீ பாரு மம்மா (அஞ்சாத)

3. ஆடித்தேர் ஓடுதையா – வேற்காடு ஆலயத்தில்
அன்னை கருமாரியவள் அலங்கார பவனிவர (ஆடி)

நாடிவரும் அடியவர்க்கே நல்ல வரம் தந்திடுவாள்
தேடிவரும் அன்பருக்கே தரிசனமே தந்திடுவாள்
பாடிவரும் பக்தர்களைப் பரிவுடனே காத்திடுவாள்
கோடிகோடி இன்பம்தனையே குறைவிலாமல் கொடுத்திடுவாள் (ஆடி)

சின்னத்தேர் ஒன்றில் முன்னவன் கணபதியும் முன் செல்ல
மின்னும் வண்ணத்தேர் ஒன்றில் வேலவனும் பின் செல்ல
பொன் வாளுடன் மதுரை வீரனும் வெள்ளித்தேர் ஏறிச்செல்ல
அன்னைசக்தி தங்கத் தேரில் அழகாகபவனிவர (ஆடி)

தங்கமேனி தளதளக்க தாமரைபோல் முகம்மலர
மங்கையவள் முடிதனிலே மணி மகுடம் ஜொலி ஜொலிக்க
சங்குபுஷ்பம் வில்வம் துளசி தும்பைஅவளை அலங்கரிக்க
தங்கையுடன் மரகதத்தேரில் மாதவனும் சேர்ந்துவர (ஆடி)

4. அன்னை உருவமம்மா ஆதிபரா சக்தியம்மா
ஐயப்பனை கண்டுவர அருள்வரம் தாருமம்மா (அன்னை)

காசியிலே வீற்றிருக்கும் விசாலாட்சி தாயேயம்மா
காந்தமலை நாதனையே காணவரம் தாருமம்மா
காஞ்சியிலே வீற்றிருக்கும் காமாட்சி தாயேயம்மா
கண்கண்ட தெய்வத்தையே காணவரம் தாருமம்மா (அன்னை)

கன்னியாகுமரியிலே பகவதியே தாயேயம்மா
கலியுக வரதனையே காணவரம் தாருமம்மா
இருக்கன்குடி மாரியம்மா இன்னல்களை தீருமம்மா
இருமுடிகள் தாங்கிவர அருள்வரம் தாருமம்மா (அன்னை)

சமயபுர மாரியம்மா சடுதியிலே வாருமம்மா
சங்கரன் மைந்தனையே காணவரம் தாருமம்மா
மேலச்செவல் வீற்றிருக்கும் சௌந்தரி அம்மன் தாயேயம்மா
பம்பையின் பாலனையே காணவரம் தாருமம்மா (அன்னை)

நயினார்குளம் வீற்றிருக்கும் முப்பிடாதி தாயேயம்மா
வன்புலி வாகனனை காணவரம் தாருமம்மா
நெல்லையில் வீற்றிருக்கும் காந்திமதி தாயேயம்மா
நெய்யாபிஷேகம் செய்துவர அருள் வரம் தாருமம்மா (அன்னை)

பிள்ளைகுளம் வீற்றிருக்கும் தெக்ஷண மாகாளி தாயேயம்மா
சபரிமலை சென்றுவர அருள் வரம் தாருமம்மா (அன்னை)

5. மாங்காடு காமாக்ஷி மாமதுரை மீனாக்ஷி
வேற்காடு கருமாரி சமயபுரம் மகமாயி (மாங்)

எத்தனை ஊரம்மா எத்தனை பேரம்மா
அத்தனை உயிர்களையும் காத்தருளும் தேவியம்மா (மாங்)

ஆயிரம் கண்ணுடையாள்
ஆயிரம் பெயருடையாள்
சரணமென்று வந்தாலே
அபயவரம் தந்திடுவாள் (மாங்)

மங்கையர்க்கு மனம் போலே
மாங்கல்யவாழ் வளிப்பாய்
மங்களமாய் கொலுவிருக்கும்
மாங்காடு காமாக்ஷி (மாங்)

உலகமெனும் கடலினிலே
துடுப்பில்லா படகினைப்போல

துன்பநிலை சேர்க்காதே
தூயவளே கருமாரி (மாங்)

சோதனை போதுமம்மா
வேதனை தீருமம்மா
சிவசக்தி நாயகியே
சிங்கார கருமாரி (மாங்)

6. சமயப்புரத்தாளே மாரியம்மா அம்மா
சங்கரியே எங்கள் முன்னே வாருமம்மா (சமயப்புர)

மல்லிகைச்சரம் தொடுத்து மாலையிட்டோம் அரிசி
மாவிளக்கு ஏற்றி வைத்து பொங்கலும் வைத்தோம்
துள்ளியே எங்கள் முன்னே வாருமம்மா அம்மா
தூயவளே என்தாயே மாரியம்மா (சமயப்புர)

பட்டுப் பீதாம்பரத்தில் தாவணியும் உனக்கு
பாவாடை சேலைகளும் கொண்டு வந்தோம்
எட்டுத் திசைகளையும் ஆள்பவளே அம்மா
ஈஸ்வரியே என்தாயே மாரியம்மா (சமயப்புர)

கத்திக் கதறுகிறோம் கேட்கலையோ தாயே
கல்லோதான் உன் மனது கரையலையோ
உலகெல்லாம் ஆடுதம்மா உன்சிரிப்பிலே எங்கள்
உமையவளே என்தாயே மாரியம்மா (சமயப்புர)

காலில் சலங்கையொலி காதைத் துளைக்குதம்மா
பாவாடை தாவணியும் தானாக ஆடுதம்மா
பூவாடை வீசுதம்மா பூமகளே உனக்கு
பாமாலை கொண்டு வந்தோம் பாருமம்மா (சமயப்புர)

7. காஞ்சியில் வாழும் காமாக்ஷிதாயே
சரணம் அம்மா தேவி சரணமம்மா

மதுரையில் வாழும் மீனாக்ஷி தாயே (சரணம்)
காசியில் வாழும் விசாலாக்ஷி தாயே ,,
மயிலையில் வாழும் கற்பகத் தாயே ,,
தில்லையில் வாழும் சிவகாமி தாயே ,,
திருக்கடவூரில் அபிராமி தாயே ,,
நெல்லையில் வாழும் காந்திமதி தாயே ,,
நாகையில் வாழும் நீலாயதாக்ஷி ,,
தஞ்சையில் வாழும் முத்துமாரித்தாயே ,,
சமயபுரத்தாளே! மகமாயி தாயே ,,
(திரு) வேற்காட்டில் வாழும் கருமாரி தாயே ,,
சோட்டானிக்கர பகவதி தாயே ,,
மாளிகைப்புரத்தம்ம மஞ்சமாதா தாயே ,,
எங்கள் இதயத்தில் வாழும் ராஜேஸ்வரி தாயே ,,
சரணம்மாதேவி சரணம்மா இங்கே
வரணும் அம்மா ஓடி வரணும் அம்மா

8. அம்ப பரமேச்வரி அகிலாண்டேச்வரி ஆதிபராசக்தி பாலயமாம்
ஸ்ரீ புவனேச்வரி ராஜராஜேச்வரி ஆனந்த ரூபிணி பாலயமாம்
பர்வதராஜ குமாரி பவானி பஞ்சயக்ருபயா மமதுரிதானி
தீனதயாபரி பூர்ண கடாக்ஷி த்ரிபுரஸுந்தரி தேவி மீனாக்ஷி
ஆரணி காரணி நாரணி நீலி பூரணி யோக புராதன சீலி
சங்கரநாயகி சாந்தமஹேச்வரி சுந்தரிவேத விதக்ஷணி கௌரி
பஞ்சதசாக்ஷர பஞ்சரவாஸினி குஞ்சிதபாத மஹேச விலாஸினி
காஞ்சிகாமாக்ஷி காசி விசாலாக்ஷி காருண்ய லாவண்ய அகிலாண்டேச்வரி(அம்ப)

9. திருவாரி தரும்கரங்கள் எங்கே எங்கே
(அஞ்சாத)கருமாரி உந்தன்அருளும் எங்கே எங்கே (திருவாரி)

கோவிலுக்கு வந்துஉன்னை காணவில்லையா – கரம்
கூப்பி நின்றுகுறை கூறவில்லையா
பூவெடுத்து பொன்னடியில் போடவில்லையா
ஜெகம்புகழும் உன்புகழை பாடவில்லையா – அம்மா (திருவாரி)

நாவினிக்க மந்திரங்கள் ஓதவில்லையா – உன்
நாமமதே வாழ்வுஎன்று நம்பவில்லையா
தேவிகருமாரி நீஎந்தன் அன்னையல்லவா – உன்
சேயின்துயர் தீர்ப்பதற்கு எண்ணமில்லையா – அம்மா (திருவாரி)

அழைக்கும்போது அன்னைஓடி வருவதில்லையா
அறிந்துகொண்டு அமுதும்பாலும் தருவதில்லையா
அழுதபொழுதில் தாயின்நெஞ்சம் துடிப்பதில்லையா – அள்ளி
அணைத்துகொண்டு அழுதகண்ணை துடைப்பதில்லையா அம்மா (திருவாரி)

மலர்களுக்கு மணத்தை நீயும் வழங்கவில்லையா – என்
வாழ்வில் மணம்வழங்கநீ விரும்பவில்லையா
உலகனைத்தும் கருணையாக நிலவும்கன்னியே – அதன்
உயிருக்கெல்லாம் உயிருமாகி உலவும்அன்னையே – அம்மா (திருவாரி)

10. சிவப்புச் சேலை கட்டிக்கிட்டு வேப்பிலையும் எடுத்துக்கிட்டு
வேற்காட்டு கருமாரி ஆடிவந்தாளாம் – அவள்
விருப்புடனே தொழுபவரின் வினைகளையே ஓடவைத்து
பொறுப்புடனே நம்மைப் பார்க்க ஆடி வந்தாளாம்
மாரியம்மா கருமாரியம்மா – மாரியம்மா கருமாரியம்மா (சிவப்பு)

சிறப்புடனே பவனி வந்து சிந்தையிலே குடிபுகுந்து
கருணைஉள்ளம் கொண்டுநம்மை காக்கவந்தாளாம் – அவள்
மரகதத்தில் திலகமிட்டு மரிகொழுந்து மலரெடுத்து
பிறப்பினிலே குடி கொண்டு பவனி வந்தாளாம்
மாரியம்மா – கருமாரியம்மா... மாரியம்மா – கருமாரியம்மா (சிவப்பு)

உன் வேப்பிலையும் திருநீறும் வேண்டியதை தந்திடுமே – யம்மா
காப்பதுன் திரிசூலம் கவலையாவும் தீருமே யம்மா
மாபெரும் பக்தர்கூட்டம் உன்சந்நிதியில் அம்மா
ஆபத்தில் உதவும் ஆயிரம்கைகள் எங்களை அணைத்திடுமே – யம்மா

தொட்டியங் குளம் தனில்வாழும் எங்கள்மகமாயி
மட்டில்லாத பாசம்கொண்ட எங்கள்மகமாயி

சட்டியிலே நெருப்பெடுத்து சதிராடும்மாரி
கட்டிக்காக்கும் அன்னைபோல காத்திடுவாள்மாரி (சிவப்பு)

11. கும்பம் வருது பாருங்கம்மா அது குலுங்கிவருது பாருங்கம்மா
கும்பமீது மாரியம்மா, கொலுவிருக்கா பாருங்கம்மா (கும்பம்)

சிங்கம் வருது பாருங்கம்மா அது சீறி வருது பாருங்கம்மா
சிங்கம்மீது மாரியவள் சிரித்து வாரா பாருங்கம்மா (கும்பம்)

ஆனை வருது பாருங்கம்மா அது அசைந்துவருது பாருங்கம்மா
ஆனைமேல மாரியவள் அமர்ந்து வாரா பாருங்கம்மா (கும்பம்)

தேரு வாரதை பாருங்கம்மா அது தெருவில் வாரதை பாருங்கம்மா
தேருக்குள்ளே மாரியவள் அமர்ந்துவாரா பாருங்கம்மா (கும்பம்)

நாகம் வாரதை பாருங்கம்மா அது ஊர்ந்துவாரதை பாருங்கம்மா
நாகம்மீது அமர்ந்துஅல்லோ மாரி வாரா பாருங்கம்மா (கும்பம்)

மாரிவாரதை பாருங்கம்மா உருமாறி வாரதை பாருங்கம்மா
வேப்பிலையை கையிலெடுத்து ஆடிவாராள் பாருங்கம்மா (கும்பம்)

12. ஆடும் கரகம்எடுத்து ஆடிவருவோம்
அம்பிகையே உன்புகழை பாடிவருவோம்
ஆடியிலே பூஜைவைத்து அடிபணிவோம்
ஆலயத்தின் வாசலிலே கூடிமகிழ்வோம்–ம்–ம்– (ஆடும்)

பூவால் கரகம்எடுத்து ஆடிவருவோம்
பூலோக மாரிஉனக்கு மாலையிடுவோம்
தங்கக் கரகம்எடுத்து ஆடிவருவோம்
வீரபத்ரகாளி உனக்கு பொங்கலிடுவோம்–ம்–ம்– (ஆடும்)

சமயபுர சக்திஉன்னை போற்றி வருவோம்
சந்தனக்கரகம் எடுத்து ஆடிவருவோம்
வேதபுர தேவிஉன்னை தேடிவருவோம்
வேப்பிலைக் கரகம்எடுத்து வணங்கிடுவோம்–ம்–ம்– (ஆடும்)

வெள்ளிக் கரகம் எடுத்து ஆடிவருவோம் – எங்க
கண்ணபுரம் சூலி உந்தன் அருள் பெறுவோம்
நார்த்தமலை அன்னை உனை நாடி வருவோம் – நல்ல
நன்மையெல்லாம் கூடிவர நலம் பெறுவோம் (ஆடும்)

13. மங்கள ரூபினி மதியிணி சூலினி மன்மத பாணியளே;
சங்கடம் நீக்கிடச் சடுதியில் வந்திடும் சங்கரி சௌந்தரியே;
கங்கண பாணியன் கனிமுகங் கண்டநல் கற்பகக் காமினியே;
ஜெயஜெய சங்கரி கௌரிக்ருபாகரி துக்க நிவாரணி காமாக்ஷி!

கானுறு மலரெனக் கதிர்ஒளி காட்டிக் காத்திட வந்திடுவாள்;
தானுறு தவ ஒளி தாரொளி மதியொளி தாங்கியே வீசிடுவாள்;
மானுறு விழியாள் மாதவர்மொழியாள் மாலைகள் சூடிடுவாள்;
ஜெயஜெய சங்கரி கௌரிக்ருபாகரி துக்க நிவாரணி காமாக்ஷி!

சங்கரிசௌந்தரி சதுர்முகன் போற்றிடச்சபையினில் வந்தவளே
பொங்கரி மாவினில் பொன்னடி வைத்துப் பொருந்திடவந்தவளே
எங்குலந்தழைத்திட எழில்வடிவுடனே எழுந்தநல் துர்க்கையளே

ஜெயஜெய சங்கரி கௌரிக்ருபாகரி துக்க நிவாரணி காமாக்ஷி!

தண தண தந்தண தவிலொலி முழங்கிட தண்மணி நீ வருவாய்
கண கண கங்கண கதிர்ஒளி வீசிடக் கண்மணி நீவருவாய்
பண பண பம்பண பறையொலி கூவிடப் பண்மணி நீவருவாய்
ஜெயஜெய சங்கரி கௌரிக்ருபாகரி துக்க நிவாரணி காமாக்ஷி!

பஞ்சமி பைரவி பர்வத புத்திரி பஞ்சநல் பாணியளே
கொஞ்சிடும்குமரனைக்குணமிகுவேழனைக் கொடுத்தநல் குமரியளே
சங்கடம் தீர்த்திடச் சமரது செய்தநற் சக்தியெனும் மாயே
ஜெயஜெய சங்கரி கௌரிக்ருபாகரி துக்க நிவாரணி காமாக்ஷி!

எண்ணியபடிநீ யருளிட வருவாய் எங்குல தேவியளே
பண்ணிய செயலின் பலனது நலமாய் பல்கிட அருளிடுவாய்
கண்ணொளி யதனால் கருணையே காட்டிக் கவலைகள் தீர்த்திடுவாய்
ஜெயஜெய சங்கரி கௌரிக்ருபாகரி துக்க நிவாரணி காமாக்ஷி!

இடர்தரு தொல்லை இனிமேல் இல்லை யென்றுநீ சொல்லிடுவாய்
சுடர்தரு அமுதே சுருதிகள் கூறி சுகமது தந்திடுவாய்
படர்தரு இருளில் பரிதியாய் வந்து பழவினை ஓட்டிடுவாய்
ஜெயஜெய சங்கரி கௌரிக்ருபாகரி துக்க நிவாரணி காமாக்ஷி!

ஜெயஜெய பாலா சாமுண்டீஸ்வரி ஜெயஜெய ஸ்ரீதேவி
ஜெய ஜெய துர்க்கா ஸ்ரீபரமேஸ்வரி ஜெயஜெய ஸ்ரீதேவி
ஜெயஜெய ஜெயந்தி மங்களகாளி ஜெயஜெய ஸ்ரீதேவி
ஜெயஜெய சங்கரி கௌரிக்ருபாகரி துக்க நிவாரணி காமாக்ஷி!

14. கற்பூர நாயகியே கனகவல்லி காளி மகமாயி கருமாரியம்மா
பொற்கோயில் கொண்ட சிவகாமியம்மா
பூவிருந்தவல்லி தெய்வ யானையம்மா
விற்கோவில் வேதவல்லி விசாலாட்சி
விழிக்கோல மாமதுரை மீனாட்சி
சொற்கோவில் நானமைத்தேன் இங்குதாயே
சுடராக வாழ்விப்பாய் என்னை நீயே – அம்மா (கற்பூர)

புவனம்முழு தாளுகின்ற புவனேஸ்வரி
புரமெரித்தோன் புறமிருக்கும் பரமேஸ்வரி
நவநவமாய் வடிவாகும் மகேஸ்வரி
நம்பினவர் கைவிளக்கே சர்வேஸ்வரி
கவலைகளைத் தீர்த்துவிடும் காளீஸ்வரி
காரிருளின் தீச்சுடரே ஜோதீஸ்வரி
உவமான பரம் பொருளே ஜகதீஸ்வரி
உன்னடிமை சிறியேனை நீஆதரி – அம்மா (கற்பூர)

உன்னிடத்தில் சொல்லாமல் வேறுஎந்த
உறைவிடத்தில் முறையிடுவேன் தாயேஎந்தன்
அன்னையவள் நீயிருக்க உலகில்மற்ற
அன்னியரைக் கெஞ்சிடுதல் முறையோ அம்மா
கண்ணீரைத் துடைத்துவிட ஓடிவாம்மா
காத்திருக்க வைத்திடுதல் சரியோ அம்மா

சின்னவனின் குரல் கேட்டுன் முகம்திருப்பு
சிரித்தபடி என்னைதினம் வழிஅனுப்பு – அம்மா (கற்பூர)

கண்ணிரண்டும் உன்னுருவே காணவேண்டும்
காலிரண்டும் உன்னடியே நாடவேண்டும்
பண்ணமைக்கும் நாவுனையே பாடவேண்டும்
பக்தியோடு கைஇரண்டும் கூட வேண்டும்
எண்ணமெல்லாம் உன்நினைவே ஆகவேண்டும்
இருப்பதெல்லாம் உன்னுடையதாக வேண்டும்
மண்ணளக்கும் சமயபுர மாரியம்மா
மகனுடைய குறைகளையும் தீருமம்மா – அம்மா (கற்பூர)

நெற்றியினில் குங்குமமே நிறைய வேண்டும்
நெஞ்சில் நின்திருநாமம் நிலவவேண்டும்
கற்றதெல்லாம் மென்மேலும் பெருகவேண்டும்
கவிதையிலே உன் நாமம் உருக வேண்டும்
சுற்றமெல்லாம் நீடுழி வாழவேண்டும்
ஜோதியிலே நீயிருந்து ஆளவேண்டும்
மற்றதெல்லாம் நானுனக்குச் சொல்லலாமா!
மடிமீது பிள்ளைஎன்னைத் தள்ளலாமா – அம்மா (கற்பூர)

அன்னைக்கு உபதேசம் செய்வதுண்டோ?
அருள்செய்ய இந்நேரம் ஆவதுண்டோ?
கண்ணுக்கு இமையன்றி காவலுண்டோ?
கன்றுக்கு பசுவன்றி சொந்தமுண்டோ?
முன்னைக்கும் பின்னைக்கும் பார்ப்பதுண்டோ?
முழுமைக்கும் நீஎந்தன் அன்னையன்றோ?
எண்ணைக்கும் விளக்குக்கும் பேதமுண்டோ?
என்றைக்கும் நானுந்தன் பிள்ளையன்றோ? – அம்மா (கற்பூர)

அன்புக்கே நானடிமை ஆகவேண்டும்
அறிவுக்கே என்காது கேட்கவேண்டும்
வம்புக்கே போகாமல் இருக்க வேண்டும்
வஞ்சத்தை என்நெஞ்சம் அறுக்க வேண்டும்
பண்புக்கே உயிர்வாழ ஆசைவேண்டும்
பரிவுக்கே நான்என்றும் பணிய வேண்டும்
என்பக்கம் இவையெல்லாம் இருக்க வேண்டும்
என்னோடு நீ என்றும் வாழவேண்டும் – அம்மா (கற்பூர)

கும்பிடவோ கையிரண்டும் போதவில்லை
கூப்பிடவோ நாவொன்றால் முடியவில்லை
நம்பிடவோ மெய்தன்னில் சக்தியில்லை
நடந்திடவோ காலிரண்டால் ஆகவில்லை
செம்பவள வாயழகி உன்னெழிலோ
சின்னஇரு கண்களுக்குள் அடங்கவில்லை
அம்பளவு விழியாளே உன்னையென்றும்
அடிபணியும் ஆசைக்கோர் அளவேயில்லை – அம்மா (கற்பூர)

காற்றாகி கனலாகி கடலாகினாய்!
கருவாகி உயிராகி உடலாகினாய்!

நேற்றாகி இன்றாகி நாளாகினாய்!
நிலமாகிப் பயிராகி உணவாகினாய்!
தோற்றாலும் ஜெயித்தாலும் வாழ்வாகினாய்!
தொழுதாலும் அழுதாலும் வடிவாகினாய்!
போற்றாத நாளில்லை தாயே உன்னை!
பொருளோடும் புகழோடும் வைப்பாய் என்னை! – அம்மா (கற்பூர)

15. அம்மா முத்துமாரி எங்கள் அழகு முத்துமாரி
ஆனந்தமாய் வீற்றிருப்பாள் அன்னை முத்துமாரி (அம்மா)

எங்கும் நிறைந்திருப்பாள் எங்கள் முத்துமாரி
ஈகையுள்ள தாயவளாம் எங்கள் முத்துமாரி (அம்மா)

வேப்பிலைக் காரியவள் எங்கள் முத்துமாரி
வேதங்களை உணர்ந்தவளாம் எங்கள் முத்துமாரி (அம்மா)

உலகனைத்தும் காப்பவளே எங்கள் முத்துமாரி – அம்மா
உன்பாதம் சரணடைந்தோம் எங்கள் முத்துமாரி (அம்மா)

16. உலகத்து நாயகியே எங்கள் முத்து மாரியம்மா
உன்பாதம் சரண்புகுந்தோம் எங்கள் முத்துமாரியம்மா
எங்கள்குல தெய்வமம்மா எங்கள்குறை தீருமம்மா
உந்தன்மலர் பாதமதில் கும்பிடுவோம் மாரியம்மா (உலகத்து)

ஆயிரங்கண் கொண்டவளாம் ஆயிமகமாயியவள்
ஆங்காரம் கொண்டவளாம் எங்கள் முத்துமாரியம்மா
கருமாரி என்ற பெயர் கேட்டாலே மெய் சிலிர்க்கும்
கண்டவர்க்கு வழிபிறக்கும் எங்கள் முத்துமாரியம்மா (உலகத்து)

வைரப்பூ மணிமுடியாள் எங்கள் முத்துமாரியம்மா
வைரஒளி கொண்டவளாம் எங்கள் முத்து மாரியம்மா
கைவங்கி கொண்டவளாம் எங்கள் முத்துமாரியம்மா
கையில் சூலம் கொண்டவளாம் எங்கள் முத்துமாரியம்மா (உலகத்து)

முத்துநவ ரத்தினத்தால் மூக்குத்தி பூண்டவளாம்
கொண்டைக்கிளி கொண்டவளாம் எங்கள் முத்துமாரியம்மா
இடையதினில் ஒட்டியாணம் கொண்டவளாம் எங்கள் முத்துமாரியம்மா
இருகையில் மலர்வளையம் கொண்டவளாம் எங்கள் முத்துமாரியம்மா (உலகத்து)

நீறணிந்து காண்பவளாம் எங்கள் முத்துமாரியம்மா
நெற்றியிலே குங்குமமும் அணிந்தவளாம் முத்துமாரியம்மா
குங்குமப் பிரியையவள் எங்கள் முத்துமாரியம்மா
குலம்விளங்க வழிசெய்வாள் எங்கள் முத்துமாரியம்மா (உலகத்து)

17. ஜெயஜெய தேவி ஜெயஜெயதேவி துர்க்காதேவி சரணம்
ஜெயஜெயதேவி ஜெயஜெயதேவி துர்க்காதேவி சரணம் (ஜெய)

பகவதிதேவி பர்வததேவி பலமிகுதேவி துர்க்கையளே
ஜெகமதுயாவும் ஜெயஜெயவெனவே சங்கரியுன்னைப் பாடிடுமே
ஹநஹந தகதக பசபசவெனவே தளிர்த்திடுஜோதி யானவளே!
ரோகநிவாரணி சோகநிவாரணி தாபநிவாரணி ஜெய துர்க்கா! (ஜெய)

தண்டினிதேவி தக்ஷிணிதேவி கட்கினிதேவி துர்க்கையளே
தந்தனதான தனதனதான தாண்டவநடன ஈச்வரியே
முண்டினிதேவி முனையொளிசூலி முனிவர்கள்தேவி மணித்தீவியளே
ரோகநிவாரணி சோகநிவாரணி தாபநிவாரணி ஜெயதுர்க்கா! (ஜெய)

காளினிநீயே காமினிநீயே கார்த்திகைநீயே துர்க்கையளே
நீலினிநீயே நீதினிநீயே நீர்நிதிநீயே நீர்ஒளியே
மாலினிநீயே மாதினிநீயே மாதவிநீயே மான்விழியே
ரோகநிவாரணி சோகநிவாரணி தாபநிவாரணி ஜெயதுர்க்கா! (ஜெய)

நாரணிமாயே நான்முகன்தாயே நாகினியாயே துர்க்கையளே
ஊரணிமாயே ஊற்றுதாயே ஊர்த்துவயாளே ஊர்ஒளியே
காரணிமாயே காருணிதாயே கானகயாளே காசினியே
ரோகநிவாரணி சோகநிவாரணி தாபநிவாரணி ஜெயதுர்க்கா! (ஜெய)

திருமகளானாய் கலைமகளானாய் மலைமகளானாய், துர்க்கையளே
பெருநிதியானாய் பேரறிவானாய் பெருவலியானாய் பெண்மையளே
நறுமலரானாய் நல்லவளானாய் நந்தினியானாய் நங்கையளே
ரோகநிவாரணி சோகநிவாரணி தாபநிவாரணி ஜெயதுர்க்கா! (ஜெய)

வேதமும்நீயே வேதியள்நீயே வேகமும்நீயே துர்க்கையளே
நாதமும்நீயே நாற்றிசைநீயே நாணமும்நீயே நாயகியே
மாதமும்நீயே மாதவம்நீயே மானமும்நீயே மாயவளே
ரோகநிவாரணி சோகநிவாரணி தாபநிவாரணி ஜெயதுர்க்கா! (ஜெய)

கோவுறைஜோதி கோமளஜோதி கோமதிஜோதி துர்க்கையளே
நாவுறைஜோதி நாற்றிசைஜோதி நாட்டியஜோதி நாச்சியளே
பூவுறைஜோதி பூரணஜோதி பூதநற்ஜோதி பூரணையே
ரோகநிவாரணி சோகநிவாரணி தாபநிவாரணி ஜெயதுர்க்கா! (ஜெய)

ஜெயஜெயசைல புத்திரிபிரஹ்ம சாரணிசந்திர கண்டினியே
ஜெயஜெயகூஷ் மாண்டினிஸ்கந்த மாதினி காத்யா யன்யயளே
ஜெயஜெயகால ராத்திரிகௌரி ஸித்திதாஸ்ரீநவ துர்க்கையளே
ரோகநிவாரணி சோகநிவாரணி தாபநிவாரணி ஜெயதுர்க்கா! (ஜெய)

18. உலகாளும் உமையவளே உன்பாதம் பணிந்து நின்றேன்
உன் புகழைக் கேட்டுஎந்தன் உள்ளமெல்லாம் உருகுதம்மா (உல)

வெள்ளிமலை வாசலிலே சிவனோடு சேர்ந்து நின்றாய்
விநாயகனும் வேலனும் விளையாட சிரிக்கின்றாய் (உல)

கன்னியா குமரியிலே கன்னியாய் நீ வளர்ந்தாய்
மதுரையிலே மீனாட்சியாய் மனங்கனிந்து பேசிடுவாய் (உல)

மயிலையிலே கற்பகமாய் மங்கலவாழ்வு தந்திடுவாய்
காஞ்சியிலே காமாட்சியாய் காலமெல்லாம் வாழ்ந்திருப்பாய்
கருணை செய்யும் தேவியாகி கண்ணொளியில் கலந்திருப்பாய்
காசியிலே விசாலாட்சியாய் கேட்டவரம் தந்தருள்வாய்
வீரதெய்வம் நீயாகி வெற்றிவழி காட்டிடுவாய் (உல)

19. வரமளித்து உலகமெல்லாம் வாழவைக்க வந்தவளே
கரம் குவித்து வேண்டுகின்றோம்
காத்திடுவாய் கருமாரி! காத்திடுவாய் கருமாரி!

மாரியம்மா எங்கள் மாரியம்மா! உன்னை
வணங்குகின்றோம் கருமாரியம்மா(உன்னை) (மாரி)

நேரினிலே நீ இருக்கும் கோவிலிலே வந்து (நேரி)
நெஞ்சம் அதில் உன் பதமே தஞ்சம் எனக்கொண்டு (நெஞ்)
கோரும் வரம்யாவும் தந்திடுவாய் என்று
கூறுதம்மா அன்பர்திரு கூட்டமெல்லாம் இன்று (கூறு) (மாரி)

திருச்சாம்பல் அணிந்து கொண்டால் மனமும் மகிழுதாம்
தீராத நோய்களையும் தீர்த்து வைக்குதாம் (திருச்சாம்பல்)
வருவார்தம் வாழ்வில் எல்லாம் வளமும் பெருகுதாம் (வரு).. உன்னை
வாழ்த்துகின்ற மனதில் என்றும் இன்பம் பெருகுதாம் (மாரி)

20. தாயே கருமாரி எங்கள் தாயே கருமாரி
தேவி கருமாரி துணை நீயே மகமாயி (தாயே)

ஆயிரம் கண்கள் உடையவளே ஆலயத்தின் தலைமகளே
கடைக்கண்ணாலே பார்த்தருள்வாய்! காலமெல்லாம் காத்தருள்வாய் (தாயே)

அன்னை உந்தன் பொன்னடியில் அனுதினமும் கூடிடுவோம்
அம்மா உந்தன் சந்நதியில் அனைவரும் ஒன்றாய் சரணடைவோம் (தாயே)

சிங்கமுக வாகனத்தில் சிங்கார மாரியம்மா (சிங்க)
வந்து வரம் தந்திடுவாய் எங்கள் குலதெய்வ மம்மா (தாயே)

21. அங்காளம்மா எங்கள் செங்காளம்மா
மங்களம் பொங்கிட மனதினில் வந்திடும்
மாரியம்மா கருமாரியம்மா (அங்காள)

சிங்காரி ஒய்யாரி செம்பவள கருமாரி
சிங்கத்தின் மீதேறி பவனிவரும் ஓங்காரி
மஞ்சளிலே நீராடி நெஞ்சினிலே உறவாடி
தஞ்சமென வந்தோமடி கெஞ்சுகிறோம் உன்னையடி (அங்காள)

நாகத்தில் நீயமர்ந்து காட்சிதரும் அலங்காரம்
நாயகியே உன்னைக்கண்டால் நாவில்வரும் ஓங்காரம்
பாசமென்னும் மலரெடுத்து ஆசையுடன் மாலைதொடுத்து
நேசமுடன் சூட்ட வந்தோம் மாசில்லாத மாரியம்மா (அங்காள)

தென்பொதிகை சந்தனம் எடுத்து மஞ்சளுடன் குங்குமம்சேர்த்து
பன்னீருடன் அபிஷேகம் செய்யவந்தோம் மாரியம்மா
அன்னையாக நீயிருந்து அருளெனும் பாலைத்தந்து
இன்பமுடன் வாழவைப்பாய் ஈஸ்வரியே மாரியம்மா (அங்காள)

22. செல்லாத்தா செல்ல மாரியாத்தா – எங்கள்
சிந்தையில் வந்து அருவிநாடி நில்லாத்தா
பொன்னாத்தா உன்னை காணாட்டா – இந்த
கண்கள் இருந்து என்னபுண்ணியம் சொல்லடி நீயாத்தா

உந்தன் பெருமையை இந்த உலகத்தில்
எடுத்து பாடாட்டா இந்த ஜென்மம் எடுத்து
என்ன பயனென்று சொல்லடி நீயாத்தா (செல்லாத்தா)

தென்ன மரத்தோப்பினிலே தேங்காய பறிச்சுக்கிட்டு (தென்)
தேடிவந்தோம் உந்தனையே சின்னாத்தா – நாங்கள் (தேடி)
நீ இளநீரை எடுத்துக்கிட்டு எங்ககுறை கேட்டுபுட்டு (இள)
வளமான வாழ்வுகொடு மாரியாத்தா – நல்ல
வழிதனையே காட்டிவிடு மாரியாத்தா (செல்லாத்தா)

பசும்பால கறந்துகிட்டு கறந்தபால எடுத்துகிட்டு
புற்றினிலே ஊற்ற வந்தோம் மாரியாத்தா – நாங்கள்
பக்தியுடன் ஊற்ற வந்தோம் மாரியாத்தா
நீ பாம்பாக மாறி நீபாம்பாக மாறி – அதை
பாங்காக குடித்துவிட்டு தானாக ஆடிவா நீ மாரியாத்தா
உந்தன் பெருமையை இந்த உலகத்தில் எடுத்து பாடாட்டா–இந்த
ஜென்மம் எடுத்து என்ன பயனென்று சொல்லடி நீயாத்தா (செல்லாத்தா)

ஆதிசக்தி மாதா கருமாரி மாதா – எங்கள் ஆதிசக்தி மாதா கருமாரி மாதா

23. கருணை வடிவானவளே கரம்குவித்தோம் அம்மா
கவலையெல்லாம் தீர்த்துஆளும் கருமாரி அம்மா
அருள் பொழியும் ஆயிரம் கண்ணுடையதாயே – உந்தன்
அடிமைகளைக் காத்தருள்வாய் அனுதினமும்நீயே (கருணை)

புரிந்தும் புரியாதுசெய்த பெரும்பிழைகள் எல்லாம்
பொருத்தருள வேண்டும்உந்தன் பொன்னடியை வணங்குகிறோம்
மகிமை பலசெய்து வரும் மகாசக்திஅன்னை – இந்த
மெய்தளத்தில் அவதரித்தாள் என்றவார்த்தை உண்மை (கருணை)

தேசமெல்லாம் போற்றிவரும் தேவிஎங்கள் கருமாரி
ஈஸ்வரியே இன்பமெல்லாம் தந்தருள்வாய் கருமாரி
மாசுகளை நீக்கிடுவாய் மங்கள குணநாரி
மனிதர்குல தெய்வமாய் விளங்கும் உபகாரி (கருணை)

24. கற்பகவல்லி நின் பொற்பதங்கள் பிடித்தேன்
நற்கதி அருள்வாய் அம்மா – தேவி (கற்பக)

பற்பலரும் போற்றும் பதி மயிலாபுரியில்
சிற்பம் நிறைந்த உயர் சிங்காரக் கோயில்கொண்ட (கற்பக)
நீ இந்த வேளை தன்னில் சேயன்எனை மறந்தால்
நானிந்த நானிலத்தில் நாடுதல் யாரிடமோ
ஏனிந்த மௌனம்அம்மா ஏழை எனக்கருள (ஏ)
ஆனந்தபைரவியே ஆதரித்தாளும் அம்மா... (கற்பக)

எல்லோருக்கும் இன்பங்கள் எழிலாய் இறைஞ்சி என்றும்
நல்லாக்கி வைத்திடும் நாயகியே – நித்ய
கல்யாணியே கபாலி காதல்புரியும் – அந்த
உல்லாசியே உமா உனைநம்பி னேனம்மா (கற்பக)

நாகேஸ்வரிநீயே நம்பிடும் என்னைக்காப்பாய்

வாகீஸ்வரிமாயே வாராய் இதுதருணம்
பாகேஸ்ஸ்ரீ தாயே பார்வதியே – இந்த
லோகேஸ்வரிநீயே உலகினில் துணை யம்மா (கற்பக)

அஞ்சனை மையிடும் அம்பிகையே எம்பிரான்
கொஞ்சிக் குலாவிடும் வஞ்சியே நின்னிடம்
தஞ்சம் என்றே அடைந்தேன் தாயே உன்சேய்நான்
ரஞ்ஜனியே ரக்ஷிப்பாய் கெஞ்சுகின்றே னம்மா (கற்பக)

25. நானாட்சி செய்துவரும் நான்மாடக் கூடலிலே
மீனாட்சி என்றபெயர் எனக்கு – கங்கை
நீராட்சி செய்துவரும் வடகாசி தன்னில்
விசாலாட்சி என்ற பெயர் வழக்கு
கோனாட்சி பல்லவர்தம் குளிர்சோலை காஞ்சிதன்னில்
காமாட்சி என்ற பெயர் எனக்கு – கொடும்
கோலாட்சி தன்னைஎதிர்க்கும் மாரியம்மன் என்றபெயர்
கொண்டபடி காட்சிதந்தேன் உனக்கு (நானாட்சி)

ஆறென்றும் நதியென்றும் ஓடையென்றாலும் – அது
நீரோடும் பாதை தன்னைக் குறிக்கும்
நிற்கும் ஊர்மாறிப் பேர்மாறி உருமாறி கருமாரி
ஒன்றே ஓம் சக்தியென உரைக்கும் (நானாட்சி)

26. சிவனுக்கிசைந்தது சிவராத்திரி அவன் தேவிக்குகந்தது நவராத்திரி
அவனின் துணையே ஒருசக்தி இந்த அகிலம்காண்பது நவசக்தி (சிவ)

தவத்தில் நிலைக்கும் ஒருபாதி தன் சந்ததிகாக்கும் மறுபாதி
விதைக்கும் உழவன் சிவனென்றால் அதன் விளைவை சுமப்பவள் உமையன்றோ (சிவ)

இரவில் ஓர்நாள் மலர்மலரும் என்றோ ஓர்நாள் அதுஉலரும்
இடையில் மடியில் இறுத்திவைத்து எம்மை வளர்ப்பாள் அன்னையன்றோ (சிவ)

தாயாய் வந்தாள் ஒருசக்தி தாகம் தீர்த்தாள் ஒருசக்தி
ஆயக்கலைகள் அருள் பவளாய் ஆக்கம் தந்தாள் ஒருசக்தி
செல்வம் தந்தென்னை சீராட்டி செழிக்கச் செய்தாள் ஒருசக்தி
அல்லும் பகலும் அருகிருந்தே ஆற்றல் கொடுத்தாள் ஒருசக்தி (சிவ)

உடன் பிறந்தவள் ஒருசக்தி உள்ளம் நிறைந்தவள் ஒருசக்தி
தோள் தந்தவள் ஒருசக்தி வாழ்வுமுழுவதும் சிவசக்தி
ஒன்பது சக்திகள் ஓர்உருவாய் நின்றதும் ஆணவம் சென்றதுவே
ஒன்பது இரவுகள் அவள் நினைவாய்
ஒளி விளக்கே ஏற்றுவோம் வாரீரோ (ஒளி) (சிவ)

27. நமையாளும் நாயகியாம் நம் மகமாயி – கண்
இமைபோலக் காத்திடுவாள் நம்மகமாயி
உமையவள் அவளே இமவான் – மகளே
சமயத்தில் வருபவள் அவளே–எங்கள்
சமயபுரத்தாள் அவளே (நமை)

அம்மா என்று அழைத்தால் போதும் மகமாயி – வந்து
செம்மையாகவே செல்வமும் தந்து

ஜென்ம பாவங்களை வேருடன் களைந்து
இம்மாநிலத்தில் இன்பம் தந்திடும் தேவி – அவள்
தெம்மாங்குப் பாட்டினிலே மயங்கிடும் தேவியவள் (அம்மா) (தெம்) (நமை)

உலகாளும் உத்தமியாம் நம்மகமாயி – இறைக்
குலம் வாழும் குலதெய்வம் நம்மகமாயி – இசைக்
கலையாவும் தந்தருள்வாளே நம்மகமாயி வாழ்வில்
நிலையான நிம்மதி தருவாள் நம்மகமாயி (நமை)

செம்மேனியில் பட்டுப்புடவை பளபளக்க
சிங்கார முகந்தன்னில் குங்குமம் ஜொலிஜொலிக்க
செந்நகம் நிமிர்ந்து நின்று முடிதனையே அலங்கரிக்க
அம்மாளும் அடியேவருவாள் அன்புடனே நமைகாக்க (நமை)
அம்மா–அம்மா–அம்மா

28. கற்பகமே உனையன்றி துணை யாரம்மா – நீயே
கதியென போற்றும் எனை கண்பாரம்மா – அம்மா (கற்பகமே)

அற்புதம் எல்லாம் நிகழ்த்தும் அருள்திறம் உடையவளே
ஆனந்த வாழ்வுதனை அன்பர்க்கு அளிப்பவளே (கற்பகமே)

அலைகடல் ஓரத்திலே அமைந்த மயிலையிலே
கலைவடிவாய் திகழும் நின் திருக்கோவிலிலே
சிலைவடிவாய் நின்று உலகேழும் காப்பவளே
செம்பவள மேனிவண்ணன் மகிழும் உமையவளே (கற்பகமே)

29. தாயே மதுரை மீனாட்சி செந்தமிழே உனது அரசாட்சி
கூடல் என்பது மதுரையம்மா பக்திக் கூடலில் காண்பதுன் கோவிலம்மா (தாயே)

கலைமகள் திருமகள் பெயரினிலே காண்பதெல்லாம் உன் உருவாகும்
காவியக்கோவில் தமிழாகும்அந்தக் கோவிலில் வாழ்வதும் நீயாகும் (தாயே)

காசியிலே நீ விசாலாட்சி காஞ்சியிலே நீ காமாட்சி
கருணையம்மா உன்மனசாட்சிஅதைக்காட்டுதம்மா உன்அருளாட்சி (தாயே)

விழிகளிலே திருவிளக்கேற்றிஉனைவேண்டித் தொழுதிடும் பக்தருக்கே
ஒளிதரும் மாணிக்க மூக்குத்தியை உடையவள் உமையவள் நீயம்மா (தாயே)

30. சோற்றாணிக்கரை அம்மையே நீ சொல்லாமல் வந்திடுவாய்
ஜெயசக்தி நீயே ஜெயம் தந்திடுவாய் ஜெகதம்பாள்
மஹேஸ்வரியே (ஜெய) (சோற்றாணி)

பதிகஞ்சேரி என் அன்னையே பணி என்குல தேவியளே
பராசக்திநீயே பயம்போக்கிடுவாய் எங்கள் குறைகளை
தீர்த்திடுவாய் (சோற்றாணி)

இராஜ ராஜேஸ்வரி தாயேநீ ராஜயோகம் தனைத்தருவாய்
காளி எம் சோதரி அம்மைக் காத்திடுவாய் கார்த்திகேயன் அவன் அன்னையே
(சோற்றாணி)

அம்மா அம்மா என்றே அழைத்தால் அன்பின் உருவாகி வந்திடுவாய்
ஆதிசக்தி நீயே அபயம் தந்திடுவாய் ஆனந்தம் தனைத் தருவாய் (சோற்றாணி)

31. காஞ்சி காமாட்சி மதுரை மீனாட்சி காசி விசாலாட்சி
கருணாம்பிகையே தருணம் இதுவே தயை புரிவாயம்மா (காஞ்சி)

நின் அருள் என்றும் நிலைபெற வேண்டும் நீ அருள்வாயம்மா
பொன் பொருள் எல்லாம் நிலையில்லை என்றே உணர்ந்திடுவேனம்மா
என்னிலை கண்டு என்துயர் தீர்ப்பாய் என்துணை நீயம்மா
நின்முகம் கண்டே என்முகம் மலராய் மலர்ந்ததும் ஏனம்மா (காஞ்சி)

மங்களம் வழங்கிடும் மகிமையைக் கண்டேன் உன் திருக்கரத்தினிலே
எங்கும் வருவேன் நின்னருள் நாடி எங்கள் குல தேவி
சங்கடம் தீர்ப்பாய் சங்கரித்தாயே சதமுன் மதமலரே
தங்கும் புகழோடு தரணியில் வாழ்வேன் தாயுன் கருணை யினால் (காஞ்சி)

பயிர்களில் உள்ள பசுமையில் கண்டேன் பரமேஸ்வரி உனையே
உயிர்களில் உள்ள உன்னருள் உண்மை உலகமகா சக்தி
சரண் உனைஅடைந்தேன் சக்திதேவி சாசுவதம் நீயே
அரண் எனநிற்பாய் அடிமையைக்காப்பாய் அகிலாண்டேஸ் வரியே (காஞ்சி)

32. சரணமம்மா தேவி சரணமம்மா
சரணம் அம்மா தேவி சரணம் அம்மா

காஞ்சியில் வாழும் காமாட்சி தாயே சரணமம்மா
மதுரையில் வாழும் மீனாக்ஷி தாயே சரணமம்மா
காசியில் வாழும் விசாலாக்ஷி தாயே சரணமம்மா
மயிலையில் வாழும் கற்பகத் தாயே சரணமம்மா
தில்லையில் வாழும் சிவகாமி தாயே சரணமம்மா
திருக்கடவூரில் வாழும் அபிராமி தாயே சரணமம்மா
நெல்லையில் வாழும் காந்திமதி தாயே சரணமம்மா
பிள்ளைகுளம் வாழும் தெக்ஷணமாகாளி தாயே சரணமம்மா
நாகையில் வாழும் நீலாயதாக்ஷி தாயே சரணமம்மா
தஞ்சையில் வாழும் முத்துமாரித் தாயே சரணமம்மா
சமயபுரத்தாளே! மகமாயி தாயே சரணமம்மா
(திரு) வேற்காட்டில் வாழும் கருமாரி தாயே சரணமம்மா
சோற்றாணிக்கரை வாழும் பகவதி தாயே சரணமம்மா
சபரிமலை வாழும் மஞ்சமாதா தாயே சரணமம்மா
எங்கள் இதயத்தில் வாழும் ராஜாராஜேஸ்வரி தாயே சரணமம்மா
தேவி சரணமம்மா இங்கே வரணும் அம்மா ஒடி வரணும் அம்மா சரணமம்மா

33. சங்கர நயினார் கோவிலிலே சங்கரி கோமதி அருள்கின்றாள்
ஆடித் தபசில் காட்சிதந்தாள் அன்னை அருளை வழங்குகிறாள் (சங்கர)

புற்றில் இருந்து மண்ணெடுத்து பக்தியுடன் அனு தினம்அணிந்து
சக்தி கோமதியை நினைத்தவர்க்கு சகல நலன்களும் என்றும் உண்டு (சங்கர)

சங்கர நாராயணன் திருக்கோலம் சங்கரி கோமதி தவக்கோலம்
மங்கலம் தந்திடும் எழில் கோலம் அது மங்கையர் வாழ்வில் சுபகோலம் (சங்கர)

மஞ்சள் முகத்தில் ஒளி இருக்கும் தஞ்சம் என்றால் வழிபிறக்கும்
தங்கக் கொடிமரம் உயர்ந்து நிற்கும் தாயின் கருணை நிறைந்திருக்கும் (சங்கர)

34. அம்மா அம்மா மீனாட்சி அரசாளும் மீனாட்சி
அரசாளும் மீனாட்சி அகிலமும் நீயாச்சி (அம்மா)

கன்னிகுமரி யானவளே அம்மா அம்மா மீனாட்சி
கன்னிகளை் காக்க வேண்டும் அரசாளும் மீனாட்சி (அம்மா)

காஞ்சியின் காமாட்சியே அம்மா அம்மா மீனாட்சி
கருணை உள்ளம் கொண்டவளே அரசாளும் மீனாட்சி (அம்மா)

காசியின் விசாலாட்சியே அம்மா அம்மா மீனாட்சி
காலமெல்லாம் வாழ்வளிப்பாய் அரசாளும் மீனாட்சி (அம்மா)

மயிலையின் கற்பகமே அம்மா அம்மா மீனாட்சி
மங்களமே வழங்கிடுவாய் அரசாளும் மீனாட்சி (அம்மா)

தில்லையின் சிவகாமியே அம்மா அம்மா மீனாட்சி
திருவருளை அருளவேணும் அரசாளும் மீனாட்சி (அம்மா)

35. ஆடி வெள்ளி கிழமையன்று அம்மனுக்கு மஞ்சள் காப்பு
ஆதிசக்தி கருமாரி யம்மனுக்கு அழகிய மஞ்சள் காப்பு
கூடி அவளை கும்பிடுவோர்க்கு கோடி நன்மைகள் பாரு
ஆடியில் அவளைக் கொண்டாடி ஆயிரம்நாமங்கள் கூறு (ஆடி)

வேற்காட்டில் குடியிருக்கும் வேப்பிலைக்காரி
கூறுமன்பர் குறை தீர்க்கும் கோவிந்தமாரி
தாரணியின் தாயவளே நாரணி ஓங்காரி
பாரெல்லாம் படியளக்கும் பரமசிவன் பாரி (ஆடி)

குங்குமத்தில் குளித்து நிற்பாள் குங்குமக்காரி
மஞ்சளுடன் நிறைந்திருப்பாள் மங்களமாரி
நெஞ்சாரத் துதித்து நின்றால் அணைத்திடுவாள் மாரி
அன்னைபோல் காத்திடுவாள் ஆனந்த சுகுமாரி (ஆடி)

வேலனுக்கு வேல் கொடுத்தாள் வேற்காட்டு கருமாரி
காலனையும் ஓடவைப்பாள் காளி கருமாரி
கோலமிகும் வண்ணம் கொண்டாள் நீலி அலங்காரி
ஞாலத்தை ஆட்சி செய்யும் சூலி கருமாரி (ஆடி)

36. வேற்காடு வாழ்ந்திருக்கும் ஆதிபரா சக்தியவள்
வேல்முருகன் அன்னையவள் வேண்டும்வரம் தந்திடுவாள்
பாற்கடலாய் அவள்கருணை பெருகிடவே செய்திடுவாள்
பக்தர்களை கண்ணிமைபோல் எப்போதும் காத்திடுவாள் (வேற்காடு)

தீராத வினையெல்லாம் தீர்த்துவைக்கும் தெய்வமவள்
போராடும் பாவங்களை பறந்தோடச் செய்பவளாம்
திருச்சாம்பல் அணிந்தோரை திடமுடனே காப்பவளாம்
திருமாலின் சகோதரியாம் கருநாக ரூபினியாம் (திரு) (வேற்காடு)

எங்கும் நிறைந்தவளாம் ஏகாந்த ரூபினியாம்
மங்களமாய் வாழ்வளிக்கும் மணிகண்டன் தாயவளாம்
சங்கரன்முதல் நாராணனும் பணிந்திடும் பரதேவதையாம்
பங்கஜமும் கொண்டவளாம் பரமசிவன் நாயகியாம் (வேற்காடு)

37. வேற்காட்டில் வீற்றிருக்கும் வேதவல்லி மாரி
நற்கவியும் தந்திடுவாள் ஞானதேவி மாரி (வேற்) நீ

நாவினிலே வந்திடுவாய் நாதமாக மாறி – நீ (நாவி)
ஆவலுடன் ஆடிவா நீ நாகமாகமாறி
கருநாகமாக மாரி கருமாரி சுகுமாரி மகமாயி (வேற்)

கற்பூர ஜோதியிலே காட்சிதரும் மாரி
அற்புதமாய் உலகினையே ஆட்சிசெய்யும் மாரி (கற்)
கருணை உள்ளம் கொண்டவளே கண்ணான மாரி
பொற்காலம் வழங்கிடுவாய் பொன்னாக மாரி (வேற்)

கரக ஆட்டம் ஆடி வந்தோம் கருமாரி
மனம் உருகிட பாடிவந்தோம் முத்துமாரி
பம்பை உடுக்கை முழங்கிடவே ஆடிவரும் மாரி – உன்னை
கும்பிட ஓடி வந்தோம் அம்பிகையே மாரி (வேற்)

38. தேவி கருமாரியம்மா தேடிவந்தோம் உன்னையம்மா
ஆவலுடன் உனைப் பணிந்தோம் நாவாரப் பாடவந்தோம் (ஆவ)
மேவிவரும் கருணைமனம் கொண்டவளும் நீ அம்மா
தாவிவரும் சிங்கத்தின்மேல் அமர்ந்தவளும் நீ அம்மா
புாவிஎன்று இகழாமல் பதமலர் தாருமம்மா
பூவிருந்தவல்லியில் வாழ் புண்ணியவதி நீ அம்மா (பூ) (தேவி)

சித்திரை பல்லக்கில் ஏறி வந்தாள் – அவள்
சிங்காரமாகவே ஆடி வந்தாள்
முத்துப் பல்லக்கினில் ஏறிவந்தாள் – அவள்
முந்தைவினை நீக்கி ஓடிவந்தாள் (முத்து) (தேவி)

வேலனுக்கு வேல் கொடுத்தாள் வேற்காட்டு மாரியம்மா
காலனையும் ஓட வைப்பாள் காளிகரு மாரியம்மா
சீலமுடன் வந்திடுவாள் நீலிகரு மாரியம்மா
சூலமதை ஏந்திடுவாள் சுகம்தரும் மாரியம்மா (தேவி)

39. *காலமெல்லாம் காத்திருந்தாலும்*
*காணக் கிடைக்காதவள் கருமாரி*
*கனிந்துருகி உள்ளம் கொதித்தவர்க்கு*
*கணத்தினிலே காட்சி தந்திடுவாள் தேவி கருமாரி*

காலமெனும் தேரிலேறி கருமாரி நீ வருகையிலே
காணக்கண் கூசுதம்மா கோடி ஜோதி தெரியுதம்மா (கால)

பூரண நிலவினிலே பொன்மேனி ஒளிவிடவே
புற்றினிலே தோன்றிடுவாள் எங்கள்கரு மாரியம்மா
புண்பட்ட மனதிலெல்லாம பூரணமாய் நிறைந்திடவே
பொங்கிடும் செல்வமெல்லாம் தந்திடுவாள் கருமாரி (கால)

கருநாகமாய் வந்திடுவாள் கைகுவித்த பேருக்கு
காட்சியும் கொடுத்திடுவாள் எங்கள்கரு மாரியம்மா
திரிசூலம் ஏந்திடுவாள் திருநீறு அணிந்திடுவாள்
தீராதநோயெல்லாம் தீர்த்திடுவாள் கருமாரி (கால)

*சரவிளக்கு சுடர்விடவே*
*சாற்றிய மாலையெல்லாம் உருமறைக்க*

*கற்பூரம் காட்டியே கைதொழுதால்*
***கண்திறந்து பார்த்திடுவாள் எங்கள் கருமாரி***

கிண்கிணி கிலு கிலுக்க கால் சலங்கை சலசலக்க – என்
உடலெல்லாம் சிலு சிலுக்க உன் சிரிப்பெலி கேட்குதம்மா
எங்கள் சிந்தையும் குளிருதம்மா (கால)

கருணை உள்ளம் கொண்டவளே எங்கள்கருமாரி
கண்ணாயிரம் கொண்டவளே எங்கள்கருமாரி
பொன்னாபரணம் பூண்டவளே எங்கள்கருமாரி
பண்ணாயிரம் பாடவந்தோம் எங்கள்கருமாரி (கால)

40. மதுரை அரசாளும் மீனாக்ஷி
மாநகர் காஞ்சியிலே காமாக்ஷி (மதுரை)

தில்லையில் அவள் பெயர் சிவகாமி
திருக்கடவூரினிலே அபிராமி
நெல்லையில் அருள் தருவாய் காந்திமதி
அன்னை அவளல்லால் ஏது கதி? (மதுரை)

திரிபுர சுந்தரி சீர் காழியிலே
சிவசக்தி பார்வதி கயிலையிலே
வரந்தரும் கற்பகமாம் மயிலையிலே
வஞ்சமிலா நெஞ்சில் வாழ்பவளே (மதுரை)

திருவேற் காட்டினிலே கருமாரி
தென் புதுவை நகரினிலே முத்துமாரி
சமயபுரம் தன்னிலே மகமாயி
சௌபாக்கியம் தந்திடுவாள் மாகாளி – சகல (சௌ) (மதுரை)

41. ஒருமாரி உலகிற்கே உயிர்மாரி திரிசூலி
ஓங்காரி வேற்காட்டில் உருவான கருமாரி (ஒரு)

கருமாரி உருமாறி கதிமாரி நிதிமாரி உழல்கின்ற
எளியேனை கடைத்தேற்றும் மகமாயி (ஒரு)

திருஞானம் கவிபாட சிவஞானம் பால் தந்தாய்
திருமுருகன் விளையாட சிவசக்தி வேல்தந்தாய்
அபிராமி தாசருக்கு அந்தாதி தந்தாய்நீ
அடியேனும் இசைபாட சிறிதேனும் அருள்வாயோ (ஒரு)

நவகோண நடுமையம் நவரத்தின மணிபீடம்
சிவகாமி உனைச்சுற்றி நவசக்தி அவதாரம்
நவராத்திரி ஒளியேற்றி நலம்பாடி துதிசெய்தோம்
குடிகாக்கும் மீனாட்சி புகழ் சேர்க்க வருவாயோ (ஒரு)

42. கருமாரி முகம்பாரு கற்பூர ஒளியினிலே
உருகாத மனமேது உமையவளின் உருவினிலே
திரிசூலி புகழ்பாடு திருக்கோவில் படியினிலே
பெருகாத வளமேது பிறகிந்த உலகினிலே (கருமாரி)

வேற்காட்டு வாசலிலே வேதனைகள் தெரிவதில்லை அம்மா (வேற்)

வேப்பிலையின் சுகத்தினிலே தோற்காத வியாதியில்லை
நாற்கோல நாயகியை நம்பினார் கெடுவதில்லை
போர்கோல தேவதையை பூஜித்தால் மரணமில்லை (கருமாரி)

சித்திரைமாதம் பௌர்ணமிஇரவில் புற்றிலிருந்து புறப்படுவாள்
பத்தினிபெண்கள் பால்பழம்பன்னீர் படைத்தால் பரவசம் அடைந்திடுவாள்
பம்பை உடுக்கை பாட்டொலி கேட்டால் சதங்கை குலுங்கிட நடமாடுவாள்
பில்லி, சூனியம், ஏவல், மந்திரம் தொல்லைகள் நீக்கி துணைவருவாள்
கன்னியர்என்றால் கல்யாணம் சுமங்கலிஎன்றால் சௌபாக்யம்
நினைத்ததைமுடிப்பாள் மகராசி நிலவெனசிரிப்பாள் அலங்காரி அந்த (கருமாரி)

43. மங்கலநாயகி கருமாரி குங்கும செல்லி சுகுமாரி
ஆனந்த தாண்டவ கௌமாரி அன்பில் வளப்படும் அதிகாரி (மங்கல)

அகிலாண்டேஸ்வரி மகமாயி அங்கையற்கண்ணி அபிராமி
ஆனந்த தாண்டவ கௌமாரி அன்பில் வளப்படும் அதிகாரி (மங்கல)

எதையும் தருவாள் எமசூலி திரிபுரம் காத்தாள் திரிசூலி
கருநாகம் குடைபிடிக்க தமிழ்நாதமும் அருளும் ஓங்காரி (மங்கல)

நினைத்தால் வருவாள் கருமாரி அழுதால் அணைப்பாள் மகமாயி
தொழுதால் என்றும் துணையாவாள் மழையென அருளை பொழிந்திடுவாள்
அம்மா தாயே கருமாரி - அம்மா தாயே கருமாரி (அம்மா)

h h h h h

## பரம சிவன் புத்திரனே.... சரணம் ஐயப்பா.

1. பொன்னார் மேனியனே புலித்தோலை அரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேல் மிளிர்கொன்றை அணிந்தவனே
மன்னே மாமணியே மழபாடியுள் மாணிக்கமே
அன்னே உன்னையல்லால் இனியாரை நினைக்கேனே.

2. புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா
உன்னடி என்மனதே வழுவாதிருக்க
வரந்தர வேண்டும் இவ் வையகத்தே
தொழுவார்க் கிரங்கி இருந்தருள் செய்வா
திரிப்புலியூர் செழுநீர் புனற்கங்கை
செஞ்சடைமேல் வைத்த தீவண்ணனே.

3. பித்தா பிறை சூடி பெருமானே அருளாள
எத்தான் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை
வைத்தாய் பெண்ணை தென்பால் வெண்ணெய் நல்லூரருள் துறையுள்
அத்தா! உனக்காளாயினி அல்லேன் எனலாமே.

4. மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசுதென்றலும் வீங்கிள வேனிலும்
மூசுவண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நிழலே.

5. காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி
ஓதுவார்தமை நன்னெறிக் குய்பது

வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது
நாதன் நாமம் நமச்சிவாயமே.

6. வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகியானென தென்றாவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே.

7. மானாட மழுவாட மதியாட புனலாட
மங்கை சிவகாமியாட
மாலாட நூலாட மறையாட திறையாட
மறைதந்த பிரம்மனாட
கோனாட வானுலக கூட்டமெல்லா மாட
குஞ்சிர முத்தனாட
குண்டல் மிரண்டாட தண்மை புலியுடையாட
குழந்தை முருகேசனாட
ஞான சம்பந்தரோடு இந்திரா பதினெட்டுமுனி
அஷ்ட பாலகருமாட
நரை தும்பை யருகாட நந்தி வாகனமாட
நாட்டிய பெண்களாட
வினையோட யுனைபாட யெனைநாடி யிதுவேளை
விருதோடு ஆடி வருவாய் (ஈசனே)

8. தாயா ரிருந்தென்ன தந்தையு மிருந்தென்ன
தன்பிறவி யுறவுகோடி
தனமலை குவித்தென்ன கனபெய ரெடுத்தென்ன
தாரணியை யாண்டு மென்ன
சேயர்க ளிருந்தென்ன குருவாயிருந்தென்ன
சீஷர்க ளிருந்து மென்ன
சித்துபல கற்றென்ன நித்தமும் விரதங்கள்
செய்தென்ன நதிக ளெல்லாம்
ஓயாது மூழ்கினும் என்னபலன் யெமனோலை
ஒன்றை கண்டு தடுக்க
உதவுமோயிது வெல்லாம் சந்தையுற வென்றுதான்
உன்னிரு பாதம் பிடித்தேன்
யார்மீது உன்மன மிருந்தாலுமுன் கடைக்கண்
பார்வையது போதுமே (ஈசனே)

h h h h h

1. ஆடும் சிதம்பரமோ அய்யன்
கூத்தாடும் சிதம்பரமோ

ஆடும் சிதம்பரம் அன்பர் களிக்கவே
நாடும் சிதம்பரம் நமச்சிவாயவென்று (ஆடும்)

யாரும் அறியாமல் அம்பலவாணனார்
சீரடியார் பார்க்கச் சேவடிதூக்கி நின்று (ஆடும்)

பாலகிருஷ்ணன் போற்றும் பனிமதி சடையினார்
தாள மத்தளம் போட தாதத்தை யெனவே (ஆடும்)

2. ஆடிடும் பெருமான் நடமாடிடும் பெருமான்
ஆடாதாரை ஆடவைத்து தானும்ஆடும் பெருமான் (ஆடிடும்)

காணாதாரை காணவைத்து காட்சி தரும் பெருமான்
பாடாதாரை பாடவைத்து பாட்டிசைக்கும் பெருமான் (ஆடிடும்)

கூடாதாரை கூடவைத்து கூத்தாடும் பெருமான்
கேளாதாரை கேட்கவைத்து தானும்கேட்கும் பெருமான் (ஆடிடும்)

சேராதாரை சேரவைத்து தானும்சேரும் பெருமான்
நாடாதாரை நாடவைத்து நடனமாடும் பெருமான் (ஆடிடும்)

சங்கரசிவ, சங்கரசிவ, சங்கர சிவசம்போ (சங்கர)
ஜெயசங்கர, ஜெயசங்கர, ஜெய சங்கரசம்போ (ஜெய)
சிவசங்கர சிவசங்கர சிவ சங்கரசம்போ (சிவசங்கர) (ஆடிடும்)

நடராஜா நடராஜா நர்த்தன சுந்தர நடராஜா
சிவராஜா சிவராஜா சிவகாமிப்ரிய சிவராஜா

3. ஆடுகின்றானடி தில்லையிலே – அதை
பாட வந்தேன் அவன் எல்லையிலே
திங்களும் ஆட சூலமும் ஆட
விரிசடை மீதொரு கங்கையும் ஆட (ஆடு)

உலகெனும் மாபெரும் மேடையிட்டான் – அதில்
உயிர்களை எல்லாம் ஆடவிட்டான்
அசைந்திடும் மரம் செடி கொடிகளிலே – அந்த
அம்பலத்தரசன் ஆடுகின்றான் (ஆடு)

தந்தையும் தாயும் போல் அவன் இருப்பான் – ஒரு
தந்தையும் தாயும் அவனுக்கில்லை
அந்நாள் தொடங்கி இந்நாள் வரைக்கும்
ஆடிய ஆட்டம் முடியவில்லை (ஆடு)

புட்டுக்கு ஏனோ ஆசை கொண்டான் – அவன்
பிரம்படி தனையே தாங்கி கொண்டான்
மண்ணை படைத்தவன் மண் சுமந்தான் – அது
மதுரையில் ஆடிய ஆட்டமன்றோ (ஆடு)

4. அரஹர சிவசிவ அம்பலவாணா
ஆனந்த தாண்டவ அம்பலவாணா (அர)

தில்லையம்பல அம்பலவாணா
சிவகாமி நேசா அம்பலவாணா (அர)

கற்றை சடையோனே அம்பலவாணா
கனக சபேசா அம்பலவாணா (அர)

சிற்ப பேசா அம்பலவாணா
சிதம்பர நேசா அம்பலவாணா (அர)

பொன்னம் பலனே அம்பலவாணா
வெள்ளியம் பலனே அம்பலவாணா (அர)

அம்பலவாணா அம்பலவாணா
ஆடியபாதா அம்பலவாணா (அர)

5. ஓம் சிவாய நமசிவாய ஓம் சிவாய சங்கரா
சசிதரனே சுந்தரேச ஓம் சிவாய சங்கரா (ஓம்)

பார்வதி மணாளனே ஓம் சிவாய சங்கரா
சசிதரனே சுந்தரேச ஓம் சிவாய சங்கரா (ஓம்)

கங்கையை தரித்தவனே ஓம் சிவாய சங்கரா
சசிதரனே சுந்தரேச ஓம் சிவாய சங்கரா (ஓம்)

ஆடும்பாம் பணிந்தவனே ஓம் சிவாய சங்கரா
சசிதரனே சுந்தரேச ஓம் சிவாய சங்கரா (ஓம்)

தில்லையின் நடராஜனே ஓம் சிவாய சங்கரா
சசிதரனே சுந்தரேச ஓம் சிவாய சங்கரா (ஓம்)

நெல்லையின் அப்பனே ஓம் சிவாய சங்கரா
சசிதரனே சுந்தரேச ஓம் சிவாய சங்கரா (ஓம்)

6. தூக்கிய திருவடி துணையென நம்பினேன்
துரிய நடராஜனே (தூக்கிய)

ஆக்கி அளித்துலகை நீக்கி மறைத்தருளி
ஐந்தொழில் புரிந்திடும் அம்பலவாணனே (தூக்கிய)

எத்தனையோ பிறவி எடுத்தெடுத்தே இளைத்தேன்
இருவினைப் பயன்களை எய்தி எய்திக்களைத்தேன்
சித்தம்இனி உன்மேல் வைத்திருக்க நினைத்தேன்
திக்குவேறில்லை ஐயா தீனரைக் காக்கும் கையா
பாச மறுத்துச்சிவ நேசங்கொடுத்துனது
தாசனாய் சிதம்பர வாசனாய் வாழச் செய் (தூக்கிய)

7. ஹரஹர போலோ சிவசிவ போலோ
பம்பம் போலோ போலோநாத் போலோநாத் (ஹர)

நந்திவாகன நாகபூஷண சந்த்ரசேகர ஜடாதர
கங்காதார கௌரிமனோகர கிரிஜாகாந்த ஸதாசிவ (ஹர)

கைலாஸவாஸா கனகசபேசா கௌரிமனோகர விச்வேசா
ஸ்மசானவாஸா திகம்பரேசா நீலகண்ட மஹாதேவ (ஹர)

சூலாதரா ஜோதிப்ரகாசா விபூதி சுந்தர பரமேசா
பம்பம் பம்பம் டமருக நாதா பார்வதிரமண ஸதாசிவ (ஹர)

8. என்னப்ப னல்லவா என்தாயு மல்லவா
பொன்னப்ப னல்லவா பொன்னம் பலத்தவா (என்னப்ப)

ஆடிய பாதமே அம்பல வாணரே
சிதம்பரத்தில் வாழும் சிவகாமி நேசரே (என்னப்ப)

ஆலால சுந்தரம் அற்புத சுந்தரம்
அற்புத சுந்தரம் அழகான சுந்தரம் (என்னப்ப)

காமாக்ஷி சுந்தரம் மீனாட்சி சுந்தரம்
கல்யாண சுந்தரம் கடம்பவன சுந்தரம் (என்னப்ப)

9. சிவாய பரமேஸ்வராய சசிசேகராய நம ஓம் ஓம் ஓம் ஓம்
பவாய குணசாம்பவாய சிவதாண்டவாய நம ஓம் ஓம் ஓம் (சிவாய)

சிவ சிவ சிவ சிவ சிவாய நமஓம்
பவ பவ பவ பவ பவாய நமஓம்
ஓம் சிவ சிவ சிவ சிவாய நமஓம்
பவ பவ பவ பவ பவாய நமஓம் (சிவாய)

சிவாய நமஓம் பவாய நமஓம்
சிவ சிவ சிவ சிவ சிவாய நமஓம்
ஓம் நமசிவாய சிவாய நமஓம்
பவ பவ பவ பவ பவாய நமஓம் (சிவாய)

10. காமாட்சி தாய்மடியில் சீராட்சி புரிந்துவரும்
காமகோடி தரிசனம் காணகாண புண்ணியம் – காஞ்சி (காமாட்சி)

தவக்கோலம் தனக்காக தர்மங்கள் நமக்காக
அவதார திருச்செல்வர் அபிராமி அருள்செல்வர் (காமாட்சி)

கோபுர திருஉள்ளம் கொடிமர கனிஉள்ளம் – திரு
காஞ்சி முனிஉள்ளம், தீபத்தின் ஒளிவெள்ளம் (காமாட்சி)

பாரிஜாத நறுமணம் பொன்பரமஸ்ரீ பாதமே
சதுர்வேத கீதமே, என் சங்கரனை பாடிடுமே – வாச (பாரி)
ஹரஹர சங்கர ஜெயஜெய சங்கர
ஜெயஜெய சங்கர ஹரஹர சங்கர...... (காமாட்சி)

11. *காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி*
*ஓதுவார் தமைநன் நெறிக்கு உய்ப்பது*
*வேதம் நான்கிலும் மெய்ப்பொருளாவது*
*நாதன் நாம நமச் சிவாயமே*

நமச்சிவாய மந்திரம் நாளும்நம்மை காக்கும்
கயிலைவாசன் திருமுகம் கண்கள் முன்பு தோன்றும் (நமச்)

மனதில்வாழும் சஞ்சலம் கனவுபோல நீங்கும் (மன)–உன்
அன்பில்வாழும் திருவுளம் மலர்கள்தூவி வாழ்த்தும் (நமச்)

அருள்ஜோதி தெய்வம்எமை ஆளும் பரம்பொருள்
அருவமாகி உருவுமாகி தோன்றும் திருவருள் (அருள்)
அன்புமயமான சிவம் தூயசெம்பொருள் (அன்பு)–அந்த
ஆத்மலிங்க பூஜைசெய்ய விலகும் நம்இருள் (நமச்)

நீதிவழி அறியவைக்கும் வேதமந்திரம்
வேதநெறி காணவைக்கும் நமதுஆகமம் (நீதி)
ஆகமத்தை அருளியவன் அருளின் பாசுரன் (ஆக) – அவன்
ஐந்தெழுத்தே நாம் உரைக்கும் அமுதவாசகம்

ஓம் நமச்சிவாயா ஓம் நமச்சிவாயா
ஓம் நமச்சிவாயா ஓம் நமச்சிவாயா
ஓம் நமச்சிவாயா ஓம் நமச்சிவாயா
ஓம் நமச்சிவாயா ஓம் நமச்சிவாயா (நமச்)

12. கால கால காம தகன காசிநாத பாஹிமாம்
விசாலாக்ஷி அம்பஸமேத விச்வநாத ரக்ஷமாம்
அம்புலிங்க லிங்கரமண ஜம்புலிங்க பாஹிமாம்
அகிலநாயகி ஸமேத ஜம்புகேச ரக்ஷமாம்
அக்னிலிங்க வாயுலிங்க காசிலிங்க பாஹிமாம்
குந்தளாம்பிகா ஸமேத மாத்ருபூத ரக்ஷமாம்
சந்த்ர சூட சந்த்ர சூட சந்த்ர சூட பாஹிமாம்
சந்த்ர சூட சந்த்ர சூட சந்த்ர சூட ரக்ஷமாம்

h h h h h

## குருவாயூர் அப்பன் மகனே..... சரணம் ஐயப்பா

1. வஸூதேவஸூதம் தேவம் கம்ஸசாணுர மர்த்தனம்
தேவகீ பரமாநந்தம் க்ருஷ்ணம் வந்தே ஜகத்குரும்
க்ருஷ்ணாய வாஸூதேவாய தேவகீ நந்தனாயச
நந்தகோப குமாராய கோவிந்தாய நமோ நம:

2. ஒருத்தி மகனாய் பிறந்து ஓர் இரவில் ஒருத்தி மகனாய் ஒளித்து வளர
தருக்கில்லானாகி தான் தீங்கு நினைந்த கருத்தைப் பிறப்பித்து கஞ்சன் வயிற்றில்
நெருப்பென நின்ற நெடுமாலே உன்னை அருத்தித்து வந்தோம் பறைதரு
தியாகின்
திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி வருத்தமும்
தீர்ந்து மகிழ்ந்தேலா ரெம்பாவாய்.

3. பச்சைமாமலைபோல் மேனி பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா அமரர்ஏறே ஆயர்தம் கொழுந்தே என்னும்
இச்சுவை தவிர யான்போய் இந்திரலோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன், அரங்கமா நகருள்ளானே.

4. மூவுலகும் ஈர் அடியாய் முறைநிறம்பா வகைமுடிய
தாவியசேவடி சேப்ப தம்பியோடு கான்போந்து
சோ அரணும் போர்மடிய தொல் இலங்கை கட்டு அழித்த
சேவகன் சீர்கேளாத செவி என்ன செவியே
திருமால் சீர்கேளாத செவி என்ன செவியே.

5. குலந்தரும் செல்வம் தந்திடும் அடியார் படுதுயர் ஆயினஎல்லாம்
நிலந்தரும் செய்யும் நீள்வீசும் பருளும் அருளோடு பெருநில மளிக்கும்
வலந்தரும் மற்றும் தந்திடும் பெற்ற தாயினும் ஆயினசெய்யும்
நலந்தரும் சொல்லை நான் கண்டுகொண்டேன் நாராயணா என்னும் நாமம்.

h h h h h

1. நாராயணா என்னும் பாராயணம் நலம்யாவும் தருகின்ற தேவாமிர்தம்
தேவாமிர்தம் தேவாமிர்தம் தேவாமிர்தம் (நாராயணா)

கோவிந்த நாம சங்கீர்த்தனம் குடிகொண்ட நெஞ்சம்தான்
பெரும்ஆலயம் பெரும்ஆலயம் (நாராயணா)

படியேறி வருவோர்க்கு பயமில்லையே
பாவங்கள் தீர வேறு வழியில்லையே – திருமலை (படி)

துணையாவதவன் சங்கு சக்ராயுதம்
தொழுவார்க்கு அருள்கின்ற திருவேங்கடம் (நாராயணா)

சித்தியளித்தொரு முக்தி கொடுத்திட
சக்தி படைத்த மலை தேவர்கள் மூவர்கள்
யாவரும் வேண்டிடும் சேடன் அணைத்தமலை (சித்தி)
தத்துவேதம் உரைத்தசாரதி நித்தம் வாழும்மலை
தாயினும் இனியவோர் தூயவன் மாயன்
ஆளும், ஏழுமலை, ஏழுமலை, ஏழுமலை (நாராயணா)

2. வெங்கட கிரிவாஸ ஹரே முராரே
பங்கஜ நேத்ர பரம பவித்ர
ஸூரஸ்துதி பாத்ர ஸூந்தர காத்ர (வெங்)

பதிதபாவன பாப விமோசன
நதஜனாவன நந்த நந்தன
அண்டஜ வாஹன அலமேலு மோஹன
ஸனகாதி வந்தித சரணார விந்த (வெங்)

வாரிதி பந்தன தசகண்டலுண்டன
கம்ஸ நிஷூதன கௌஸ்துபாபரண
அகில லோகாதார ஆனந்தரூப
சேஷாசல நிலய ப்ரபு வெங்கடேச (வெங்)

3. ஹரி நாராயண கோவிந்த பஜநாராயண கோவிந்த
நந்தமுகுந்த ” நவநீதசோர ”
புராண புருஷ ” புண்யச்லோக ”
வேணுவிலோல ” விஜயகோபால ”
பக்தவத்ஸலா ” பாகவதப்பிரிய ”
ஸ்ரீநிவாச ” ஸ்ரீவெங்கடேச ”
பாண்டுரங்க ” பண்டரிநாத ”
குருவாயூரப்ப ” ஸ்ரீபத்மநாப ”
மோஹனரூபா ” மோஹினி வேஷ ”
மோஹினி வேஷ ” ஐயப்பா ஜனித ”

4. கண்ணா கண்ணா ஓடிவா உண்ணிக் கண்ணா ஓடிவா
ஓடக் குழலில் பாடிவா குஞ்சுக் கால் கொண்டோடிவா (கண்ணா)

ஆடும் மயிலின் பீலியும் ஆனந்தமாய் கோபியும்
அல்லல் அகற்றும் தேவனாய் அஞ்சனம் எழுதிய கண்ணுமாய் (கண்ணா)

குருவாயூரில் ஞான்தொழும் குறைகள் தீர்க்கும் பாலனாய்

கோகுல பாலா ஓடிவா பால கோபாலா ஓடிவா (கண்ணா)

தேவகி வயிற்றில் மைந்தனாய் தேவி ருக்மணி நாதனாய்
தேவர்க்கெல்லாம் தேவனாய் துவாரக பாலா ஓடிவா (கண்ணா)

கண் குளிர ஞான் காணேணும் கார்முகில் வண்ணனை காணேணும்
கண்ணினில் உண்ணியை காணேணும் காளிங்க மர்த்தன ரூபனாய் (கண்ணா)

உலகம் அளந்த தேவனாய் உரலில் கட்டிய பாலனாய்
உத்தமி ராதா சமேதனாய் – நீ உல்லாசமாய் ஓடிவா (கண்ணா)

5. கோவிந்தம் போடுவோம் எல்லாரும் கோவிந்தம் போடுவோம்
கோவில் முன்னே கூடி நின்று கோவிந்தம் போடுவோம்

ஏழுமலை நாதனுக்கு ”
ஏழைப் பங்காளனுக்கு ”
வெங்கட ரமணனுக்கு ”
சங்கட ஹரணனுக்கு ”
திருப்பதி மலை வாஸனுக்கு ”
திருமலை மேல் ஏறி நின்று ”
புரட்டாசி சனிக்கிழமை ”
புண்டரீகத் தலைவனுக்கு ”
அலமேலு நாதனுக்கு ”
அசலோடு வட்டி சேர்த்து ”

6. திருமால் பெருமைக்கு நிகரேது – உந்தன்
திருவடி நிழலுக்கு இணையேது
பெருமானே உந்தன் திருநாமம் – பத்து
பெயர்களில் விளங்கும் அவதாரம் (திரு)

கடல்நடுவே வீழ்ந்த சதுர்வேதம் – தனை
காப்பதற்கே கொண்ட அவதாரம் – மச்ச அவதாரம்
அசுரர்கள் கொடுமைக்கு முடிவாகும் – எங்கள்
அச்சுதனே உந்தன் அவதாரம் – கூர்ம அவதாரம் (திரு)

பூமியைக் காத்திட ஒருகாலம் – நீ
புனைந்தது மற்றொரு அவதாரம் – வராக அவதாரம்
நாராயணா என்னும் திருநாமம் நிலை
நாட்டிட இன்னும் ஒரு அவதாரம் – நரசிம்ம அவதாரம் (திரு)

மாவலி சிரம் தன்னில் கால்வைத்து – இந்த
மண்ணும் விண்ணும் அளந்த அவதாரம் – வாமன அவதாரம்
தாய்தந்தை சொல்லே உயர் வேதம் – என்று
சாற்றியதும் ஒரு அவதாரம் – பரசுராம அவதாரம் (திரு)

ஒருவனுக்கு உலகில் ஒருதாரம் எனும்
உயர்வினைக் காட்டிய அவதாரம் – ராம அவதாரம்
ரகுகுலம் கொண்டது ஒருராமன் பின்பு
யதுகுலம் கண்டது பலராமன் – பலராம அவதாரம் (திரு)

அரசுமுறை வழிநெறி காக்க – நீ
அடைந்தது இன்னொரு அவதாரம் கண்ணன் அவதாரம்
விதி நடந்ததென கதி முடிந்ததென வினையின் பயனே உருவாக
நிலை மறந்தவரும் நெறியிழந்தவரும் உணரும் வண்ணம் தெளிவாக
இன்னல் ஒழித்து புவிகாக்க நீ எடுக்க வேண்டும்
ஓர் அவதாரம் – கல்கி அவதாரம் (திரு)

7. புல்லாங்குழல் கொடுத்த மூங்கில்களே – எங்கள்
புருஷோத்தமன் புகழ் பாடுங்களேன்
வண்டாடும் கங்கைமலர் தோட்டங்களே எங்கள்
மதுசூதனன் புகழ் பாடுங்களேன் (புல்லாங்)

பன்னீர்மலர் சொரியும் மேகங்களே – எங்கள்
பரந்தாமன் மெய்யழகைப் பாருங்களேன்
தென்கோடித் தென்றல் தரும் ராகங்களே எங்கள்
ஸ்ரீ கிருஷ்ண மூர்த்திபுகழ் பாடுங்களேன் (எங்கள்) (புல்லாங்)

குருவாயூர் தன்னில் அவன் தவழ்கின்றவன் – ஒரு
கொடியோடு மதுராவை ஆள்கின்றவன்
திருவேங்கடத்தில் அவன் அருள்கின்றவன் – அந்த
ஸ்ரீரெங்கத்தில் பள்ளி கொள்கின்றவன் – (அந்த) (புல்லாங்)

பாஞ்சாலி புகழ்காக்க தன்கை கொடுத்தான் – அன்று
பாரதப்போர் முடிக்க சங்கை எடுத்தான்
பாண்டவர்க்கு உரிமையுள்ள பங்கை கொடுத்தான் – நாம்
படிப்பற்கு கீதை எனும் பாடம் கொடுத்தான் (நாம்) (புல்லாங்)

8. ராமசந்த்ர ரகுவீர ராமசந்த்ர ரணதீர
ராமசந்த்ர ரகுராம ராமசந்த்ர பரந்தாம (ராம)
ராமசந்த்ர ரகுநாத ராமசந்த்ர ஜகந்நாத
ராமசந்த்ர மமபந்தோ ராமசந்த்ர ஜயசிந்தோ
ராமசந்த்ர மமதெய்வம் ராமசந்த்ர குலதெய்வம்

9. கண்ணன் எங்கள் கண்ணனாம் கார்மேக வண்ணனாம்
வெண்ணையுண்ட கண்ணனாம் மண்ணையுண்ட கண்ணனாம் (கண்ணன்)

குழலினாலே மாடுகள் கூடசெய்த கண்ணனாம்
கூட்டமாக கோபியர் கூடஆடும் கண்ணனாம் (கண்ணன்)

மழைக்கு நல்ல குடையென மலைபிடித்த கண்ணனாம்
நச்சு பாம்பு மீதிலே நடனமாடும் கண்ணனாம் (கண்ணன்)

கொடுமைமிக்க கம்ஸனை கொன்றுவென்ற கண்ணனாம்
தூது சென்ற பாண்டவர் துயரம்தீர்த்த கண்ணனாம் (கண்ணன்)

10. திருப்பதி மலைமேல் இருப்பவரே தீராத வினைகளைத் தீர்ப்பவரே
ஸ்ரீநிவாசா கோவிந்தா ஸ்ரீவெங்கடேசா கோவிந்தா (திருப்பதி)

புராண புருஷா கோவிந்தா பண்டரி நாதா கோவிந்தா
தசவித ரூபா கோவிந்தா கம்ஸ மர்த்தனா கோவிந்தா
கோவிந்தா கோவிந்தா கோபாலா கோவிந்தா

கோவிந்தா கோபாலா கோபாலா கோவிந்தா
வெண்ணை யுண்டவா கோவிந்தா வெங்கடேசா கோவிந்தா
கிருஷ்ணா ராமா கோவிந்தா ராமா கிருஷ்ணா கோவிந்தா (திருப்பதி)

ஏழுமலைமேல் இருப்பவரே ஏழைகள் துயரம் தீர்ப்பவரே
அனுதினம் கல்யாண வைபோகரே அலர்மேலு மங்கை மணாளரே
விட்டலா விட்டலா பாண்டுரெங்கா விட்டலா
விட்டலா பண்டுரெங்கா பாண்டுரெங்கா விட்டலா
விட்டலா விட்டலா பாண்டுரெங்கா விட்டலா (திருப்பதி)

வெங்கடா ஜலபதி பெருமாளே வேண்டிடும் எங்களைக் காப்பவரே
இக்கணம் எமக்கருள் புரிவாயே ஈரேழு லோக நாயகரே
நர்த்தனா நர்த்தனா காளிங்க நர்த்தனா
நர்த்தனா காளிங்க காளிங்க நர்த்தனா
நர்த்தனா நர்த்தனா காளிங்க நர்த்தனா (திருப்பதி)

11. ராதே ராதே ராதே ராதே ராதே கோவிந்தா
ராதே கோவிந்தா பிருந்தாவன சந்திரா
அனாதநாதா தீனபந்தோ ராதே கோவிந்தா (ராதே)

பாண்டுரெங்க பண்டரிநாதா ராதே கோவிந்தா
நந்த முகுந்தா பரமானந்தா ராதே கோவிந்தா
பக்த வத்ஸலா பாகவத ப்ரியா ராதே கோவிந்தா
வேணு விலோலா விஜய கோபாலா ராதே கோவிந்தா (ராதே)

நந்த முகுந்தா நவநீத சோரா ராதே கோவிந்தா
ராமா கிருஷ்ணா கிருஷ்ணா ராமா ராதே கோவிந்தா
புராண புருஷா புண்ய ஸ்லோகா ராதே கோவிந்தா
கோ சம்ரக்ஷகா கோபீநாதா ராதே கோவிந்தா (ராதே)

12. அலைபாயுதே கண்ணா என்மனம் அலைபாயுதே – உன்
ஆனந்த மோகன வேணுகான மதில் (அலைபாயுதே)
நிலைபெயராது சிலைபோலவேநின்று
நேர மாவது தெரியாமலே மிக வினோதமான முரளிதரா (அலை)

தெளிந்த நிலவு பட்டபகல் போல் எரியுதே – உன்
திக்கை நோக்கி என்இருபுறமும் தெரியுதே
கனிந்த உன் வேணுகானம் காற்றில் வருகுதே – என்
கண்கள் சொருகி ஒருவிதமாய் வருகுதே (அலை)

கனித்த மனத்தில் உதித்த பதத்தை எனக்கு அளித்து மகிழ்த்தவா
தனித்த வனத்தில் அழைத்து எனக்கு உணர்ச்சி கொடுத்து முகித்தவா
அலைகடல் அலையென கதிரவன் ஒளியென
இணையிரு கழலென கழிக்கவா கதறி மனமுருக நான் அழைக்கவோ–கண்ணா

இதர மாதருடன் நீ கழிக்கவோ
இது தகுமோ, இது முறையோ, இது தருமம் தானோ
குழல் ஊதிடும் பொழுதில் ஆடிடும் குழல்கள் போலவே மனது
வேதனை மிகவோடு அலைபாயுதே கண்ணா என்மனம் அலைபாயுதே

13. நந்தன நந்தன கோபாலா நவநீத சோரா கோபாலா
வேணு விலோலா கோபாலா – விஜய கோபாலா கோபாலா
ராதா கிருஷ்ணா கோபாலா–ரமணிய வேஷா கோபாலா
காளிய மர்த்தன கோபாலா – கௌஸ்துப பூஷண கோபாலா (நந்தன)

முரளீ லோலா கோபாலா – முகுந்த ப்ரியா கோபாலா
ராதா ரமணா கோபாலா – ராஜீவ நேத்ரா கோபாலா
யசோத பாலா கோபாலா – யதுகுல திலகா கோபாலா
நளின விலோசன கோபாலா – கோமள வாசனா கோபாலா (நந்தன)

புராண புருஷா கோபாலா – புண்ய ஸ்லோகா கோபாலா
கனகாம் பரதர கோபாலா – கருணாமூர்த்தே கோபாலா
கஞ்ச விலோசன கோபாலா – கஸ்தூரி திலகா கோபாலா
வெண்ணை யுண்டவா கோபாலா – வெங்கடேசா கோபாலா (நந்தன)

14. கீதை சொன்ன கண்ணன் வண்ணதேரில் வருகிறான்
கேட்டவர்க்கு கேட்டபடி வாழ்வு தருகிறான்
வள்ளல் வருகிறான், அன்பு வள்ளல் வருகிறான்
வருகிறான், வருகிறான், வருகிறான். (கீதை)

நீலமேனி கோலம்காண கண்கள் மறுக்குமோ – அவன்
நிமிர்ந்ததோளும் விரிந்தமார்பும் நெஞ்சம் மறக்குமோ
வீரன்வடிவும் மீசை அழகும் திருஷ்டி ரகசியம் – அவன்
பாரதப்போர் நடத்திவைத்த யுக்திரகசியம் – அதுமுக்தி ரகசியம் (கீதை)

அல்லிகேணி குளத்தின் அருகில் வள்ளல் இருக்கின்றான் – திரு (அல்)
அன்பு கொண்டு வருபவர்க்கு ஒன்று உரைக்கின்றான்
சொல்லும் அந்த எட்டெழுத்தில் சொர்க்கம் தோன்றுமே
சொல்ல சொல்ல ஐயன் தோற்றம் வானில் நீண்டதே விஸ்வ ரூபம் தோன்றுதே !(கீதை)

பார்த்தனுக்கு பாடம் சென்ன கீர்த்தன் வருகிறான்
பசித்தவர்க்கு விருந்தளிக்க அமுதும் கொணர்கிறான்
காப்பதற்கு கையில்ஏந்தும் சங்குசக்கரம் – அவன்
கரங்களுக்கு விளைவுதானே பிரம்மசூத்திரம் நான்கு வேத சாஸ்திரம் (கீதை)

15. திருப்பதி மலைவாழும் வெங்கடேசா
திருமகள் மனம் நாடும் ஸ்ரீனிவாசா – ஏழு மலைவாசா (திரு)

அன்பென்னும் அகல்விளக்கை ஏற்றி வைத்தேன் – அதில்
ஆசையென்னும் நெய்யை ஊற்றி வைத்தேன்
என்மனம் உருகிடவே பாடிவந்தேன் – உன்
ஏழு மலையேறி ஓடி வந்தேன் (திரு)

நினைத்ததை நடத்தி வைப்பாய் வைகுந்தா
மறைத்ததை பறித்து வைப்பாய் கோவிந்தா
உறைத்தது கீதையெனும் தத்துவமே – அதை
உணர்ந்தவர் வாழ்ந்திடுவார் சத்தியமே (திரு)

16. குருவாயூரப்பா திருவருள் தருவாய் நீயப்பா – உன்

கோயில் வாசலிலே எந்நாளும் திருநாள் தானப்பா (குரு)

எங்கும் உந்தன் திருநாமம் எதிலும் நீயே ஆதாரம் – உன்
சங்கின் ஒலியே சங்கீதம் சரணம் சரணம் உன்பாதம் (குரு)

உலகம் என்னும் தேரினையே ஓடச்செய்யும் சாரதியே
காலம் என்னும் சக்கரமே – உன் கையில் சுழலும் அற்புதமே (குரு)

17. தீராத வினைதீர்க்கும் ஸ்ரீனிவாசா
திருப்பதி தனில்வாழும் வெங்கடேசா
மாறாத அன்போடு போற்றும் அன்பர் – ஏழு
மலையேறி வந்துன்னைத் தொழுதுநின்றால் (தீராத)

சங்கமொடு சக்கரமும் சேர்ந்து ஒலிபெருக்க
மங்கை யலமேலு உன்மார்பில் இருக்க
அங்கமதில் ஆபரணம் அழகுடன் ஜொலிக்க
அடியார் தம் குறை நீக்கும் தேவா தேவா (தீராத)

நின்ற திருக்கேலம் நேரிலே கண்டால்
நெஞ்சிலே பேரின்பம் தோன்றுவதே தன்னால்
விண்டுரைக்க ஆகுமோ நின்புகழை என்னால்
வேதாந்தியே முற்றும் அறியாத முன்னால் (தீராத)

கரியதிரு மேனியில் காணும் மணிமாலை – வலது
கரமுனது திருவடியைக் காட்டுகின்ற – லீலை
புரிவதிந்த புவனமதை போற்றி வாழ்நாளில்
அரிய உனதருள் பெறவே அழைக்கும் திருமாலே (தீராத)

18. திருப்பதி சென்று திரும்பி வந்தால் – ஓர்
திருப்பம் நேருமடா உந்தன் விருப்பம்கூடுமோடா நீ
திறந்திட நினைக்கும் கதவுகள் எல்லாம்
தானே திறக்குமடா! தர்மம் அணைக்குமடா (திரு)

ஊருக்கு மறைக்கும் உண்மைகளெல்லாம்
வேங்கடம் அறியுமடா அந்த வேங்கடம் அறியுமடா – நீ
உள்ளதைச் சொல்லி கருணையைக் கேட்டால்
உன் கடன் தீருமடா – செல்வம் உன்னிடம் சேருமடா (திரு)

எரிமலை போலே ஆசைகள் வந்தாலும்
திருமலை தணிக்குமடா – நெஞ்சில் சமநிலை கிடைக்குமடா – உன்
எண்ணங்கள் மாறும் வண்ணங்கள் மாறும்
நன்மைகள் நடக்குமடா உள்ளம் நல்லதே நினைக்குமடா (திரு)

அஞ்சலென்ற கரம் ஒன்றுகாவல் தரும் வெங்கடேஸ்வரா
சங்கு கொண்ட கரம் மங்களங்கள் தரும் வெங்கடேஸ்வரா
தஞ்சமென்றவர்கள் நெஞ்சில் அன்புதரும்
வெங்கடேஸ்வரா, வெங்கடேஸ்வரா...! (திரு)

h h h h h

## ஆஞ்சநேய பூஜிதனே.... சரணம் ஐயப்பா

1. அஞ்ஜநா நந்தனம் வீரம் ஜானகிசோகநாசனம்|
கபீசம் அக்ஷ ஹந்தாரம் வந்தே லங்கா பயங்கரம்||

2. ஆஞ்ஜநேயமதி பாடலாநநம் காஞ்சநாத்ரி கமநீய விக்ரஹம்|
பாரிஜாத தருமூலவாஸிநம் பாவயாமி பவமாந நந்தநம்||

3. யத்ர யத்ர ரகுநாத கீர்த்தனம் தத்ர தத்ர க்ருதமஸ்தகாஞ்சலிம்|
பாஷ்பவாரி பரிபூர்ணலோசநம் மாருதிம் நமத ராக்ஷஸாந்தகம்||

4. புத்திர் பலம் யசோ தைர்யம் நிர்பயத்வம் ஆரோகதா|
அஜாட்யம் வாக்படுத்வம் சஹநூமத் ஸ்மரணாத் பவேத்||

5. அஞ்சனை புதல்வனாய் அஞ்சலிசெய் தூதனாய்
அஞ்சு வோர்க்கெல்லாம் ஆபத்பாந்தவனாய்
வெஞ்சனை புரிவோரை பஞ்சாய் பறக்கடிக்கும் அனுமனே
தஞ்சமே அடைந்தேனுன் கமலபாதமே.

h h h h h

1. ஆஞ்சநேயனே ஆஞ்சநேயனே
அஞ்சனி தனய ஆஞ்சநேயனே (ஆஞ்சநேயனே)

பொல்லாத ராவணன் லங்கேசனை – ஒரு
புழுவாய் மதித்தவீர ஆஞ்சநேயனே (ஆஞ்சநேயனே)

நீலக்கடலைஒரு நீர்த் தாரைபோல்
தாவிக்குதித்த பக்த ஆஞ்சநேயனே (ஆஞ்சநேயனே)

சஞ்சீவியைக் கொணர்ந்த ஆஞ்சநேயனே – என்றும்
சிரஞ்சீவி யாயிருக்கும் ஆஞ்சநேயனே (ஆஞ்சநேயனே)

சீதைக் குயிர்கொடுத்த ஆஞ்சநேயனே
சிந்தித் திருக்கும் பக்த ஆஞ்சநேயனே (ஆஞ்சநேயனே)

ராமநாம த்யானம் செய்யும் ஆஞ்சநேயனே – சீதா
ராம தூதனாக வந்த ஆஞ்சநேயனே (ஆஞ்சநேயனே)

2. ஜெயஹனுமான் ஜெயஹனுமான்
மாருதிராயா ஜெயஹனுமான்
ஜெ யஹனுமான் ஜெய ஹனுமான்
மாருதி ராயா ஜெய ஹனுமான் (ஜெய)

ஜெயஹனுமான் ஜெயஹனுமான்
வாயுகுமாரா ஜெயஹனுமான்
ஜெயஹனுமான் ஜெயஹனுமான்
அஞ்சனிபுத்ரா ஜெயஹனுமான் (ஜெய)

ஜெயஹனுமான் ஜெயஹனுமான்
ஸ்ரீராமதூதா ஜெயஹனுமான்
ஜெயஹனுமான் ஜெயஹனுமான்
மஹானுபாவா ஜெயஹனுமான் (ஜெய)

வீரமாருதி எங்கள் வீரமாருதி
வீரமாருதி கம்பீர மாருதி (வீர)
ராமமாருதி ராமநாம மாருதி
நேமமாருதி அதிநேம மாருதி (ராம)
ராமராம ராம—ஜெய ராம ராம ராம – (ராம)
ராம் ராம் ராம் ராம் ராம் ராம் (ஜெய)

3. அஞ்சனி மைந்தா ஆஞ்சநேயா
அருளது தருவாய் ஆஞ்சநேயா (அஞ்சனி)

ஆபத் பாந்தவா ஆஞ்சநேயா
ஆதரித் தருள்வாய் ஆஞ்சநேயா (அஞ்சனி)

இலங்கையை எரித்தவா ஆஞ்சநேயா
இகபர சுகமருள் ஆஞ்சநேயா (அஞ்சனி)

ஈடில்லா பலவானே ஆஞ்சநேயா
ஈகை மிகுந்தவா ஆஞ்சநேயா (அஞ்சனி)

உலகம் வியக்கும் ஆஞ்சநேயா – உன்
பக்தன் நானய்யா ஆஞ்சநேயா (அஞ்சனி)

ஊக்கம் தருவாய் ஆஞ்சநேயா
ஊழ்வினை தீர்ப்பாய் ஆஞ்சநேயா (அஞ்சனி)

எங்கள் நாயகா ஆஞ்சநேயா
எங்களை காப்பாய் ஆஞ்சநேயா (அஞ்சனி)

ஸ்ரீராம பக்தா ஆஞ்சநேயா – நீ
சிறப்புடன் வருவாய் ஆஞ்சநேயா (அஞ்சனி)

4. வாயுபுத்திரனே ஆஞ்சநேயா தவத்தின்
வலிமையில் சிறந்தவனே ஆஞ்சநேயா (வாயு)
ஆயுளை பலப்படுத்தும் ஆஞ்சநேயா – என்றும்
அழிவற்ற சிரஞ்சீவி ஆஞ்சநேயா
ஆஞ்சநேயா – ஆஞ்சநேயா – ஆஞ்சநேயா – ஆஞ்சநேயா (வாயு)

தூதுக்கு உகந்தவனே ஆஞ்சநேயா – பல
துன்பங்களை சகித்தவனே ஆஞ்சநேயா (தூது)
சீதையை மீட்டிதந்த ஆஞ்சநேயா – ஒரு
சஞ்சீவி கொண்டுவந்த ஆஞ்சநேயா
ஆஞ்சநேயா – ஆஞ்சநேயா – ஆஞ்சநேயா – ஆஞ்சநேயா (வாயு)

நெஞ்சை – கிழித்து அதில் ஆஞ்சநேயா – ராமர்
நிற்கின்ற காட்சிதந்தாய் ஆஞ்சநேயா (நெஞ்சை)
சீதையையும் ராமனையும் ஆஞ்சநேயா – என்றும்
சேர்த்தே பார்க்கின்ற ஆஞ்சநேயா
ஆஞ்சநேயா – ஆஞ்சநேயா – ஆஞ்சநேயா – ஆஞ்சநேயா (வாயு)

அவதாரம் முடித்தராமர் ஆஞ்சநேயா – உன்னை
அழைத்தார் வைகுண்டம் ஆஞ்சநேயா (அவதாரம்)
சுகங்களை விரும்பாத ஆஞ்சநேயா – ராமனை

சொல்லஇங்கு தங்கி விட்டாய் ஆஞ்சநேயா
ஆஞ்சநேயா – ஆஞ்சநேயா – ஆஞ்சநேயா – ஆஞ்சநேயா (வாயு)

5. வெண்ணையை சாற்றிநின்றோம் அனுமந்தா ஆஞ்சநேயா
வடமாலை சூட்டிநின்றோம் அனுமந்தா ஆஞ்சநேயா
வெற்றிலை மாலைகட்டி, திருஷ்டியை போக்கவந்தோம் (வெற்றி)
வெண்ணையை ஊற்றிவைத்தோம், நெய்தீபம் ஏற்றி வைத்தோம்
ராமஹரி, ஹரிராமஹரி, ராமஹரி, ஹரிராமஹரி (வெண்ணை)

கிருஷ்ணனை ராமனாக்கிய அனுமந்தா ஆஞ்சநேயா
ருக்மணியை சீதையாக்கிய அனுமந்தா ஆஞ்சநேயா (கிருஷ்ண)
சந்தியபாமா...ஆ..ஆ...(சத்ய) ஆவணம் தன்னை
உனைகொண்டு தானே, அந்த மாயகண்ணன் தீர்த்து வைத்தான்
ராமஹரி, ஹரிராமஹரி, ராமஹரி, ஹரிராமஹரி (வெண்ணை)

வீமனின் அண்ணனான அனுமந்தா ஆஞ்சநேயா
ராமனின் வெற்றிக்கு துணைநின்ற அனுமந்த ஆஞ்சநேயா (வீமனின்)
தவங்களில் நாளும் பலங்களை சேர்த்து
வணங்கிடும் அடியார்வாழ்வில் இன்பம்சேர்க்கும்
ராமஹரி, ஹரிராமஹரி, ராமஹரி, ஹரிராமஹரி (வெண்ணை)

6. ஓம் அஞ்சனையின் மைந்தா நமோ நமோ
ஓம் ஆஞ்ச நேயனே நமோ நமோ (ஓம்)

ஓம் வஞ்சனைகள் ஒழித்தோம் நமோ நமோ
ஓம் வாழ்வினை வளர்த்தோம் நமோ நமோ
ஓம் பஞ்சமுக கேசரி நமோ நமோ
ஓம் பவித்ர நாயக நமோ நமோ (ஓம்)

ஓம் பயத்தினை நீக்கும் பாவத்தை போக்கும் கிழக்கு முகத்திற்கு நமோ நமோ
ஓம் தோஷத்தை நீக்கும் துன்பத்தை போக்கும் தெற்கு முகத்திற்கு நமோ நமோ
ஓம் நோய்களை தீர்க்கும் ஆயுளை வளர்க்கும் மேற்கு முகத்திற்கு நமோ நமோ
ஓம் தீராத கடனையும் தீர்த்து வைக்கும் வடக்கு முகத்திற்கு நமோ நமோ
ஓம் மதியுடன் நிதிதர நமோநமோ உன் மேல்முகத்திற்கு நமோ நமோ (ஓம்)

திருப்பதி மலையில் குடி கொண்டிருக்கும் சதுர்புஜ ஆஞ்சநேயா நமோ நமோ
தென்பெண்ணை ஆற்றின் நடுவினில்உள்ள வாக்களை ஆஞ்சநேயா நமோ நமோ
அனந்த மங்கல திருநேந்திரத்தில் சதுர்முக அனுமான் நமோ நமோ
சுயமாய் அருளினை வழங்கிநின்றிடும் சுசீந்தர அனுமான் நமோ நமோ (ஓம்)

7. ஜெய் ஹனுமான் ஜெய் ஹனுமான்
சீதா சோக விநாசன சந்த்ரா (ஜெய்)

மாருதிராயா பலபீமா பஜனாலாகே தேப்ரேமா
பக்த சகாயா சஞ்சீவி ராயா (ஜெய்)

வாயுபுத்ரா பலபீமா வானர நேத்ராதேப்ரேமா
அஞ்ஜன புத்ர ஸ்ரீராம தூத (ஜெய்)

8. மாருதி ராயா வானரகாய நமிதோமீபாய
ஸ்ரீராமாகே பஜன கரீதோ தேமஜ குணகாயா

ராம லக்ஷ்மண பரதசத்ருக்ன கைவாரி ஹனுமான்
ஆயோத்யாசே ராஜ்யகரிதோ தே ஏக பகவான்

ராமஜானகி கிருஷ்ண பைஷ்மீகி ராதே கோவிந்த
ஹரே ராம ஹரே ராம ரகுமாயி பாண்டுரங்க

9. அஞ்சனேய மாருதி அப்ரமேய மாருதி
வாயுகுமார மாருதி வானரவீர மாருதி
ராமப்ரிய மாருதி ராம நாமப்ரிய மாருதி

**ஆஞ்சநேய பூஜிதனே... சரணம் ஐயப்பா**

ஸ்வாமியே... சரணம் ஐயப்பா
எங்கள் குலதெய்வமே.... ,,
சர்வா பீஷ்ட தாயகனே.... ,,
கன்னிமூல கணபதி பகவானே.... ,,
சர்வமங்கள தாயகனே.... ,,

ஓம் தெரிந்தும், தெரியாமலும், அறிந்தும், அறியாமலும் செய்த சகல குற்றங்களையும் பொறுத்துக்காத்து ரக்ஷிக்க வேண்டும். சத்தியமான பொன்னு பதினெட்டாம் படிமேல் வாழும் ஹரிஹரசுதன், ஆனந்த சித்தன் ஐயன் ஐயப்ப ஸ்வாமியே...... சரணம் ஐயப்பா.

## விருத்தம்

1. ஆனைமுகத்தோன் தம்பி அருள் குமரனுக்கிளையோன்
வானவர் போற்றும் வாணி வந்தெனக்கு அருளவேணும்
சேனையில் தலைவர் போற்றும் தென்குளத் தூரிலையன்
கானக விளையாட்டெல்லாம் கருத்துடன் போற்றாய் நெஞ்சே

2. அந்தணர் முனிவர் சூழ அற்புத சபையைப் போற்றி
மந்திரம் கையிலேந்தும் வாழ்குளத்தூரான் மீதில்
சிந்தையில் உதித்த செல்வம் செப்புமென் கவிவிளங்க
கந்தனும் குருவும் வாணி கஜமுகன் காப்பதாமே.

3. சாஸ்தா நமக்குண்டு தாய்போல்வருவார் இந்தத் தனிவழிக்கே
பார்த்தால் நமக்கு பயமேதுமில்லை பயந்து பயந்து
ஆற்றாமல் சொல்லி அபயமிட்டோடி வரும் சுரர்தமை
காத்தே வரும் கடிய குன்றேறிய காவலனே.

4. வாழையும் தெங்கும் வரிக்கைப் பலாவுடன் மாங்கனியும்
சோலையும் சுருள் வண்டுலாவும் குளத்தூர் பதியில் சென்றால்
கங்கா நதிக்கும் ஹிமசேது மட்டுக்கும் இந்தக் கலியுகத்தில்
உன் காவில் அதிசயம்போல் கண்டதில்லை என்பவர்க்கும்
சிங்கார வஞ்சி மலையேறி சனிவாரம் தொழுதவர்க்கும்
மங்காதசர்வாபீஷ்டமும் கொடுப்பதாமே.

முந்திய சிவனார் போற்றி மூர்க்கனாம் அசுரன் போற்றி

இந்திர வரவும் ஏற்றி ஈசனார் வேஷம் போற்றி
பந்தடிக் கமலம் வெற்றி வந்ததோர் விரஹம் மாற்றி
சந்ததியான மூர்த்தி தர்ம சாஸ்தா போற்றி போற்றி.

## அவதார விருத்தம்

அதிதவம் செய்ததோர் அசுரன்முன் சென்று
வெகு ஆனந்தமாகி அரனும்
'ஆதரவு செய்கிறோம் பேதமில்லை' என்றவுடன்
'அரஹர' என்று அவனும்
'மதியணிப் பொருளனே! நீ வரம்தர
என்கை வைத்ததலை நீறாகவே
அதிவரமீய வேண்டும்' என்ன, 'அருளினோ'
மென்றவுடன் மனமகிழ்ந்தே அசுரனும்

சதியாக ஈசருடைய தலைதொடச் சென்றவுடன்
தருவனம் தனில் ஒளிந்தார்
அதிஸம்ப்ரமம் கேட்டு வெகு சம்பிரம
நெடியமால் சரஸ மோகினியாகவே
பதிபுகழ் அசுரனை பஸ்பமாகச் செய்தார்
பாரெல்லாம் தேடு மால்தன்
ஹித பருவமும் ஸ்வரூபமும் கண்டு புணர்
ஸ்தாணுமால் பாலனே மணிகண்டனே!

## விருதிகள்

1. அத்தாதி புத்திரனார் ஆதிகுளத்தூரானும்
வெற்றியுள்ள கோபுரமும் வெகுமையுள்ள பூ முகப்பும்
சுற்றிவர பொற்கதவும் ஸ்தூபியின்மேல் பொற்குடமும்
இத்தலங்கள் காணப் பதினாயிரம் கண் வேண்டுமையா!

2. ஓங்காரப் பஞ்சணைமேல் உவந்து விளையாட வந்த
ஆங்காரப்பூரணியே ஆதரிக்கும் தென்குளத்தூர்
தேங்காய் கொடுத்தாலும் சிரட்டைகொடான் இண்டலையான்
பூங்காவிற்குள்ளிருக்கும் புண்ணியனைக் கொண்டாட

3. குளத்தூரிலேயிருந்து குடியிருந்து அவதரித்து
வளர்த்தொருதாய் பெற்றெடுத்த மாதா அவளுக்கிணையாய்
குளத்தூரில் பதி நற்குலக் கன்னியர்கள் தந்த செல்வம்
குளத்தூரில் ஐயன் என்றால் குற்றம் ஒன்றும் வராதே!

4. மாணிக்கமாலை மகிழ் மாலை பூமாலை
காணிக்கை கொண்டு வந்து காண்பார் தினந்தோறும்
ஆணிப்பொன்மார்பன் அழகன் குளத்தூரானைப்
பேணித்தொழாய் நெஞ்சே! பிழைகளென்றும் வாராதே!

5. கற்கரடு பொற்பதக்கம் கனகமுத்துச் சுவடிகளும்
மெய்யாய்ச் சுமந்திருக்கும் விரகா உன் திருமேனி

வட்டமிட்டு வரும் பேயைத் தடியெடுத்துத்தான் விரட்டும்
மிக்க நல்ல குளத்தூரான் வெள்ளைக்கல் ஆதிபனே!

6. நாள் கேட்டு முகூர்த்தமிட்டு நல்ல நாள் என்று சொல்லி
வீட்டை விட்டுச் சுமடெடுத்துச் சிவசைல வீதியிலே
கூட்டமெல்லாம் கூடி குளத்தூரிலே நினைவாய்த்
தாஷ்டிகமாய் வழிநடத்தும் தர்ம குளத்தூரில் ஐயா!

7. உற்றார் இருக்க உடன்பிறப்புத் தானிருக்கப்
பெற்றோரிருக்கப் புறப்பட்டேன் உன் காவல் (என்)
தந்தை மனமுருக சோதரன் கண்ணீர் பெருக்க
பந்து ஜனமுருக பெற்றமக்கள் தானுருக

8. சொந்த மனையாள் தூண்டில் மச்சம்போல் துடிதுடிக்க
இந்தப் பிறவிகள் தீர்க்க இரக்கமில்லையோ ஸ்வாமி?
வியர்த்ததெல்லாம் பனிநீராய் வெண் சாமரம் வீச
காத்தவனே குளத்தூரான் சிவ காந்தமலைக் காவலனே!

9. கல்லான மலையேறித் தடலேறிக் குன்றேறி
இல்லாமையால் அல்லவோ இந்தமலை ஏறுவதும்
வல்லாள யக்ஷிகளும் பாண்டி பரதேசிகளைக்
கொல்லாமல் காத்தருள்வாய் குளத்தூரிலையாவே!

10. மேகம் இருண்டுவர, விடுதிகளும் காணாமல்
காகம்போல் உமதடியேன் கலங்குவது காணீரோ?
ஆக்கம் மிகத்தளர்ந்தேன் ஐயனே தென்குளத்தூர்
நாகம் அணிந்தவனே! நல்லமலை சாஸ்தவே!

11. பலமரங்கள் கிடுகிடென மலையருவி திடுதிடென
இரவுபகல் அறியாமல் பெருமாரி பொழிகாலம்
பாராய் பராபரனே! பரதேசிக்காவலனே!
வரங்கள் கொடுப்பவனே! வாழ்க்குளத்தூராதிபனே!

12. பிடித்தவடி கிடுகிடென பின்னுதவியில்லாமல்
நடுக்கடலில் குரங்கினம்போல் நான்தவிக்கும் அந்நேரம்
எடுத்த வில்லும் சுரிகையுமாய் அவர் பிறகே செறுக்கனுமாய்
காத்தவனே! குளத்தூரா சிவகாந்தமலைக் காவலனே!

13. எதிர்க்காற்றும் பெருமழையும் எடுத்தடிவைக்க ஒட்டாமல்
பெரியாற்றின் கரைதனிலே பரிதவிக்கும் அந்நேரம்
அலையாமல் தோணிகட்டி அக்கரைக்கே கடத்திவிடும்
பலம் உமக்கு சாஸ்தவே! பரதேசிக் காவலனே!

14. கல்லோ இரும்போ கடும் வஜ்ரமோ சித்தமது
பொல்லாக் கொலைக்கோ குலதெய்வமென்று கையெடுத்தேன்
கல்லும் இரங்கும் கடும் வஜ்ரமும் தானிரங்கும்
புல்லும் இரங்கும் பேய் பிடாரியும்தான் இரங்கும்!

15. நம்பிவந்தேன் ஸன்னதியில் நன்மை தர வேண்டுமென்று
பாடிவந்தேன் உன் பெயரைப் பாக்யம் மிகத் தந்தருள்வாய்

பெற்றோரைப் போலே என் பிழை பொறுத்து ஆதரிப்பாய்
விஸ்தார மணிமார்பா! வெள்ளைக்கல் ஆதிபனே!

16. மீனெடுத்து விழுங்கியதோர் மெய்யான திரவியத்தைத்
தானெடுத்துக் கொடுத்த அந்தத் தம்புரானும் நீரல்லவோ?
ஈற்றரவு வன்புலியும் இணங்கி விளையாடவைத்தாய்
எங்களது சாஸ்தாவே உனக்குச் சரி தெய்வம் ஏதுலகில்?

17. உனைநம்பும் எங்களுக்கு ஒருவினையும் வாராதென்று
நினைத்திருந்து காலமெல்லாம் ஏங்குதையா என்மனது
ஓங்கி எனது மனம் ஒன்று, பத்து நூறாகும்
சங்கைகொண்டு திருவாரியங்கா வையாவே!

18. கச்சை கட்டி முண்டுடுத்து மூங்கில்தடி பிடித்து
பதினெட்டாம் குன்றேறிப் பார்க்கவந்தேன் உன்மகிமை
பாரமாம் சுமடெடுத்து பதினெட்டாம் குன்றேறி
ஏற்றமெல்லாம் கடந்து இளைப்பாறும் அந்நேரம்

19. பொல்லாத மழைபெய்ய புனலாறு பெருகிவர
கல்லானை மிதந்துவர காட்டெருமை மிரண்டோட
மெய்யாகும் கன்னியர்கள் மேதினியிற் குரவையிட
அய்யன் திருவுள்ளமே! திரு ஆரியங்கா வையாவே!

20. ஐயாஉன் சன்னதியில் நம்பிவந்தேன் ஆண்டவனே
அக்ஷணமே வந்துதவும் சபரிமலை சாஸ்தவே
ஆதியந்தம் இல்லாத அற்புதனே குருநமக்கு
வேத ஒளியாம் சபரி மெய்யனாம் ஆண்டவனே!

21. அந்திநிறத் தெய்வம் த்ரிபுராந்தகனார் மோகினியை
சொந்தமுடனே புணர்ந்தார் சத்தியனும்தான் பிறந்தான்
உத்திர நக்ஷத்திரத்தில் உதித்தவனே காந்தமலை
மித்ரஜனம் சூழவே தென் குளத்தூராதிபனே!

22. ஏறாத இடமெல்லாம் ஏறி வருவார் தினமும்
ஆறாத அரும் பசியை ஆற்றும் திரு ஆரியனே!
மாறாத ரோகமெல்லாம் மாற்றி என்னைக் காத்தருளும்
பேறு உனக்குநிகர் வேறுயார் மணிகண்டனே!

23. ஐந்துஸ்தலம் என்றுரைப்பார் அறியாத மானிடர்கள்
எந்தன் இதயம் முதலாய் எண்திசையுண்டு அவயவங்கள்
சந்திரன்சேர் தென் கரந்தை சத்திய சமூஹரிடம்
சுந்தரனே காந்தமலை தர்ம குளத்தூரிலையா!

24. ஒப்பு உமக்கு யாருலகில் எந்தனுக்கிசைந்த தெய்வம்
அம்புவியில் கரந்தையனே தொண்டர் பயம் தீர்த்தவனே
பாவத்தை நீக்கிவைப்பாய் பாக்யம் மிகத்தான் தருவாய்
பூபதியாய் வந்துதித்த புகழ் குளத்தூராதிபனே.

## விருத்தம்

ஆனந்த புளகிதமாய் வாணியும்
பிரம்மாவும் அருகினில் ஓடிவந்து
அம்புஜக் கையினால் இன்பமுடனே எடுத்து
அன்புடன் மடியில் வைத்து
தேனிலும் முலைப்பாலிலும் சென்றொரு
தினமதாய் தினமொரு வளர்த்திவர

செய்வதோர் ஜாதகர்ம நாமகரணங்களும்
சிறப்புடன் செந்துமப்பால்

வானவர்கள் மெய்க்கவே சௌள
உபநயனங்களும் சிறப்புடன் செய்திரண்டு
மங்கையர் இங்கிதம் அறிந்தரசர்
மாலையிட மணமுடன் வேள்வி செய்து
ஆனதொரு வித்தைகள் அறுபத்து நான்கு கலை
அடவுடன் சொல்லி வைத்து
அம்புவியில் ஈரேழு அன்பர்க்கும் அன்பனே
அருள் பெற்ற மணிகண்டனே

1. பவனி வருகிறார் ஸ்வாமி பவனி வருகிறார்
அவனியெல்லாம் புகழ்மணக்க பவனி வருகிறார்
கவலைகளைத் தீர்த்து வைக்கும் கடவுள் வருகிறார்
ஆவலோடு கும்பிடுவோம் சரணமய்யப்பா

சரணமய்யப்பா ஸ்வாமி சரணமய்யப்பா
வரணுமய்யப்பா இங்கே வரணுமய்யப்பா

ஐந்து மலைக்கதிபனிங்கே பவனி வருகிறார்
ஐங்கரனின் சோதரனார் பவனி வருகிறார்
ஐந்திரண்டு கரங்களினால் அருளைத் தருகிறார்
வந்தனைகள் செய்திடுவோம் சரணமய்யப்பா

(சரண)

ஹரிஹரனின் புத்திரனார் பவனி வருகிறார்
ஆர்யங்கா நாயகனும் பவனி வருகிறார்
அச்சன் கோவில் ஆண்டவனும் பவனி வருகிறார்
இச்சையோடு கும்பிடுவோம் சரணமய்யப்பா

(சரண)

வில்லாளி வீரனிங்கே பவனி வருகிறார்
கல்யாண கோலம் கொண்டு பவனி வருகிறார்
பூர்ணபுஷ்கலேச்வரனும் பவனி வருகிறார்
பூர்ணகும்பம் வைத்தழைப்போம் சரணமய்யப்பா

(சரண)

கடகடவென பேரிமுழங்க ஸ்வாமி வருகிறார்
கொட்டுவாத்யம் முழங்கிடவே ஐயன் வருகிறார்
மாடன் சடயன் பொருளன் இருளன் சரணமய்யப்பா
ஓடிவரவே பவனிவரார் சரணமய்யப்பா

(சரண)

பிள்ளை இல்லாக் குறை தீர்க்கும் ஐயன் வருகிறார்
கள்ளமில்லா அன்பருக்கு காட்சி தருகிறார்
இல்லையென்று சொல்லாத வள்ளல் வருகிறார்
நம் இல்லத்திலே (உள்ளத்திலே) குடிபுகுந்தார்
சரணமய்யப்பா (சரண)

2. நான் பாட நீ ஆடி வருவாய்—வன்
புலியோடு விளையாடும் மணிகண்டா இசையோடு (நான்)

ஒரு நாளும் உனை வாழ்வில் மறவேன்—என்
திரு நாளும் உனைக் காணும் நன்னாளே யன்றோ (நான்)

வானோர்கள் துதி பாடும் தெய்வம்—ஹரி
ஹரனுக்கு மகனாக பிறந்திட்ட செல்வம்
பாராளும் அருள் ஜோதி நீயே—உனை
அல்லாது என் வாழ்வில் கடைத்தேற வழியேது (நான்)

3. ஐந்துமலை ஐயப்பா! சாஸ்தாவே ஐயப்பா!!
ஐந்துமலை ஐயப்பா! சாஸ்தாவே ஐயப்பா!!

கார்த்திகையில் மாலை போட்டு கடும்பயணம் போகச் சொல்லி
கட்டளையும் இட்டாயோ ஐயப்பா – அதை
காத்திடவே ஓடிவந்தோம் ஐயப்பா! (ஐந்துமலை

பாயினிலே படுக்கை இன்றி பனிமலையில் போகச் சொல்லி
ஆணையிட்ட ஐயப்பனைக் காணவே – இந்த
கானகத்தில் ஓடிவந்தோம் ஐயப்பா! (ஐந்துமலை

காலைமாலை குளிக்கச் சொல்லி மனமுவந்து பூஜை செய்ய
பக்தருக்கு சொன்னாயே ஐயப்பா – உன்னை
பார்த்திடவே ஓடிவந்தோம் ஐயப்பா (ஐந்துமலை)

இருமுடிகள் தாங்கிவர இட்டஉந்தன் கட்டளையை
ஏற்று இங்கே ஓடிவந்தோம் ஐயப்பா – இந்த
ஏழைமுகம் பாராயோ ஐயப்பா! (ஐந்துமலை)

4. வாரார் அய்யா வாராரே வழிநடையாய் வாராரே
வழிநடையாய் வாராரே பெருவழியில் வாராரே
பெருவழியில் வாராரே பேரின்பம் தாராரே (வாரா)

அச்சங்கோயில் அரசருமே அவசரமாய் வாராரே
ஆரியங்கா ஐயனுமே ஆனந்தமாய் வாராரே
குளத்துப்புழை பாலகனும் குறைகள் தீர்க்க வாராரே
பந்தளத்துப் பாலகனும் பாவம் போக்க வாராரே (வாரா)

எரிமேலி சாஸ்தாவுமே ஏகாந்தமாய் வாராரே
காளைகட்டி நாதனுமே கவலைதீர்க்க வாராரே
அழுதையிலே ஸ்நானம் செய்து அரிகரனும் வாராரே
அரிகரனும் வாராரே அய்யப்பனும் வாராரே (வாரா)

பதினெட்டாம் படிஇறங்கி பாலகனும் வாராரே
பாலகனும் வாராரே பூதபடைகளுடன் வாராரே
பம்பையிலே ஸ்நானம் செய்து பந்தளனும் வாராரே
பந்தளனும் வாராரே பாலகனும் வாராரே (வாரா)

கரிமலையின் ஏற்றத்திலே கண்ணன் மகன் வாராரே
கண்ணன்மகன் வாராரே கஷ்டம்போக்க வாராரே
கற்பூர பிரியனுமே கவலை தீர்க்க வாராரே
காந்தமலை வாசனுமே கருணைஉள்ளம் தாராரே (வாரா)

சபரிமலை நாதனுமே சரணம்கேட்டு வாராரே
வில் எடுத்து அம்பெடுத்து வேட்டையாடி வாராரே
வீரமணி கண்டனுமே வீரத்துடன் வாராரே
வாரா ரய்யா வாராரே வன்புலிமேல் வாராரே
வன்புலிமேல் வாராரே கெம்பீரமாய் வாராரே (வாரா)

5. ஜோதியின் திருவுருவே சுந்தர பெருவடிவே
பந்தள நாயகனே ஐயப்பா அருள்புரிவாய் (ஜோதி)
சிவஹரி சாஸ்தாவே சிறப்புடனே வந்திடுவாய்
குளத்துப்புழை பாலகனே கும்பிட வருகின்றோம் (ஜோதி)

தவமிருந்தோம் உனக்காக வரமருள்வாய் எனக்காக
மகரஜோதி யானவனே மணிகண்ட மெய்பொருளே (ஜோதி)
பதினெட்டு படியேறி பண்பாடி வருகின்றோம்
கதிமாற அருள்புரிவாய் விதிவெல்ல வழிசொல்வாய் (ஜோதி)

உன்புகழை பாடிடவே ஒருபிள்ளை போதாது
என்நிலை உயர்ந்திடவே என்னாளும் மனம் வைப்பாய் (ஜோதி)

6. வருவாய் விரைவாய் வரம்எனக் கருள்வாய்
வன்புலி வாகன சபரீஸா
தருவாய் வரம்தான் தர்மசொரூபா
தஞ்சமென் றடைந்தோம் சர்வேஸா (வருவாய்)

திருவே உருவே திருமால் மகனே
தினமும் தொழுதோம் சபரீஸா
ஹரிஹர சுதனே ஐயப்பா தெய்வமே
அனுக்கிரகம் புரிவாய் சர்வேஸா (வருவாய்)

அம்மையும் நீதான் அப்பனும் நீதான்
அனைத்துமே நீதான் சபரீஸா
உன்னையே பணிந்தேன் உருகியே நின்றேன்
உத்தமனே வா சர்வேஸா (வருவாய்)

சின்முத் திரையாய் சிறுபுன் னகையாய்
சித்துகள் ஆடும் சபரீஸா
என்குருநாதா எரிமேலி சாஸ்தா
ஏற்றம் தருவாய் சர்வேஸா (வருவாய்)

7. ஆனைபுலி கூட்டமெல்லாம் ஆளுக்கொரு மரம்ஒடித்து
பாதைபோட நடந்து வந்தோம் ஐயப்பா (ஆனை)
ஏறிவரும் போதுஎங்கள் குறைகளெல்லாம் இறங்கிவர
மனம்குளிர பாடிவந்தோம் ஐயப்பா – ஐயப்பா சாமி ஐயப்பா
திந்தக்க, திந்தக்க, திந்தகத்தோம் என வந்துவிட்டோம் மலை ஏறிவிட்டோம்
(திந்தக்க)

(ஆனை)

பம்பைஎன்னும் பாற்கடலில் மூழ்கிஎழும் போது எங்கள்
பாவமெல்லாம் கரையுமப்பா பிரம்மபாலனே
ஆபரணப் பெட்டியோடு, காவலுக்கு பருந்துவர
பரவசமாய் சரணம் எழும் ஐயப்பா ஐயப்பா சாமி ஐயப்பா (ஆனை)

பதினெட்டாம் படியேறி பக்தியுடன் வருகையிலே
சாமி திந்தக்க, ஐயப்ப திந்தக்க சரணகோஷமே
காலமெல்லாம் உன்வாசல் காணவரும் பக்தர்களை
ஆதரிப்பாய் அரவணைப்பாய் ஐயப்பா ஐயப்பா சாமி ஐயப்பா (ஆனை)

கற்பூர ஜோதியிலே கவலையெல்லாம் சாம்பலென
ஓங்கி விண்ணை பிளக்குதய்யா சரணகோஷமே
ஜாதிமத பேதமெல்லாம் ஏதுஉந்தன் சந்ததியில்
பேதமின்றி பாடிவந்தோம் ஐயப்பா ஐயப்பா சாமி ஐயப்பா (ஆனை)

8. வட்டநல்ல பொட்டுவைத்து வடிவழகாய் இருப்பவனே
வன்புலி வாகனனே ஐயப்பா – நாங்கள்
வந்துஉன்னை பார்க்கப்போறோம் ஐயப்பா (நாங்கள்) (வட்ட)

அச்சங்கோவில் ஆண்டவனே ஆரியங்கா வாழ்பவனே
ஆலகாலன் மைந்தனே ஐயப்பா – உன்னை
ஆவலோடு காண வாரோம் ஐயப்பா (உன்னை) (வட்ட)

குருமகன்குறை தீர்த்தவனே குளத்துப்புழை பாலகனே
குழந்தைமணி கண்டனே ஐயப்பா – உன்னை
கும்பிடவே வந்திடுவோம் ஐயப்பா (உன்னை) (வட்ட)

உத்திரத்தில் உதித்தவனே உத்தமனே சத்தியனே
உலகநாதன் மைந்தனே ஐயப்பா – நாங்கள்
உன்னைவந்து பார்க்கப்போறோம் ஐயப்பா (நாங்கள்) (வட்ட)

9. வன்புலிமேல் ஏறிவரும் – எங்கள்
வீரமணி கண்டனே வா, ஐயப்பா (வன்) – உந்தன்
வீர விளையாடல்களை பாட
வாணிதடை கூறவில்லையே (வன்)

கொஞ்சி கொஞ்சி பேசும் உந்தன் – அந்த
பிஞ்சுமொழி கே ட்டிடவே (கொஞ்சி) அந்த
பந்தளத்தார் செய்த தவம் – இந்த
பாமரன் நான் செய்ய வில்லையே–யே–யே (வன்)

பாலெடுக்க புலியெதற்கோ – ஐயப்பா (பாலெ) உந்தன்
பார்வையும்தான் சக்தி யற்றதோ ஐயப்பா (பாலெ) அருட்
பார்வை ஒன்றே போதுமப்பா – ஞான
பால் பொழிய வேண்டுமப்பா – ஆ – ஆ – ஆ – (வன்)

வில்லும் அம்பும் கையில் எதற்கோ – ஐயப்பா (வில்) அந்த
வாவரைதான் வெற்றி கொள்ளவோ ஐயப்பா (வில்) உந்தன்
பக்தர்களின் துயர்களையே நீ
வேட்டையாடி விரட்டிடவோ ஓ – ஓ – ஓ – (வன்)

காந்தமலை ஜோதி எங்களை – வஜ்ர
காந்தம்போல இழுக்குதப்பா – ஐயப்பா (காந்த) காஞ்சி
காமகோடி நாதன் கண்களில் – அதையும்
காண வரம் வேண்டுமப்பா – ஆ – ஆ – ஆ (வன்)

கோவளமாம் கேரளத்தில் – எங்கும்
கோவில் கொண்ட எங்கள் ஐயப்பா (கோவள) எங்கள்
குறைகளை தீர்த்திடு வாய் எங்கள்
குலமதை காத்திடுவாய் இ–இ–இ (வன்புலி)

10. நெய்அபிஷேகா நெய்அபிஷேகா
நெய்அபிஷேகா நெய்அபிஷேகா (நெய்)

கார்த்திகையில் மாலை போட்டேன் நெய்அபிஷேகா – என்
கஷ்டமெல்லாம் நீக்கி வைப்பாய் நெய்அபிஷேகா
கண்கண்ட தெய்வமய்யா நெய்அபிஷேகா – நீ
கலியுக வரதனய்யா நெய்அபிஷேகா (நெய்)

அச்சங்கோவில் ஆண்டவனே நெய்அபிஷேகா – என்
அச்சமெல்லாம் நீக்கி வைப்பாய் நெய் அபிஷேகா
குளத்துபுழை பாலகனே நெய்அபிஷேகா – என்
குறைகளையே நீக்கி வைப்பாய் நெய்அபிஷேகா (நெய்)

எரிமேலி ஆண்டவனே நெய்அபிஷேகா – நீ
ஏகாந்த மூர்த்தி ஐயா நெய்அபிஷேகா – நாங்கள்
பேட்டை துள்ளி ஆடும்போது நெய்அபிஷேகா நீ
ஆட்டம் ஆடி வந்திடுவாய் நெய்அபிஷேகா (நெய்)

காடுமலை கடந்து வந்தோம் நெய்அபிஷேகா – உன்னை
காண நாங்கள் ஓடி வந்தோம் நெய்அபிஷேகா
மார்கழியில் மலை நடந்தேன் நெய்அபிஷேகா – நான்
மகரவிளக்கு காண வந்தேன் நெய்அபிஷேகா (நெய்)

11. பவனி வாராரிங்கே சுவாமி சரணமய்யப்பா
வாபர் சுவாமி கூடவாரார் சரணமய்யப்பா
காவலர்கள் கூடவாரார் சரணமய்யப்பா
ஆவலோடு கூப்பிடுவோம் சரணமய்யப்பா (பவனி)

அம்பும் வில்லும் கையிலேந்தி சுவாமி வருகிறார்
எம்பெருமான் துள்ளித்துள்ளி ஆடிவருகிறார்

துன்பமெல்லாம் தீர்த்திடவே பவனி வருகிறார்
இன்பமோடு கும்பிடுவோம் சரணம் ஐயப்பா (பவனி)

தந்தை தாயுமான சுவாமி பவனி வருகிறார்
வேதியர் சபைநடுவே சுவாமி வருகிறார்
பூதப் படை களுடனே ஐயன் வருகிறார்
இத்தருணம் காத்திடுவார் சரணமய்யப்பா (பவனி)

கடகடவென பேரிமுழங்க சுவாமி வருகிறார்
கொட்டு வாத்தியம் முழங்கிடவே ஐயன் வருகிறார்
மாடன் சடையன் பொருளன் இருளன் சரணமய்யப்பா
ஓடிவரவே பவனி வாரார் சரணமய்யப்பா (பவனி)

கடும்பிணியின் கொடுமையினால் வருந்தும் அன்பரை
நொடிப்பொழுதில் பிணியகற்றி காத்தருள் ஐயா
சரணம் ஐயப்பா சுவாமி சரணம் ஐயப்பா
சரணம் ஐயப்பா சுவாமி சரணம் ஐயப்பா (பவனி)

12. விண்ணும் மண்ணும் கிடுகிடுங்க வந்துவரம் நமக்கருள
சிங்கார பீடம் விட்டு ஜெகமருள ஓடி வரார்
ஐயப்பன்நாமம் சொல்ல நாங்க சரணகோஷம் செய்ய
(கோரஸ்) ஐயப்பன் நாமம் சொல்ல நாங்க சரணகோஷம் செய்ய (விண்ணும்)

கச்சை நல்ல வரிந்துகட்டி கருங்கச்சை சொங்கமிட்டு
முத்துநிற பொன்சிலம்பாம் கரண்டைமணி கலகலங்க
மஞ்சள்நிற பொன்னாம் அது மணிகண்டனின் பெயராம் (மஞ்)
(கோரஸ்) ஐயப்பன் நாமம் சொல்ல நாங்க சரணகோஷம் செய்ய (விண்ணும்)

அரவணைக்கும் கைகளிரெண்டில் அம்பும்வில்லும் தானெடுத்து
குண்டலங்கள் தானணிந்து குறைதீர்க்க வருவதுண்டு
வேதமெல்லாம் முடித்து திருவெண்நீறுமே பூசி (வேத)
(கோரஸ்) ஐயப்பன் நாமம் சொல்ல நாங்க சரணகோஷம் செய்ய (விண்ணும்)

அகண்டமணி மார்தனிலே உருண்டமணி கிலுகிலுங்க
பிரிநூலும் பூணழகும் துளசிமணி தொங்கிஆட
மார்பினிலே பதக்கம் அது பளபளன்னு ஜொலிக்கும் (மார்)
(கோரஸ்) ஐயப்பன் நாமம் சொல்ல நாங்க சரணகோஷம் செய்ய (விண்ணும்)

காலமெல்லாம் உனைதுதித்து கருத்துடனே வாழ்வதற்கு
சன்னதியில் வந்துஉன்னை தரிசனமும் கண்டிடவே
இருமுடியை ஏந்தி நாங்க ஒருமனதாய் வாரோம் (இரு)
(கோரஸ்) ஐயப்பன் நாமம் சொல்ல நாங்க சரணகோஷம் செய்ய (விண்ணும்)

13. நெய்தேங்காய் அடைத்து வந்தோம் ஐயப்பா – உன்னை
நேரில் காண ஓடிவந்தோம் ஐயப்பா – ஐயப்பா (நெய்)

இருமுடியை சுமந்து வந்தோம் ஐயப்பா – உன்
இருப்பிடத்தை நாடி வந்தோம் ஐயப்பா – ஐயப்பா (நெய்)

காடுமலை கடந்துவாரோம் ஐயப்பா – நாங்கள்
கடும்விரதம் இருந்து வாரோம் ஐயப்பா – ஐயப்பா (நெய்)

குருசாமி கூடவாரோம் ஐயப்பா –நாங்கள்
குற்றம் குறை சொல்லிவாரோம் ஐயப்பா – ஐயப்பா (நெய்)

எரிமேலி பேட்டை துள்ளி ஐயப்பா – நாங்கள்
ஏறிவாரோம் சபரிமலை ஐயப்பா – ஐயப்பா (நெய்)

***கண்கள் கலங்குதப்பா, கண்ணீரும் பெருகுதப்பா (கண்கள்)***
***கண்திறந்து பாருமப்பா ஐயப்பா - எங்கள்***
***கவலைகளை தீருமப்பா - ஐயப்பா - ஐயப்பா*** (நெய்)

ஐயப்பா – ஐயப்பா – ஐயப்பா – ஐயப்பா (நெய்)

14. என்மனதை கொள்ளை கொண்டாய் ஏ சபரிநாதா
எமக்குநல்ல வரமளிப்பாய் ஏ சபரிநாதா (என்)

காடுமலை ஏறிவந்தோம் ஏ சபரிநாதா
கடும்விரதம் இருந்துவந்தோம் ஏ சபரிநாதா (என்)

இருமுடியை தாங்கி வந்தோம் ஏ சபரிநாதா
பெருவழியை கடந்து வந்தோம் ஏ சபரிநாதா (என்)

பக்தர்களை காப்பவனே ஏ சபரிநாதா
பாவங்களை போக்கிடுவாய் ஏ சபரிநாதா (என்)

நீலமேக சியாமளனே ஏ சபரிநாதா
நல்விரதம் இருந்து வந்தோம் ஏ சபரிநாதா (என்)

தாசன்உன்னை சரணடைந்தேன் ஏ சபரிநாதா
மோசம் எம்மை செய்திடாதே ஏ சபரிநாதா (என்)

15. மணிகண்டனே மணிகண்டனே வாவா – உன்
மகரஜோதி காட்டிடவே வாவா – உன்
பக்தரெல்லாம் பூஜை செய்தோம் வாவா – அந்த
பரமசிவன் பாலகனே வா வா (மணி)

அச்சங்கோவில் அரசனே வாவா
அச்சமெல்லாம் போக்கிடவே வாவா
ஆரியங்கா ஐயாவே வாவா – அந்த
ஆனந்த ரூபனே வா வா (மணி)

குளத்துப்புழை பாலகனே வாவா
குழந்தை மணிகண்டனே வாவா
எரிமேலி சாஸ்தாவே வாவா
எங்கள்குல தெய்வமே வா வா (மணி)

பம்பைநதி பாலகனே வாவா
பரந்தாமன் மைந்தனே வாவா
சபரிமலை நாயகனே வாவா – எங்கள்
சஞ்சலங்கள் தீர்த்திடவே வா வா (மணி)

காந்தமலை ஜோதியே வாவா
கண்கண்ட தெய்வமே வாவா

கருணைக் கடலே வாவா – இந்த
கன்னிகளைக் காத்திடவே வா வா (மணி)

மோகினியின் பாலகனே வாவா
மோகன சுந்தரனே வாவா
அகிலலோக நாயகனே வாவா – எம்மை
ஆதரித்து அருள்புரிய வா வா (மணி)

16. நல்முத்து மணியோடு ஒளிசிந்தும் மாலை
நவரத்ன ஒளியோடு சுடர்விடும் மாலை
கற்பூர ஜோதியில் கலந்திடும் மாலை
கனகமணி கண்டனின் துளசிமணி மாலை (கனக) (நல்)

ஆயிரம் சரணங்கள் சொல்லிடும் மாலை
அய்யனின் கடைக்கண்ணில் அன்பெனும் மாலை
அழுதையில் குளித்திடும் அழகுமணி மாலை
பம்பையின் பாலனின் பவளமணி மாலை (நல்)

ஐந்துமலை வாசனின் அழகுமணி மாலை
ஐயப்ப சுவாமியின் அருள்கொஞ்சும் மாலை
ஆனந்த ரூபனின் அன்பெனும் மாலை
கன்னியின் கழுத்தினில் அரங்கேறும் மாலை (நல்)

முத்தோடு மணியோடு முழங்கிடும் மாலை
முக்கண்ணன் மகனாக மணிகண்டன் மாலை
கழுத்தோடு உறவாடும் காந்தமலை மாலை
காணவரும் பக்தருக்கு காட்சிதரும் மாலை (நல்)

17. பொய்யின்றி மெய்யோடு நெய்கொண்டு போனால்
ஐயனை நீ காணலாம் சபரியில் ஐயனை நீ காணலாம்
ஐயப்பா சாமி ஐயப்பா ஐயப்பா சரணம் ஐயப்பா (பொய்)

அவனை நாடு அவன்புகழ் பாடு
புகழோடு வாழவைப்பான் ஐயப்பன் – உன்னை
புகழோடு வாழவைப்பான் ஐயப்பன் (பொய்)

இருப்பது காடு வணங்குது நாடு அவனைக்
காண தேவை பண் பாடு (ஐயப்பா) (பொய்)

பூஜைகள் போடு தூய அன்போடு
பெயரோடு வாழவைப்பான் ஐயப்பன் – நல்ல
பெயரோடு வாழவைப்பான் ஐயப்பன்
அனைவரும் வாருங்கள் ஐயனை நாடுங்கள்
அருள்வேண்டும் அன்பரை எல்லாம் வாழவைப்பான் (ஐயப்பா) (பொய்)

18. என்ன வரம் வேண்டும் கேளுங்கள் – சபரி
மன்னவன் அருள்வான் பாருங்கள்
பொன்னம்பல மேடையில் கூடுங்கள் – ஐயன்
பொன்னடியைப் பணிந்து பாடுங்கள் – நீங்கள் (என்ன)

மண்டல நோன்பிருந்து மணிமாலையும் அணிந்து
அனுதினம் தவறாமல் சரணமும் சொல்லிவந்து

மணிகண்ட பெருமானின் மகிமையை யறிந்து – ஒரு
கணத்தில் நலம்சேர்க்கும் அரிகர சுதனிடம் (என்ன)

சத்தியச் சுடராக சபரியில் கோவில் கொண்டான்
தர்மத்தின் நாயகனாய் ஆரியங்காவில் அமர்ந்தான்
குளத்துப் புழைதனிலே பாலனாய்க் காட்சி தந்தான்
வழிகாட்டும் தெய்வமாம் வடிவேலன் தம்பியிடம் (என்ன)

19. மலைராஜன் திருக்கோவில் மணியாடுதே
சுகமான அருட்பாடல் இசை கேட்குதே
அபிஷேக மணம் காற்றில் அலைவீசுதே
ஐயப்பன் பதம்தேடி மனம் ஓடுதே (மலை)

வாவென்று வரவேற்கும் ஐயன் மலை
வாழ்நாளில் கடைத்தேற்றும் அருளின் எல்லை
நாள்தோறும் அருள் வேண்டும் அடியார் உள்ளம்
மழைமேகம் போல் பொங்கும் கருணை வெள்ளம் (மலை)

ஓமென்று குளிர்காற்று இசைபாடுதே
சபரி மலைமீது மழைமேகம் நடமாடுதே
நாம்வாழ நல்மார்க்கம் தெளிவாகுதே
ஆம் என்று ஐயப்பன் அருள் கூறுதே (மலை)

நோன்போடு சாஸ்தாவின் மலை நாடுவோம்
நம்வாழ்வில் அவன் பாதம் துணை தேடுவோம்
அடியாரின் மனம்யாவும் அவன்தானே ஆட்சி
ஐயப்பன் பெருமைக்கு அடியாரே சாட்சி (மலை)

20. ஆறிரண்டு வயதினிலே சரணம் ஐயப்பா
அறியாத பருவத்திலே சரணம் ஐயப்பா
அடர்வனம் சென்றுவிட்டான் சரணம் ஐயப்பா–ஒரு
முடிசுமந்து செல்லுகின்றான் சரணம் ஐயப்பா

கால்குழைந்து போனதோ–பொன்
உடல் தளர்ந்து போனதோ
அழிபசியும் சூழ்ந்ததோ அந்தப்
பரம் பொருளே அறிகுவான்.

கரிகரடி கூடிவரக் காரிருளில் ஆடிவர
கரந்தையர் சமூகம் சென்றான் சரணம் ஐயப்பா
கம்பங்குடிக்கு உடமை என்றான் சரணம் ஐயப்பா–அடிமை
சாஸனமும் எழுதித் தந்தான் சரணம் ஐயப்பா

21. செய்தபிழை பொறுத்துச் சிறியேனை ஆட்கொண்டு
சிந்தையில் வருவாயே குளத்தூரில் ஐயனே

வைதாலும் அவர் வாழ அருள் செய்யும் மணிகண்டா
வாயார வாழ்த்தி உன்னை வணங்குவோர்க்கு என்ன செய்வாய் (செய்த)

தலைபாரம் எடுத்துந்தன் சந்நிதி வந்தோரை
தாயென காப்பாயே அவர் பாரம் ஏற்பாயே
அலையாது எந்தன் மனம் அனுதினம் உனைப்பாட

அருள் செய்ய வருவாயே அடிமலர் தருவாயே (செய்த)

22. ஆரியங்காவய்ய லோகோத்தாரனே (ஆரி)

அகக்கண் திறந்து ஆட்கொள்ளும் ஐயனே (ஆரி)

பூர்ண புஷ்கலையுடன் கல்யாணக் கோலம் பூண்டு
சந்நதி வருவோர்க்கு அபயம் அளித்தும்
மண்டலம் அம்பலத்தில் தங்கிப் பணிவோர்க்கு
நிகரற்றப் பேரின்பச் செல்வம் தந்தருள்புரியும் (ஆரி)

ஓடும் உன் சந்நதி புண்ணிய நதியில்
ஸ்நான, ஜப, ஹோமம் தவறாது புரிவோர்க்கு
எந்நாளும் தாஸனாய் நிழல்போல் அருள்புரியும்
கலியுக ப்ரத்யக்ஷ தெய்வமாய் விளங்கிடும் (ஆரி)

23. நீல வஸ்த்ர தாரியே ஸ்வாமி ஐயப்பா
நித்ய பிரம்மச் சாரியே சரணம் ”
பம்பா நதி ஜாதனே ஸ்வாமி ”
பஞ்ச கிரி வாஸனே சரணம் ”
தேவதேவ தேவோத்தம ஸ்வாமி ”
வேதாகம பூஜித சரணம் ”
ராஜராஜ கம்பீரா ஸ்வாமி ”
ராஜகுல திலக சரணம் ”
மந்த ஹாஸ வதனா ஸ்வாமி ”
பந்தளத்து பாலனே சரணம் ”
விச்வம் நித்தம் கைதொழும் ஸ்வாமி ”
வீரமணி கண்டனே சரணம் ”

24. இருமுடியைச் சுமந்து வந்தேன் இரக்கமில்லையா
இறைவா உன் சோதனைக்கோர் அளவுமில்லையா (இரு)

அழுதையிலே குளித்துவந்தேன் அறியவில்லையா
அருகே ஒரு கல்லெடுத்தே வைக்கவில்லையா
கரிமலையில் ஏறிவந்தேன் கவனமில்லையா
கருடன் என்னைக் கண்டதாகச் சொல்லவில்லையா (இரு)

பம்பையிலே குளித்துவந்தேன் பார்க்கவில்லையா
பம்பா நதி போஜனம் நீ அருந்தவில்லையா
பம்பையிலே விளக்கெடுத்தேன் காணவில்லையா
பகவானே உனக்குக்கூட சாக்ஷி தேவையா

பதினெட்டு படிகளேறி வரவுமில்லையா—நான்
படித்தேங்காய் உடைத்த சத்தம் கேட்கவில்லையா
கொடி மரத்தைச் சுற்றி வந்தேன் காணவில்லையா—அங்கே
கூடிநின்ற ஜனங்களைப் போய்க் கேட்டுப் பாரையா......

நெய்யபிஷேகம் செய்தேன் நினைவுமில்லையா—நான்
மெய்யுருகிப் பாடியதும் கேட்கவில்லையா
ஐயாஉன் சரணமென்றே கதறவில்லையா—நீ
விச்வமெல்லாம் காத்தருளும் ஜோதியில்லையா

25. ஐயப்பா சரணம் மெய்யப்பா சரணம்
அனுதினம் மலரடி சரணமய்யா
சரணமய்யா பிரபு சரணமய்யா (அய்யப்பா)

குறைகேளாயோ குறை தீராயோ
நான்மறை போற்றும் நாதஸ்வரூபா
சரணமய்யா பிரபு சரணமய்யா (அய்யப்பா)

மறையே புகழும் மால் அயன் அரனும்
மகிழ்தரும் செல்வா! மணிகண்ட தேவா!
சர்வேசா! ஹே..... சபரீசா....
சகலமும் நீயே அருள் ஜகதீசா (அய்யப்பா)

ஜன்ம பாப வினை தீரவே பாரினில்
இருமுடி சுமந்தே ஓடி வந்தோம்
ஐந்துமலை தனில் அமர்ந்திடும் தெய்வமே
அருட்பெருஞ் ஜோதியே நீ வருவாயே (அய்யப்பா)

26. மலைவாழும் பெருமானே மிகவந்தனம்–உன்னைச்
சரணமென்றடைந்தோர்க்கு அருளாசிதரும் சபரி (மலை)

வடநாடு தென்னாடு என்ற மாறுபாடு இன்றி
மறவாமல் உனைத்தேடி வருவோர்க்கருள் சபரி (மலை)

ஆரியநாட்டு மக்கள் ஆரியநாதன் என்பார்
அறிஞர்கள் உனைப்போற்றி ஹரிஹரசு தனென்பார்
சாத்திரம் ஓதுவோர்கள் தர்மசாஸ்தா என்பார்
மாநிலத்தோரெல்லாம் மணிகண்டா என்பார் (மலை)

தீராத வினை தீர்க்கும் சபரிமலைவாசா
திருவடி சரணடைந்தேன் சரணம், பொன்னையப்பா
மூவாறு படியேறி வருவோமே ஐயப்பா
மாறாமல் உனைப்பணிய வரம் தருவாயப்பா (மலை)

27. ஸ்வாமி சரணம் என்றால் மன
சாந்தி தோன் றுதய்யா
ஸ்வாமி நீரே யல்லால்–ஓர்
கதியுமில்லையய்யா
இருமுடி சுமந்தோம் பெருவழி நடந்தோம்
ஸ்வாமி சரணமய்யப்பா
இருவினை தீர்ப்பாய் ஹரிஹர சுதனே
சரணம் சரணமய்யப்பா
சரணங்கள் சொல்வோம் மரணத்தை வெல்வோம்
ஸ்வாமி சரணமய்யப்பா
சபரிகிரீசா ஜய குரு நாதா
சரணம் சரணமய்யப்பா (ஸ்வாமி)

உருவினில் இல்லை பேதம்–இங்கு
யாவும் இறைவன் ரூபம்
சரணம் சொல்வதே வேதம்–நம்மை
சேர்க்கும் ஐயன் பாதம்
கரிமலை ஏற்றம் கடினம் கடினம்
ஸ்வாமி சரணமய்யப்பா
கரிமலை இறக்கம் கடினம் கடினம்

சரணம் சரணமய்யப்பா
தேகபலம்தா பாத பலம்தா
ஸ்வாமி சரணமய்யப்பா
ஆத்மபலம் தா மனோபலம்தா
சரணம் சரணமய்யப்பா (ஸ்வாமி)

28. யாரறிவார் ஐயப்பா உன் மகிமையை—அகில
புவனபதே! அறியாப் பரஞ்சுடரே (யார்)

நாடுவிட்டு உன்னைக்காண காடுவந்துள்ளோம் ஐயா
கருணை புரியுமையா சரணமய்யப்பா தேவா (யார்)

ஏறாதமலையேறி எட்டாப் படிகள் தாண்டி
பம்பாநதி கடந்து வந்தேன் சரணமய்யா (யார்)

பூதாதி ஸேவித பூஸுர வந்தித
புவனபரிபாலக சரணமய்யப்பா தேவா (யார்)

பத்தோடு எட்டுக் கோயில் வாழும் கேரள தர்ம
சாஸ்தா சரணம் நீயே பாதம் பணிந்தேன் ஐயா (யார்)

ஆர்த்தி தீர்த்தருள் செய்வாய் கீர்த்தி சபரி மூர்த்தே
காத்தருள் புரிவாயென் காருண்யமூர்த்தே தேவா (யார்)

அறிந்து மறியாமலும் தெரிந்தும் தெரியாமலும்
புரியும் பிழைகள்யாவும் பொறுத்தருள் பொன்னைய்யப்பா (யார்)

29. ஏதுனக்கு எந்தன் மேல் கருணையில்லையா
என்றும் உந்தன் நாமத்தை வாழ்த்திப்பாடினேன் (ஏது)

அகிலமெல்லாம் புகழும் நாமம் ஐயப்பன் நாமம்
ஐயப்பனின் நாமத்தை நாம் வாழ்த்திப் பாடுவோம்
அன்பருக்கு துன்ப மாற்றும் உத்தமத் தெய்வம்—அவர்
அன்பருக்கு வரமளிக்கும் என்குல தெய்வம் (ஏது)

நெற்றி வேர்வை சிந்தினோமே முத்து முத்தாக
இருமுடியைத் தாங்கி நாங்கள் கட்டு கட்டாக
சந்நதியில் வந்திடுவோம் நாங்கள் ஒன்றாக
நெய்ய பிஷேகம் செய்வதற்கு ஆனந்தமாக (ஏது)

(மலை)ஏறி வரும் வேளையிலே எட்டி நில்லாதே—உன்னைத்
தேடி வரும் வேளையிலே ஒளிந்து கொள்ளாதே
கார்த்திகையில் மாலையிட்டேன் உந்தன் முன்னாலே
உன்னை கண்டதுமே எந்தன் உள்ளம் கொள்ளை கொண்டாயே (ஏது)

30. கலயே சிவதனயம்—ஸ்ரீ சபரீசம்
ஸகலலோக வந்திதம்—சாஸ்தாரம் ஸந்ததம் (கலயே)

பஞ்சகிரி நிவாஸம்—பரமக்ருபாசவாரிதிம்
ரஞ்சனி ராகரஸ ரஞ்சிதவாக்விலாசம் (கலயே)

பந்தள ராஜதனயம்—பரதைவதம்
அந்தவிஹீன பரிபாவனரூபம் (கலயே)

தந்திகஸோதரம்—கண்டமணி பூஷணம்
ஸுந்தரரூபம் மணிதாஸ பக்த பூஜிதம் (கலயே)

31. உன்னிடம் நெருங்குகிறேன்
ஐயனே அருள் புரிவாய்
எந்தனுள்ளம் கவர்ந்தவனே
காந்தமலை நாயகனே (உன்னிடம்)

மண்டல காலம் தன்னில்
மாலையுடன் விரதமிருந்தேன்
ஆண்டவனே உந்தன் நாமம்
அந்திப் பகல் பாடி வந்தேன்
பள்ளிக்கட்டுச் சுமடேந்தி
காடுமலை கடந்து வந்தேன்
மாதவன் மைந்தா உன்னைக்
காணவே துடிதுடித்தேன் (உன்னிடம்)

எருமேலி பேட்டையாடி
கரிமலை கடந்து வந்தேன்
பம்பை நதி நீராடி—என்
பாவங்களைப் போக்கி வந்தேன்
சபரிமலை உச்சியிலே
என்ன தான் அதிசயமோ
மகரத்தின் ஜோதி உன்னைக்
காணக் கண் கோடி வேண்டும் (உன்னிடம்)

32. பழனியிலே முருகனுக்குக் கொண்டாட்டம்
சபரியிலே ஐயனுக்குக் கொண்டாட்டம்
பழனியிலே முருகனுக்கு அரோஹரா
சபரியிலே ஐயனுக்கு சரணமய்யப்பா (பழனி)

பழனியிலே முருகனுக்கு காவடி ஆட்டம்
எருமேலியில் ஐயனுக்கு பேட்டை துள்ளாட்டம்
பால் மணக்கும் முருகனுக்கு பழனிமலையிலே
நெய் மணக்கும் ஐயனுக்கு சபரிமலையிலே (பழனி)

ஆண்டிக் கோலம் கொண்டவனாம் பழனிமலையிலே
தவக் கோலம் கொண்டவனாம் சபரிமலையிலே
மயில் வாகனம் கொண்டவனாம் பழனிமலையிலே—வன்
புலிவாகனம் கொண்டவனாம் சபரிமலையிலே (பழனி)

படிகள்பல ஏறிவந்தோம் பழனிமலையிலே
காடுமலை கடந்து வந்தோம் சபரிமலையிலே
சூரனை ஸம்ஹாரம் செய்தான் சரவண தேவன்
மகிஷியை ஸம்ஹாரம் செய்தான் மணிகண்ட தேவன் (பழனி)

காவடியை சுமக்க வேண்டும் பழனிமலையிலே
இருமுடியைத் தாங்க வேண்டும் சபரிமலையிலே
சங்கு நாதம் ஒலிக்குதையா பழனிமலையிலே
சரண கோஷம் கேட்குதையா சபரிமலையிலே . (பழனி)

33. மாடன் வரானே கம்பத்தடி – மாடன் வரானே (மாடன்)

அந்திப் பூச்சந்தையிலே மாடனும் ஆடிக்கொண்டாடி வரான்
சுந்தரத் தோழனுக்கு மாடனும் சொல்லிக்கொண்டாடி வரான் (மாடன்)

அந்தந்தப் பேய்களெல்லாம் அங்கிருந்து ஆடிக்கொண்டாடி வர
தெந்தினத்தினாவென்று மாடனும் ஆடிக்கொண்டாடி வரான் (மாடன்)

மஞ்சளைப் பூசிக்கொண்டு மாடனும் மஞ்சள் நீராடையிலே
வங்காள இசக்கியுடன் மாடனும் மாடோடும் கையிலேந்தி (மாடன்)

கையில் குண்டாந்தடியாம் மாடனுக்குக் காலில் சல்லடமாம்
கண்கள் தீப்பொறிபோல மாடனுக்குக் கழுத்தில் தாவடமாம் (மாடன்)

வெண்பட்டுத்தானுடுத்து மாடனும் வேட்டைக்குப் போகையிலே
வெறிக்கல் இசக்கிவந்து மாடனைக் கும்பிட வந்தாளாம் (மாடன்)

திருநீறு பூசிக்கொண்டு மாடனும் தீச்சட்டிக் கையிலேந்தி
தெற்குதிசை நோக்கி மாடனும் சீறி அலறி வரான் (மாடன்)

கருத்த சித்தாடை இசக்கி கையில் வளையடுக்கி
காட்டெருமை மீதில் மாடனைக் காணவே வந்தாளாம் (மாடன்)

வீரபத்ரனுடன் மாடனும் வேகமாய் முன் நடக்க
மணிகண்டர் சந்நதியில் மாடனும் விந்தையாய் ஆடி வரான் (மாடன்)

34. மாடன் வருகிறானிதோ கறுப்பனென்ற (மாடன்)

அஞ்சிகப் பேய்க் கூட்டமெல்லம் ரஞ்ஜிதமாய்த் துதிக்க
கொஞ்சியே யக்ஷி எல்லாம் குரவையிட்டோடி வர
தலையில் பட்டுருமால் தழைத் தாழம்பூச் செண்டுடன்
பலதர புஷ்பங்களை பாங்குடன் அணிந்துகொண்டு (மாடன்)

நெற்றியில் சுகந்தமாய்த்திகழ் சந்தனம் பூசி
நேர்த்தியான குங்குமம் குழைத்துப் பொட்டுமிட்டு
விஸ்தாரமான நெற்றியும் வில்லைப்போல் புருவங்களும்
உற்றாரை ரக்ஷித்திட உயர்ந்த வேஷத்துடனே (மாடன்)

கல்லிழைத்த பதக்கமும் கனகசரப்பள்ளியும்
முல்லைப்பிச்சிஹாரம் பூண்டு உல்லாசப் பார்வையுடனே
ஒரு கையிலே கதையும் மற்றொரு கையில் வாளுமேந்தி
கருநிற மேனிதனில் கஸ்தூரி களபம் பூசி (மாடன்)

கனத்த மணிகள் கோர்த்த கறுத்த சல்லடம் கட்டி
ஜனங்களைக் காத்திடவே சிறந்த கருணையுடன்
கனகப்பொன் மணித்தண்டை வெண்டயம் காலில் அணிந்து
கலீரென்று அலறி முழங்கக் காலையெடுத் தாடிக்கொண்டு (மாடன்)

கொண்டையில் மலரணிந்து கோபுரத்தடி மாடனும்
கொஞ்சும் செல்லப்பிள்ளையும் குதித்துக் கூத்தாடிக் கொண்டு
பனைமுட்டு மாடன் வரான் பாதாள பூதனுடனே
புனுகு ஜவ்வாது அணிந்து பரிமள வாடையுடன் (மாடன்)

35. சாஸ்தா வரவைக் கேளாய் சபரிகிரி
சாஸ்தா வரவைக் கேளாய்

சாஸ்தா வருகிறதை தைர்யமாக பார்க்கவேண்டும்
பார்த்தபேர்கள் கேட்டபேர்கள் கூப்பிட்டால் அவர்வருவார் (சாஸ்தா)

எட்ட வதாரங்கள் உண்டு எட்டு ஸ்வரூபங்கள் உண்டு
அஷ்ட கர்மங்களும் இவர் அறியாத தொன்றுமில்லை (சாஸ்தா)

கருப்ப னென்றொரு மாடன் காரியமாக சுடலைக்கு
கருத்த மேகம் போல் வாரான் கையில் கொடுவாளும் கொண்டு (சாஸ்தா)

முன்னடி மாடன் கையில் வெட்டுக் கத்தி எட்டுசாணில்
ஹூங்காரப் பேய்களை நொறுக்கி அதட்டி வரான் (சாஸ்தா)

முன் சுடலை மாடன் வரான் மூர்க்க தெய்வம் ஆகும் இவன்
வஞ்சனை சூனியங்களை வைத்த பேரை வைக்க மாட்டான் (சாஸ்தா)

பனைகள் போல் இரண்டு கால்கள் பாறைகள் போல் இரண்டு முட்டு
தனிச் சிலம்பு சல்லடம் சலங்கை குலுங்கிடவே (சாஸ்தா)

பூதத்தான் முதலான பூதப் படைகளுடன்
வேதத்தான் முதலான வேதியர் சபை நடுவே (சாஸ்தா)

36. ஐயனிடம் கையேந்துங்கள்–அவன்
இல்லையென்று சொல்லுவதில்லை
பக்தியோடு வாழ்ந்து காட்டுங்கள்–அவன்
பொக்கிஷத்தை மூடுவதில்லை (ஐயனிடம்)

இல்லையென்று சொல்லும் மனம் இல்லாதவன்
ஈடு இணை இல்லாத கருணை உள்ளவன்
அல்லல்படும் நம்குரல் கேட்கின்றவன் – நம்
எண்ணங்களில் இதயங்களைப் பார்க்கின்றவன் (ஐயனிடம்)

ஜாதி மத பேதங்களும் இல்லாதவன்
தேடிவரும் அடியவர்க்குப் பொதுவானவன்
பாசத்தோடு பக்தர்களைப பார்க்கின்றவன் – தன்
பார்வையினால் பாவங்களை மாய்க்கின்றவன் (ஐயனிடம்)

உருகிவரும் அடியவர்க்கு உயிரானவன்
உருகாத மனங்களையும் உருக வைப்பவன்
தீராத வினைகளெல்லாம் படியளப்பவன்
துன்பப்படும் மானிடரே கலங்காதீர்கள்
ஐயப்பனின் திருவருளை நம்பி வாழுங்கள்
குறையனைத்தும் அவனிடத்தில் எடுத்துச்சொல்லுங்கள்
அவனருளைப் பெறுவதற்கு சபரி வாருங்கள்
காடுமலை கடந்து வந்தோம் சரணமய்யப்பா–உன்னைக்
கண்குளிரக் காண வந்தோம் ஸ்வாமி ஐயப்பா
ஸத்குருவே ஸ்வாமியே சரணமய்யப்பா

சரணமய்யப்பா ஸ்வாமி சரணமய்யப்பா–இங்கே
வரணுமய்யப்பா ஓடி வரணுமய்யப்பா

37. சின்னஞ்சிறு வயதில் எனக்கோர்
பந்தள பாலகனாய்

கண்களில் காக்ஷி தந்தாய் உன்னை என்
உள்ளத்தில் பூட்டி வைத்தேன்
கண்களை மூடிநின்றேன்—எந்தனுள்
கண்களைத் திறந்து விட்டாய்
வாய்மூடி நானிருந்தேன்—ஐயப்பா என்
நாவில் நடம் புரிந்தாய்
உன்னைத் தேடி வந்தேன்—நீயோ
என்னிடம் ஓடிவந்தாய்
என்னை மறந்து நின்றேன்—ஐயப்பா
என்னுள் நிறைந்து விட்டாய்
யோகியைக் காணவந்தேன்—மகர
ஜோதியாய் காக்ஷி தந்தாய்
ஜோதியைக் கண்டவுடன் என்னை உன்
காந்தமலைக்கழைத்தாய்
பூரண புஷ்களையாம் என்றிரு
தேவியர் சூழக் கண்டேன்
வாரண வாஹனனே—என்னை (பரி)
பூரணனாக்கி வைப்பாய் (சின்னஞ்)

38. கோடி மலைகளிளே கொழிக்கும் மலை எந்த மலை?
வஞ்சிமலை நாட்டினிலே உயர்ந்த மலை எந்த மலை?
தேடிவந்தார் இல்லமெல்லாம் செழிக்கும் மலை எந்த மலை?
சனகாதி முனிவரெல்லாம் பணியுமெங்கள் சபரிமலை!

சபரிமலை மாமணியே மணிகண்டா
அடியவர் குலம்காக்கும் மணிகண்டா—ஐயா (சபரி)

மணமிகு சந்தனம் நெய்யுடன் தேனதும்
ஐயா உனது சபையில் கமழ்ந்திடுமே (சபரி)

தைமாதம் முதல் நாளில் நெய்யினில் அபிஷேகம்
செய்திடும் அடியாரைக் காப்பவனே (சபரி)

சோதனை மிகுந்தாலும் நாயகனை மறவேன்
நாதநின்னடி தேடி நான் வருவேன்
அஞ்சுதல்நிலை மாறி ஆறுதல் உருவாகும்
காந்தமலை ஜோதி ஆனவனே (சபரி)

தத்வத்திருபடி பற்றித்திருவடி மறவேன் நான் மறவேன்
முத்தித்தருபொருள் சக்திப்ரிய சுதன் அறிவேன் நான் அறிவேன்
ஹரிஹரன் திருமகனே! மணிகண்டப் பரம் பொருளே!
காண்பதெலாம் உனதுமுகம் அருள்காட்டும் முகம்
காண்பதினால் பெறுவதெலாம் நின் பரமபதம்
வாழ்விலும் தாழ்விலும் சோர்விலும் சுகத்திலும்
இடர்படு நிலையிலும் கடைநிலைப்பிறப்பிலும்
ஐயா——சரணே——ஐயப்பா!

39. பஜரே குரு சரணம்—மானஸ
பவ ஸாகர தாரணம்
அத்புத விக்ரஹம் ஆனந்தரூபம்
அனாதரக்ஷகம் ஆபன்ன தாரகம்

பத்ம தளாக்ஷம் பரமார்த்த பாவம்
தர்சன மாத்ரம் தவ தாஸோஹம்
மன்மதானுஜம் மார்த்தாண்ட தேவம்
மகரமஹோத்ஸவம் மணிகண்டநாதம்
விச்வ ஸுபூஜிதம் ஸ்ரீபூத நாதம்
விக்ன விநாசனம் வித்யா தாயகம்
ஜனன மரணபய சோக விதூரம்
சபரிகிரீசம் ஸ்வாமி சரணம்.

40. ஆடவாரீ ரென்னோ டாடவாரீர்
ஆறுமுகன் சோதரனைப் பாடவாரீர் (ஆட)
பாடும் அடியார் தோழரே ஆடவாரீர்
சீறும்புலி வாஹனனைப் பாடவாரீர் (ஆட)
நெய்யும் தெங்குமே சுமந்து ஆடவாரீர்
நித்ய பிரம்மசாரி தனைக் காண வாரீர்
வேடுவனாய்க் காக்ஷி தந்தான் எருமேலியல்-நம்
வேதனைகள் தீருமம்மா அவன் நிழலில் (ஆட)

அதோ தெரியுது பதினெட்டுப் படிகள்
படிகள் மேலேறுதம்மா எத்தனையோ (இரு) முடிகள்
முடிகளெலாம் சேருமிடம் ஐயப்பன் திருவடிகள் – அவன்
அடியார்க்கு சபரிமலை அனுபவமே உரைகல்......

வேதம் வேண்டுமா தேவ கானம் வேண்டுமா
ஞானம் தவம் கலந்த மௌனம் வேண்டுமா
சபரிமலை நாயகனைத் தேடி வாரீர்-அவன்
சரணங்களை நாவில் கூவி வாரீர் (ஆட)

41. நாமே சபரிமலை செல்வோம்-அங்கே
ஐயப்ப ஸ்வாமியை தரிசனம் செய்வோம் (நாமே)

மாலையணிந்தே விர தமிருந்தே
மாதவன் பாலனைக்காண விழைந்து (நாமே)

இருமுடி சுமந்தே பெருவழி நடந்தே
கரிமலைகடந்தே ஐயனை நினைந்து (நாமே)

புண்ணிய பம்பா நதியில் நீராடி
அன்ன தானம் செய்து ஆடிப்பாடி (நாமே)

சபரிகிரீசா ஹே குருநாதா
சரணமய்யப்பா மணிகண்ட தேவா (நாமே)

42. குருபதம் தொழுது குணமுடன்நடந்தே
கூட்டமாய் வருவோம் ஐயப்பா
சாமி சரணம் ஐயப்பா எங்கள் சாமியே சரணம் ஐயப்பா
சுவாமி திந்தகத்தோம், ஐயப்ப திந்தகத்தோம் (சுவாமி திந்த)

பேட்டைகள் ஆடி, கோட்டைகள் கடந்தே
கூட்டமாய் வருவோம் ஐயப்பா
கூவி அழைப்போம் ஐயப்பா – உனைக் கூவியே அழைப்போம் ஐயப்பா

சுவாமி திந்தகத்தோம் – ஐயப்ப திந்தகத்தோம் (சுவாமி திந்த)

மலையினைக் கடந்து நடையாய் நடந்தே
கூட்டமாய் வருவோம் ஐயப்பா
குருவே சரணம் ஐயப்பா – குருஸ்வாமியே சரணம் ஐயப்பா
சுவாமி திந்தகத்தோம் – ஐயப்பா திந்தகத்தோம் (சுவாமி திந்த)

இருமுடி சுமந்து பெருவழி நடந்தே
கூட்டமாய் வருவோம் ஐயப்பா
பாத பலம்தா தேகபலம் தா பகவானே எங்கள் ஐயப்பா
சுவாமி திந்தகத்தோம் – ஐயப்பா திந்தகத்தோம் (சுவாமி திந்த)

குவியாத கரங்கள் குவியாதோ – குணக்
குன்றினைக் கண்டு மகிழாதோ
கும்பிட்ட கரங்களை காத்திட வேண்டும் குருநாதா எங்கள் ஐயப்பா
சுவாமி திந்தகத்தோம் – ஐயப்பா திந்தகத்தோம் (சுவாமி திந்த)

43. ஓம் ஓம் ஐயப்பா – ஓம் குருநாதா ஐயப்பா
ஓம் குருநாதா ஐயப்பா – ஓம் ஓம் ஐயப்பா

அரனார் பாலா ஐயப்பா – அம்பிகை பாலா ஐயப்பா
ஆபத் பாந்தவா ஐயப்பா –ஆதி பராபரா ஐயப்பா (ஓம் ஓம்)

இருமுடிப் பிரியா ஐயப்பா – இரக்கம் மிகுந்தவா ஐயப்பா
ஈசன் மகனே ஐயப்பா – ஈஸ்வரி மைந்தா ஐயப்பா (ஓம் ஓம்)

உமையாள் பாலா ஐயப்பா – உறுதுணை நீயே ஐயப்பா
ஊக்கம் தருபவா ஐயப்பா – ஊழ்வினை அறுப்பவா ஐயப்பா (ஓம் ஓம்)

எங்கும் நிறைந்தவா ஐயப்பா – எங்கள் நாயகா ஐயப்பா
பம்பையின் பாலா ஐயப்பா – பந்தள வேந்தே ஐயப்பா (ஓம் ஓம்)

சபரி கிரீசா ஐயப்பா – சாந்த சொரூபா ஐயப்பா
சபரி கிரீசா ஐயப்பா – சாசுவத ரூபா ஐயப்பா (ஓம் ஓம்)

44. ஹரிஹர சுதனே திருவருள் தருவாய் ஆனந்த ஜோதியனே
எருமேலி பந்தளம் கரிமலை பம்பையில் ஆதியாய் வந்தவனே
இருமுடி ஏந்தி திருவடிகாண இன்னருள் தந்தவனே
ஜெய ஜெய தேவா சபரிகிரீசா ஜெயமே வாழ்வில் தரும்ஈசா (ஹரி)

அச்சங்கோவிலில் அரசனாய்வந்து அன்பினைத் தந்திடுவாய்
ஆரியங்காவில் ஐயாவென்றே அருளைப் பொழிந்திடுவாய்
குளத்துப்புழையில் குழந்தையை போலே கொஞ்சித் தவழ்ந்திடுவாய்
ஜெய ஜெய தேவா சபரிகிரீசா ஜெயமே வாழ்வில் தரும்ஈசா (ஹரி)

கலகல கலவெனக் கண்ணீர் பெருக் கனிந்தே நீ வருவாய்
சலசல சலவெனச் சரணம் ஒலித்திட சாஸ்தா நீ வருவாய்
தளதள தளவெனத் தர்மம் தழைத்திடத் தலைவா நீ வருவாய்
ஜெய ஜெய தேவா சபரிகிரீசா ஜெயமே வாழ்வில் தரும்ஈசா (ஹரி)

பஞ்சமி திதியில் மார்கழி சனியில் உத்திரத்தி லுதித்தவனே
வஞ்சம் அழித்து வெஞ்சினம் ஒழித்து வாழ்ந்திடச் செய்தவனே

பிஞ்சு மனங்கள் தஞ்சம் அடைந்தோம் சரணம் புண்ணியனே
ஜெய ஜெய தேவா சபரிகிரீசா ஜெயமே வாழ்வில் தரும்ஈசா (ஹரி)

ஜெய ஜெய பாலா வன்புலிவீரா ஜெய ஜெய சபரீசா
ஜெய ஜெய ராஜா பந்தளமன்னா ஜெய ஜெய சபரீசா
ஜெய ஜெய நாதா அருள்மணிகண்டா ஜெய ஜெய சபரீசா
ஜெய ஜெய தேவா சபரிகிரீசா ஜெயமே வாழ்வில் தரும்ஈசா (ஹரி)

45. ஸ்ரீதர்ம சாஸ்தா பாஹிமாம் சபரி கிரீஸா பாஹிமாம்
மணிகண்டனே ஸ்ரீ பாஹிமாம் கலிநாசனே ஸ்ரீ ஐயப்பா

மோஹினிசுதனே மோஹன – ரூபா
மோக மகற்றுக எங்களே – நின்
மண்டல காலமிது வந்தல்லோ
மணிமாலையும் கழுத்திலே வீழ்ந்தல்லோ
என் மனஸாகிலும் மயங்கி போயல்லோ
எம்மைக் காத்து ரக்ஷிக்கணும் ஐயப்பா (ஸ்ரீ தர்ம)

வன்புலி முதுகில் கயறிய பகவான்
வன்மலைக் கேற்றுக எங்களே உன்
மகர விளக்கொன்று காணவே
மாமலையாக நடந்து வந்தல்லோ
மாமணி பீடத்தில் வாழும் தெய்வமே
எம்மைக் காத்து ரக்ஷிக்கணும் ஐயப்பா (ஸ்ரீ தர்ம)

படிபதினெட்டிலும் கயரிய ஷேமம்
சிவசுதன் சுயரூபம் காணுவான்
நின்சுயரூப தரிசனம் காணவே
மாமலையாகி நடந்து வந்தல்லோ
மாமணி பீடத்தில் வாழும் தெய்வமே
எம்மைக் காத்து ரக்ஷிக்கணும் ஐயப்பா (ஸ்ரீ தர்ம)

46. மலையாம் மலையழகாம்
மலையைச் சுற்றித் தோப்பழகாம்
தோப்புக்குள்ளே நீயிருக்க ஐயப்பா
உன்னைத்தேடி ஓடி ஆடிவாரோம் ஐயப்பா (மலையாம்)

பாக்கு விளையும்மலை பக்தர்களும் கூடும்மலை
ஊக்க மளிக்கும்மலை உத்திராட்சம் காய்க்கும்மலை
தேக்கு விளையும்மலை தேனாறு பாயும்மலை
காக்கும் காந்தமலை ஐயப்பா – எங்களைக் (காக்) (மலையாம்)

உல கறிந்தமலை ஊமைகளும் பேசும்மலை
பம்பைநதி பிறந்தமலை பாரளந்த உந்தன்மலை
சந்தனம் விளையும்மலை சத்தியமும் நிலைக்கும்மலை
பாவமெல்லாம் தீரும்மலை ஐயப்பா – எங்க (பாவ) (மலையாம்)

தேனருவி பாயும்மலை தென்றல் வீசும்மலை
ஜோதி தெரியும்மலை ஜாதி நீக்கும்மலை
ஐந்துமலைக் கதிபதியே ஐயப்பா – நாங்க

மகரஜோதி காணவாரோம் ஐயப்பா (மலையாம்)

47. ஓம் நமோ ஐயப்பதேவ ஓம் நமோ ஐயப்பதேவ
ஓம் நமோ ஐயப்பதேவ ஓம் நமா நமோ (ஓம் நமோ)

சகல லோக சாட்சியாகி சகல வேத சாரமாகி
சகல லோக சித்தியாகி நின்ற முர்த்தியே
சகல தத்துவங்களாகி பரமஞான வித்தையாகி
சகல சப்த வடிவமாகி வந்த மூர்த்தியே (ஓம் நமோ)

அகுண சகுண நிலையிலாகி அசரசரவி – பாகமாகி
அதிலுமாகி இதிலுமாகி அமையும் மூர்த்தியே
அணுவுள்ளே அகண்டமாட அணுவினால் அனைத்து மாட
அமரநாத வடிவில்ஆடும் அருண மூர்த்தியே (ஓம் நமோ)

எனது நான் எனசெருக்கில் மமதையுற்று அலைந்தஎன்னை
இனியனாக்கி இணையவைத்த இன்ப மூர்த்தியே
எனதுள்ளத்தில் உனதுநாமம் எழுதிவைத்து நடனமாடி
ஏகமாய் எனைக்கலந்த யோக மூர்த்தியே (ஓம் நமோ)

படியெல்லாம் கடந்தசுத்த ப்ரம்ம வஸ்து – மாய்இருந்தும்
பஜனையால் மகிழ்ந்து தோன்றும் திவ்ய மூர்த்தியே
ஒரு கணத்துள் எனதுள்ளத்தை உருகவைத்த உனதுநாமம்
ஓம் நமோ ஐயப்பதேவ ஓம் நமோ நமோ (ஓம் நமோ)

அளவில்லாமல் எழும்விசார அலையடித்து இருள் அகற்றி
அமைதி பெற்று அடங்கவைத்த அன்பு மூர்த்தியே
ஒரு கணத்துள் எனதுள்ளத்தை உருகவைத்த உனது நாமம்
ஓம் நமோ ஐயப்பதேவ ஓம் நமோ நமோ (ஓம் நமோ)

48. அப்படி இப்படி ஆடிப்பாடி ஆனந்தம் கொண்டு, (ஆனந்தம்)
எப்படியும் சபரிமலை சேர்ந்திடுவோமே
போடு–அப்படி இப்படி, போடு–அப்படி இப்படி (அப்படி)

நாலுபத்து ஒருநாளாய் விரதமிருந்து (விரத) – அந்த
நாராயணன் புத்திரனைக் காணுவோமென்று (அப்படி)

இன்பமுடன் கட்டெடுத்து எருமேலிசேர்ந்து (எரி)
பண்புடனே வேட்டையாடிக் கோட்டைகடந்து (அப்படி)

பேரூர்த்தோடு அரியக்குடி காளைகட்டியாம் (காளை)
சீரான இத்தாவளங்கள் நேராகக் கடந்து (அப்படி)

அழுதைநதி நீராடிக் கல்லுமெடுத்து (கல்லு) – அதை
பழுதின்றி கல்லிடுங்குன்றில் பக்தியாய்ச் சேர்த்து (அப்படி)

இஞ்சிப்பாறை உடும்பாறை முக்குழியுடன் (முக்கு)
மரவெட்டி மடுக்கைப்புதுச் சேரிதாவளம் (அப்படி)

கரிவலந் தோடுதன்னைக் கடந்து நடந்து (கடந்து)
கரிமலையின் பகவதிக்கு கற்பூரம் செலுத்தி (அப்படி)

கரிமலையின் ஏற்ற இறக்கம் யாவும் கடந்து (யாவும்)
காருண்ய மூர்த்திஉனைக் காணுவோமென்று (அப்படி)

பம்பைநதி நீரில்மூழ்கி பந்தியும் செய்து (பந்தி) – உனை
பக்தியோடும் பாடியாடிப் பரவசம் கொண்டு (அப்படி)

நீலிமலை ஏற்றமதை நெஞ்சிலே கொண்டு (நெஞ்)
நீங்கா உந்தன் நாமமதைத் துணையெனக்கொண்டு (அப்படி)

அப்பாச்சிமேட்டுத் தானதருமம் தப்பாது நடத்தி (தப்பா)
அப்பாலுள்ள சபரிபீடம் பூஜை புரிந்து (அப்படி)

அசுவத்தம் என்றசரம் குற்றி ஆலினில் (குற்றி)
அம்புகதை சரத்தைவிட்டுக் கும்பிட்டு வணங்கி (அப்படி)

பதினெட்டு படிகள் கண்டுப் பரவசம் கொண்டு (பரவ)
பக்தியோடு கண்ணில் ஒற்றிப் படிகள்கடந்து (அப்படி)

சன்னதியில் வந்துஉன்னை தரிசனம் செய்வோம் (தரி)
சாமிசரணம் சபரிகிரி சாஸ்தாவே சரணம் (அப்படி)

49. ஐயப்பா உந்தன் அருள்நாடி – தினம்
கும்பிடும் கைகள் பலகோடி
ஆலயம் வருவார் உன்னைத்தேடி – ஐயப்பா
உந்தன் புகழ் பாடி (ஐயப்பா)

பந்தள மைந்தன் கோவிலப்பா – அங்கு
பாயும் புலிகள் காவலப்பா
பக்திக்கு உன்னிடம் ஏவலப்பா – உன்னை
பக்தர்கள் பார்த்திட ஆவலப்பா (ஐயப்பா)

காலம் என்னும் கைக்குழந்தை – உன்
மடியில் கிடந்து தவழுதப்பா
கருணை என்னும் பாலருந்தி – இந்த
உயிர்கள் எல்லாம் வளருதப்பா (ஐயப்பா)

அப்பா அப்பா என்றாலே
அருள்தர வருவாய் முன்னாலே
வாழ்த்தும் நெஞ்சம் கோடிபெறும் – நம்மை
வாழ்வும் வளமும் தேடிவரும் (ஐயப்பா)

காந்தமலை வாழும் கர்த்தாவே – உயர்
காத்திடும் தர்ம சாஸ்தாவே
சாந்தம் குடிகொண்ட நாயகனே – உயர்
சபரியில் மேவும் காவும் காவலனே (ஐயப்பா)

மோகினியாள் பெற்ற மோகனனே – இன்ப
முக்தி யளித்திடும் நாயகனே
தாமதம் இன்றி நீவரவேண்டும் – உந்தன்
தரிசனம் நன்றாய் தரவேண்டும் (ஐயப்பா)

50. கண்திறந்து பாரப்பா கவலைகளை தீரப்பா
காவினிலே கிடைத்தவனே கண்திறந்து பாரப்பா (கண்)

கஜமுக சோதரனே கண்திறந்து பாரப்பா
கந்தனுக் கிளையவனே கண்திறந்து பாரப்பா (கண்)
கலியுக வரதனே நீ கண்திறந்து பாரப்பா
கனதவ விரதனே நீ கண்திறந்து பாரப்பா (கண்)

காந்தமலை நாதனே நீ கண்திறந்து பாரப்பா
காருண்ய மூர்த்தியே நீ கண்திறந்து பாரப்பா (கண்)

வனத்தில் இருப்பவனே கண்திறந்து பாரப்பா
வன்புலி வாகனனே கண்திறந்து பாரப்பா (கண்)

தனித்து இருப்பவனே கண்திறந்து பாரப்பா
தவக்கோலம் பூண்டவனே கண்திறந்து பாரப்பா (கண்)

சங்கட நாசனனே கண்திறந்து பாரப்பா
சண்முகன் சோதரனே கண்திறந்து பாரப்பா (கண்)

சபரிகிரி ஈசனே நீ கண்திறந்து பாரப்பா
சஞ்சலம் தீர்ப்பவனே கண்திறந்து பாரப்பா (கண்)

அன்புள்ள அப்பனே நீ கண்திறந்து பாரப்பா
அழகான தெய்வமே நீ கண்திறந்து பாரப்பா (கண்)

அம்பிகையின் மகனே நீ கண்திறந்து பாரப்பா
ஆதரிக்கும் தெய்வமே நீ கண்திறந்து பாரப்பா (கண்)

51. கண்ணனும் பெண்ணாக மாறினார் – மணி
கண்டனும் மண்ணிலே தோன்றினார்
எண்ணங்கள் இருள்கொண்ட யாவர்க்கும் – தூய
இன்பஒளி தன்னைக் காட்டுவார் (கண்ணனும்)

ஐயப்பன் திருநாமம் பாடவே – இங்கு
எல்லோரும் ஒன்றாகக் கூடுவோம்
மெஞ்ஞானன் திருவடி காணவே – இன்று
மாமலை மீதினில் ஏறுவோம் (கண்ணனும்)

நீரிலும் நிலத்திலும் ஐயப்பா – உந்தன்
இன்முகம் கண்டேனே மெய்யப்பா
பாரோரின் தெய்வமே ஐயப்பா – இந்த
பக்தருக்கு அருள்வாய் மெய்யப்பா (கண்ணனும்)

ஈதலின் தன்மையே ஐயப்பா – நீ
இரக்கத்தின் வடிவமே மெய்யப்பா
வேதம் அனைத்துமே ஐயப்பா – எங்கள்
வினைதீர்க்க வேண்டுமே மெய்யப்பா (கண்ணனும்)

சடைவள்ளர் குமரனே ஐயப்பா – ஞான
சபரிமலை வாழும் மெய்யப்பா
கொடைவள்ளல் தெய்வமே ஐயப்பா – எங்கள்
குறைதீர்க்க வேண்டுமே ஐயப்பா (கண்ணனும்)

52. அங்கே நல்லா தெரியுதப்பா – ஆனந்த ஜோதியப்பா
பொன்னம்பல மேடப்பா – புனிதமான ஜோதியப்பா (அங்கே)

பக்தர்கள் கூட்டமப்பா – சபரிமலை சாரலிலப்பா
கண்களில் தெரியுதப்பா – காந்தமலை ஜோதியப்பா (அங்கே)

நீதிதேவன் மைந்தனப்பா – நீலிமலை மேடப்பா
நீதிதனை காப்பதப்பா – காந்தமலை ஜோதியப்ப (அங்கே)

மலைஎங்கும் தெரியுதப்பா – மகரஜோதி விளக்கப்பா
மணிகண்டன் ஜோதியப்பா – மனம்மகிழ செய்யுதப்பா (அங்கே)

53. என்ன மணக்குது ? எங்கே மணக்குது ?
என்ன–என்ன–மணக்குது? எங்கே எங்கே மணக்குது? (என்ன)

அல்லிமலர் வாசமது எங்கே மணக்குது?
அரிஹர புத்திரனின் மேலே மணக்குது
மல்லிகைப்பூ மரிக்கொழுந்து எங்கே மணக்குது?
மணிகண்ட சாமியவன் மேலே மணக்குது (என்ன)

ரோஜாமலர் வாசமது எங்கே மணக்குது?
ராஜாதி ராஜனவன் மேலே மணக்குது
காட்டுமல்லி நாட்டுமல்லி எங்கே மணக்குது?
கருணாகர மூர்த்தியவன் மேலே மணக்குது (என்ன)

கற்பூரவாசமது எங்கே மணக்குது?
காந்தமலை வாசனவன் மேலே மணக்குது
சந்தன வாசமது எங்கே மணக்குது?
சாமியாம் ஐயப்பன் மேலே மணக்குது (என்ன)

குங்குமப்பூ ஜவ்வாது எங்கே மணக்குது?
குளத்துப்புழைப் பாலகனின் மேலே மணக்குது
மஞ்சள்பொடி மகிமையது எங்கே தெரியுது?
மஞ்சமாதா தேவியவள் மேலே தெரியுது (என்ன)

மகரமகா ஜோதியது எங்கே தெரியது?
காந்தமலை உச்சியின் மேலே தெரியுது
விபூதி அபிஷேகம் எங்கே நடக்குது?
வீரமணி கண்டசுவாமி மேலே நடக்குது (என்ன)

நெய் யாபிஷேகமது எங்கே நடக்குது?
சாஸ்தாவாம் ஐயப்பன் மேலே நடக்குது
சரணகோஷ சப்தமது எங்கே ஒலிக்குது?
சாமியாம் ஐயப்பன் மலையில் ஒலிக்குத (என்ன)

54. திவ்யமலை வாழும்ஐயன் – சபரிமலை வாழும்ஐயன் – சந்நதி செல்வோம்
ஐயன்பாத மலர்பணிந்து அர்ச்சனை செய்வோம்
கையில்தாங்கி இருமுடியும் மஸ்தகம்ஏந்தி
சரணம்சரணம் பொன்ஐயப்பா சாமிசரணம் பொன் ஐயப்பா (திவ்ய)

புண்ணியமேரு மேவிவந்து தீர்த்தமும் ஆடி
அன்னதானம் செய்து நாம ஸங்கீர்த்தனம் பாடி
முன்நடந்து வழியில் சுவாமி அன்பரைக்கூட்டி
சரணம்சரணம் பொன்ஐயப்பா சாமிசரணம் பொன் ஐயப்பா (திவ்ய)

கோட்டையடி காளைகட்டி ஆஸ்ரமும்காடும்
வாட்டம் தீர்த்தம் அழுதையாறும் கரிமலைதோடும்
மேட்டுப்புரம் கரிமலையும் நாடிவணங்கி
சரணம்சரணம் பொன்ஐயப்பா சாமிசரணம் பொன் ஐயப்பா (திவ்ய)

ஸ்வாமி அனுகம்பையினால் கரிமலைதாண்டி
க்ஷேமமாக பம்பையாற்றில் ஸ்நாமும் செய்து
ஸ்வாமிபூஜை செய்ததுடன் பிரசாதம் அருந்தி
சரணம்சரணம் பொன்ஐயப்பா சாமிசரணம் பொன் ஐயப்பா (திவ்ய)

பக்தியுடன் ராமபாதம் கண்டுவணங்கி
சிந்தையான சபரிபீடம் பூஜைபுரிந்து
சித்தசுத்தியோடு நீல சைலமடைந்து
சரணம்சரணம் பொன்ஐயப்பா சாமிசரணம் பொன் ஐயப்பா (திவ்ய)

நல்லபதி னெட்டுபடி கண்டுவணங்கி
நாளிகேரம் தானுடைத்து நல்கதிவேண்டி
துள்ளிசாடி படிகடந்து • சந்துஷ்டியடைந்து
சரணம்சரணம் பொன்ஐயப்பா சாமிசரணம் பொன் ஐயப்பா (திவ்ய)

ஐயப்பனே உன்பெருமை யாரறிவார்
திவ்யமூர்த்தி கண்டுநானும் தேக மறந்தேன்
நீயுமாடி நானும்உந்தன் நேசனுமானேன்
சரணம்சரணம் பொன்ஐயப்பா சாமிசரணம் பொன் ஐயப்பா (திவ்ய)

55. சன்னதியில் கட்டுங்கட்டி தன்னா னன்ன னான—நாங்க
சபரிமலை பயணமுங்க தில்லா லே லேல்லோ (சன்னதி)

கார்த்திகையில் மாலைபோட்டு தன்னா னன்ன னான – நாங்க
கடும்பயணம் போறோமுங்க தில்லா லே லேல்லோ (சன்னதி)

மார்கழியில் கட்டும்தாங்கி தன்னா னன்ன னான – நாங்க
மணிகண்டனைப் பார்க்கப்போறோம் தில்லா லே லேல்லோ (சன்னதி)

எரிமேலியில் பேட்டை துள்ளி தன்னா னன்ன னான – நாங்க
ஏறிடுவோம் சபரிமலை தில்லா லே லேல்லோ (சன்னதி)

அழுதையில ஸ்நானம் செய்து தன்னா னன்ன னான – நாங்க
அன்னதானம் இட்டிடுவோம் தில்லா லே லேல்லோ (சன்னதி)

பம்பையில் ஸ்நானம் செய்து தன்னா னன்ன னான – நாங்க
பக்திகள் கொண்டாடிடுவோம் தில்லா லே லேல்லோ (சன்னதி)

ஐந்து மலைகடந்து தன்னா னன்ன னான – நாங்க
ஐயப்பனைக் காணப்போறோம் தில்லா லே லேல்லோ (சன்னதி)

மலையாம் மலைகடந்து தன்னா னன்ன னான – நாங்க
மகரஜோதி காணப்போறோம் தில்லா லே லேல்லோ (சன்னதி)

பதினெட்டாம் படியேறி தன்னா னன்ன னான – நாங்க
பாவங்களைத் தீர்க்கப்போறோம் தில்லா லே லேல்லோ (சன்னதி)

56. சரணமய்யப்பா ஸ்வாமி சரணமய்யப்பா
சரணமய்யப்பா ஸ்வாமி சரணமய்யப்பா (சரணம்)

ஹரிஹரன் மைந்தா ஸ்வாமி அருள்மிகுஞ் செந்தா
மரைமலர்ப் பொன்தாள் ஸ்வாமி வணங்கினோம் உந்தாள் (சரணம்)

இருமுடி சுமந்தே ஸ்வாமி பெருமலை கடந்தே
அருகினில் வந்தோம் ஸ்வாமி அருள்புரி மகிழ்ந்தே (சரணம்)

அலைகடல் உருவே ஸ்வாமி ஆளும் சற்குருவே
கலையுணர் திருவே ஸ்வாமி கற்பகத் தருவே (சரணம்)

கலியுக வரதா ஸ்வாமி கனதவ விரதா
விலகிடாது சதா ஸ்வாமி – விரும்பிடும் வரம்தா (சரணம்)

சபரி மாமலையா சரண சப்தம் கேட்கலையா
தபசில் சிந்தனையா ஸ்வாமி இத்தருணம் வந்தெனையாள் (சரணம்)

ஸ்ரீஜெகன் மோகா ஸ்வாமி சியாமள தேகா
காசில் விவேகா ஸ்வாமி கருணைப் பிரவாகா (சரணம்)

மகிஷி சம்ஹாரா ஸ்வாமி மதன சிங்காரா
தகும் சிலைவீரா ஸ்வாமி தரும விஸ்தாரா (சரணம்)

அருமை மக்களையே காண அன்புடன் வருக
புரியும் தற்பரனே உந்தன் பொன்னடி சரணம் (சரணம்)

கருணை செய்யப்பா வானோர் கருதும் மெய்யப்பா
சரணமய்யப்பா ஸ்வாமி சரணமய்யப்பா (சரணம்)

57. தள்ளாடி தள்ளாடி நடைநடைந்து – நாங்க
சபரி மலை நோக்கி வந்தோமையா –மெட்டு 1

வந்தோமையா சபரி வந்தோமையா
கட்டேந்தி சபரிக்கு வந்தோமையா – மெட்டு 2

செல்வோமய்யா சபரி செல்வோமய்யா –மெட்டு 3
கட்டேந்தி சபரிக்கு செல்வோமய்யா (செல்வோ)

கார்த்திகை நல்ல நாளில் மாலையிட்டு
மார்கழி நல்ல நாளில் கட்டும் கட்டி
சந்தனபொட்டு குங்குமபொட்டு வச்சிக்கிட்டு
சாமிசரண நாமமந்திரம் பாடிகிட்டு
ஐயப்பா திந்தகத்தோம் சாமியே திந்தகத்தோம் (ஐயப்பா) என்று
ஜிகுதாளம் போட்டுக்கிட்டு பேட்டைதுள்ளி ஆடிக்கிட்டு
கட்டேந்தி உன்னைக்காண செல்வோமய்யா (செல்வோ)

காட்டானைக் கூட்டத்தை கண்டுகிட்டு
கடுவாய் புலிகளை பார்த்துகிட்டு
சாமிசரணம் நாமமந்திரம் பாடிக்கிட்டு
ஐயப்பா திந்தகத்தோம் சாமியே திந்தகத்தோம் (ஐயப்பா) என்று
ஜிகுதாளம் போட்டுகிட்டு பேட்டைதுள்ளி ஆடிக்கிட்டு

கட்டேந்தி உன்னைக்காண செல்வோமய்யா (செல்வோ)

சுவாமியின் சன்னதியை கண்டுகிட்டு
சந்தோஷ மாகவே பாடிக்கிட்டு
ஐயப்பா திந்தகத்தோம் சாமியே திந்தகத்தோம் (ஐயப்பா) என்று
ஜிகுதாளம் போட்டுகிட்டு பேட்டைதுள்ளி ஆடிக்கிட்டு
கட்டேந்தி உன்னைக்காண செல்வோமய்யா (செல்வோ)

58. என்ஜீவன் உள்ளவரை யான் செல்வேன் சபரிமலை
எனக்கு அருள் புரிந்திடப்பா என்சாமி சரணமப்பா (என் ஜீவன்)

கந்தனுக்கு முன் பிறந்த கன்னிமூல கணபதியே
கருணையுடன் என்னுடைய வேண்டுதலுக் கருள்புரிவாய்
உன்நாமம் நான்மறவேன் உமாபதி புத்திரனே
என் நெஞ்சில் குடியிருக்கும் என்சுவாமி ஐயப்பா (என் ஜீவன்)

அச்சங்கோவில் ஆண்டவனே ஹரிஹர புத்திரனே
பாசமுடன் வேண்டுகிறேன் பாவங்களை தீர்ப்பவனே
ஆரியங்கா ஆண்டவனே ஆறுமுகன் சோதரனே
பார்புகழும் உன்புகழை பாடஅருள் செய்திடுவாய் (என் ஜீவன்)

மகிஷிவதம் செய்தவனே மண்டலத்தை காப்பவனே
மங்களத்தைக் கொடுப்பவனே மணிகண்டப் பெருமானே
பம்பையில் பிறந்தவனே பந்தளத்தில் வளர்ந்தவனே
பார்புகழ வைப்பவனே பக்தர்குறை தீர்ப்பவனே (என் ஜீவன்)

இருமுடியை தாங்கிவரும் அடியவரைக் காப்பவனே
பெருவழியில் நடந்தவர்க்கு பேரருள் புரிபவனே
சரணகோஷம் கேட்பவனே சாந்திபெறச் செய்பவனே
சங்கரனார் புத்திரனே சபரிமலை வாசகனே (என் ஜீவன்)

59. சுவாமி பொன்ஐயப்பா சரணம் பொன்ஐயப்பா
சபரிகிரி நாயகனே சரணம் ஐயப்பா (சுவாமி)

அச்சங்கோயில் அரசனென்றும் ஆரியங்கா ஐயாவென்றும்
அடியார்கள் புகழ்வதெல்லாம் உன்னைத்தானே?
பக்தர்கள் அழைப்பதும் உன்னைத்தானே (சுவாமி)

வில்லாளி வீரனென்றும் வீரமணி கண்டனென்றும்
வீரமாய் அழைப்பதும் உன்னைத்தானே
வானவர்கள் புகழ்வதும் உன்னைத்தானே? (சுவாமி)

கற்பூர ஜோதியென்றும் காந்தமலை ஜோதியென்றும்
தரணியெல்லாம் புகழ்வதும் உன்னைத்தானே?
சபரிகிரி நாயகனே சரணம் ஐயப்பா (சுவாமி)

ஆற்றில்ஒரு காலும்வைத்து சேற்றில்ஒரு காலும்வைத்து
அல்லல் படுகிறதை பாருமய்யா
ஆதாரமானவனே அகிலாண்ட நாயகனே
அருள்புரிய வேண்டும் ஐயா ஐயப்பா
சபரிகிரி நாயகனே சரணம் ஐயப்பா (சுவாமி)

உற்றாரும் இல்லை உறவினர்கள் யாருமில்லை
உன்னையே நம்பி வந்தேன் ஐயப்பா
எப்பிழைகள் செய்தாலும் அப்பிழைகள்பொறுத் தருள்வாய்
ஆரியங்காவில் வாழும் எங்கள் ஐயப்பா
சபரிகிரி நாயகனே சரணம் ஐயப்பா (சுவாமி)

60. இருமுடிகள் – நாங்கள்இருமுடிகள் – எல்லோரும் இருமுடிகள்
தாங்கிவரும் வேளையில் உந்தன் சரணகோஷம் கேட்குதப்பா
சாரலிலே – மலைச்சாரலிலே – சபரிமலைச் சாரலிலே (இரு)

அச்சங்கோவில் ஆரியங்காவு சென்று வந்தோம்
எரிமேலி பேட்டை துள்ளி ஆடியே வந்தோம்
சுவாமி திந்தகத் தோம்தோம் ஐயப்பா திந்தகத் தோம்தோம்
ஐயப்ப திந்தகத் தோம்தோம் சுவாமி திந்தகத் தோம்தோம் (இரு)

நெய்யினாலே அபிஷேகம் செய்யவே வந்தோம்
நித்திய பிரம்மசாரி உன்னைக் கானவே வந்தோம்
அங்கே இல்லாதாரும் உள்ளவரும் பேதமில்லையே
அருள் வள்ளலே உன் கருணைக்கொரு எல்லை யில்லையே
சுவாமியே பேதமில்லையே – ஐயப்பா பேதமில்லையே (இரு)

61. ஐயன் தூணிலும் இருப்பார் துரும்பிலும் இருப்பார்
தூயன் ஜோதி மணிகண்டன்
உன்னிலும் இருப்பார் என்னிலும் இருப்பார்
உலகத்தை காப்பார் மணிகண்டன் (ஐயன்)

கள்ளமில்லாத உள்ளத்தில் இருப்பார் கருணைக் கடவுளவர்
சரணம் சொல்லும் வேளையிலே சடுதியில் வருவார் ஐயப்பன் (ஐயன்)

யானை புலிகள் கூட்டத்தையே கண்டால் பதறி ஓடாதே
சரணம் என்று சொன்னாலே சடுதியில் வருவார் ஐயப்பன் (ஐயன்)

பிள்ளை வேண்டும் என்றாலே பிரியமாய் அவரை பணிந்துவிடு
பின்னால் வருவார் நிச்சயமே பிள்ளையாய் பிறப்பார் மணிகண்டன் (ஐயன்)

தீராப் பிணியாய் இருந்தாலும் தினமும் அவரை பணிந்தாலும்
தீராப் பிணியை தீர்த்துவிட்டு திடவாழ்வு தருவார் ஐயப்பன் (ஐயன்)

62. தாலாட்டு பாடவா தாளம்பல போடவா
கோலாட்டு அடிக்கவா கும்மிபல கொட்டவா

அச்சங்கோவில் அரசனாம் அச்சம் தீர்க்கும் தெய்வமாம்
ஆரியங்காவு ஐயனாம் ஆதரிக்கும் தெய்வமாம் (தாலாட்டு)

குளத்துப்புழை பாலகனாம் குறைகளை தீர்ப்ப வனாம்
எரிமேலி நாதனாம் எங்கள்குல தெய்வமாம் (தாலாட்டு)

வாபர்சுவாமி தோழனாம் வன்புலி வாகனனாம்
காளைகாட்டி நாதனாம் காத்தருளும் தெய்வமாம் (தாலாட்டு)

அழுதமலை ஏற்றமாம் அழுதமலை இறக்கமாம்
கரிமலை ஏற்றமாம் கரிமலை இறக்கமாம் (தாலாட்டு)

பம்பையின் ஜோதியாம் பந்தள ராஜனாம்
நீலிமலை ஏற்றமாம் நித்திய பிரம்மச் சாரியாம் (தாலாட்டு)

சின்னகருப்ப சாமியாம் பெரியகருப்ப சாமியாம்
பதினெட்டாம்படி பாலனாம் பக்தர்குறை தீர்ப்ப வனாம் (தாலாட்டு)

நெய்யாபி ஷேகனாம் நீலவஸ்திர தாரியாம்
மாளிகைபுரத்து அம்மையாம் மஞ்சமாதா தேவியாம் (தாலாட்டு)

காந்தமலை ஜோதியாம் காத்தருளும் தெய்வமாம்
காத்தருளும் தெய்வமாம் காந்தமலை ஜோதியாம் (தாலாட்டு)

63. *எங்க பகவானே தங்க பகவானே* (மெட்டு 1)
*தங்க பகவானே பொன்னு பகவானே*

எங்க பகவானே தங்க சிலையானே (மெட்டு 2)
சரணம் சரணம் ஐயா பொன்னு பகவானே (எங்க)

ஹரிஹர சுதன்ஐயா எங்கபகவானே–தங்கசிலையோனே
சரணம் சரணம் ஐயா பொன்னுபகவானே (எங்க)

அச்சங்கோவில் அரசனய்யா எங்கபகவானே – தங்கசிலையோனே
சரணம் சரணம் ஐயா பொன்னுபகவானே (எங்க)

குளத்துப்புழை பாலனவன் எங்க பகவானே – தங்கச்சிலையோனே
சரணம் சரணம் ஐயா பொன்னுபகவானே (எங்க)

வில்லாளி வீரனய்யா எங்கபகவானே – தங்கசிலையோனே
சரணம் சரணம் ஐயா பொன்னுபகவானே (எங்க)

பந்தள பாலனவன் எங்கபகவானே – தங்கசிலையோனே
சரணம் சரணம் ஐயா பொன்னுபகவானே (எங்க)

காந்தமலை தெய்வமவன் எங்கபகவானே – தங்கசிலையோனே
சரணம் சரணம் ஐயா பொன்னுபகவானே (எங்க)

காந்தமலை ஜோதிஅவன் எங்கபகவானே – தங்கசிலையோனே
சரணம் சரணம் ஐயா பொன்னுபகவானே (எங்க)

64. எரிமேலி சாஸ்தா ஏழைகளின் நேசா
எல்லோரையும் வாழவைக்கும் பொன்னம்பல வாசா (எரிமேலி)

அல்லல் அகற்றிடுவாய் அம்புவி வாழ்வினிலே
வல்லவனே வருவாய் வாழும் நலம் தருவாய் (எரிமேலி)

ஏழைகளின் துணைவா ஏற்றமிகும் தலைவா
சூழும் வினையோடு சோகம்தவிர்த் திடுவாய் (எரிமேலி)

வீரமணிகண்டா வெற்றிதரும் தேவா
மேருமலை வளைத்த விந்தைதிருப் புதல்வா (எரிமேலி)

அன்று புலியதன்மேல் அஞ்சாமல் வந்தவனே
இன்று அதுபோல எங்கள்முன்னே வருவாய் (எரிமேலி)

ஐயப்பனே சரணம் அரும்பொருளே சரணம்
வையகத்தைக் காத்து வருபவனே சரணம் (எரிமேலி)

65. உன்னை நினைந்தேன் உலகினை மறந்தேன் உண்மையை யார் அறிவார்
உள்ளம் என்னும் கோவிலிலே – இங்கு உன்னையன்றி யார் வருவார்
ஐயனே சரணமய்யா நீ அன்புடனே வரணுமய்யா (ஐயனே) (உன்னை)

உன்னையே நம்பி வந்தேன் உள்ளத்தால் பூஜை செய்தேன்
செய்த பிழை பொறுத்தருள சிந்தையால் வேண்டி நின்றேன்
ஐயனே சரணம் ஐயா நீ அன்புடனே வரணுமய்யா (ஐயனே) (உன்னை)

அச்சங்கோவில் ஆட்சி செய்ய அன்று அமர்ந்தாய் அரசனாக
ஐயனாக அருள் புரிய அமைத்தாயே ஆரியங்காவு
ஏகாந் தமாய் இருக்க ஏற்றது எரிமேலியோ (ஐயனே) (உன்னை)

சபரிமலையில் காட்சிதந்த சாந்த சொரூபன் அன்றோ
காந்தமலை ஜோதியிலே காட்சிதந்த கடவுளன்றோ
காண்பதுவும் உன்னையன்றோ – உன்னை காணக்காண எல்லை யுண்டோ
ஐயனே சரணமய்யா நீ அன்புடனே வரணுமய்யா
சுவாமியே சரணம் ஐயா சற்குருவே சரணமய்யா (உன்னை)

66. பொன்னூஞ்சல் ஆடுகிறான் – ஐயப்பசாமி
பொன்னூஞ்சல் ஆடுகிறான் (பொன்)

பிள்ளைகுள நகரினிலே தெக்ஷண மாகாளி
சன்னதியில் பொன்னூஞ்சல் ஆடுகிறான் (பொன்)

மாதநல்ல பிறப்பினிலே மக்கள்வெள்ளம் கூடவர
மணிகண்ட சுவாமிஅவன் பொன்னூஞ்சல் ஆடுகிறான் (பொன்)

குருசுவாமி அருளினிலே குழந்தைகள் நாங்கள் பாடிவர
குதூகலமாகவே பொன்னூஞ்சல் ஆடுகிறான் (பொன்)

பதினெட்டு வருடமாக நலமுடனே வழி நடத்த
நல்லகுருசாமி முன்னாலே பொன்னூஞ்சல் ஆடுகிறான் (பொன்)

ஜோதி தன்னை ஏற்றி வைத்து சுகமுடனே – வேண்டி
பூஜை செய்ய பொன்னூஞ்சல் ஆடுகிறான் (பொன்)

அச்சங்கோவில் அரசனாக ஆரியங்காவு அய்யனாக
குளத்துப்புழை பாலனாக குழந்தை மணிகண்டனாக (பொன்)

67. சரணமப்பா சரணமப்பா சாமியே–யே–யே
சரணமப்பா சரணமய்யா சுவாமியே–ஐயப்போ (சரண)

நெற்றியிலே நீறணிந்து நீலஆடை தாங்கியே
சுற்றிவந்து அய்யன்பதம் தேடினேன் – உன்
சபரிமலை தனைநோக்கி ஓடினேன் – ஐயப்போ (சரண)

பவக்கடலை கடந்துசென்று பரமனடி சேர்ந்திடவே
தவக்கோலமாம் துளசிமாலை தாங்கினேன்
தாரணியில் உன்புகழை பாடினேன் – ஐயப்போ (சரண)

சுவாமி திந்தகத் தோம்தோம் ஐயப்பா திந்தகத் தோம்தோம் (ஐயப்பதிந்த)
என்று சரமெடுத்து தீர்த்தமாடி வேட்டையாடி பேட்டைகூடி
பேட்டையிலே துள்ளிவந்தேன் ஐயனே – அது
பேரானந்தம் பேரானந்தம் சுவாமியே – ஐயப்போ (சரண)

இருமுடியும் தாங்கிகொண்டு பெருவழியில் நடக்கையிலே
கரிமலையில் கதறுகிறேன் ஐயனே – என்னை
காத்தருள வேண்டுமய்யா மெய்யனே – ஐயப்போ (சரண)

பாவனமாம் பம்பாதன்னில் பாலகனே உன்னைக்கண்டு
பாட்டுபாட பாவவினை போகுதே – உன்னை
பக்தியோடு கை கூப்ப தோணுதே – ஐயப்போ (சரண)

ஆறுவாரம் நோன்பிருந்து ஆறுமூன்று படியேறி
ஆரவார கூட்டத்திற்கு நடுவிலே – உன்னை
ஆனந்தமாய் தரிசனமும் காண்பேனே – ஐயப்போ (சரண)

கங்கை சூடும் நடராஜன் தூய அருள்தோன்றவே
பம்பைநதியின் கரையில் கண்ட பாலனே
பந்தளத்தை அரசாண்ட வேந்தனே – ஐயப்போ (சரண)

68. பஞ்சலோக நாதனப்பா பஞ்சவர்ண தேவனப்பா
சஞ்சலம் இல்லாமல் உந்தன் சன்னிதானம் வந்தோமப்பா (பஞ்ச)

அழுது அழுது ஏறிவந்தோம் அழுதா மலைதனிலே
ஆனந்தமாய்க் காட்சி தந்தாய் ஐயப்பனே மெய்யப்பா (பஞ்ச)

கால்கடுக்க ஏறிவந்தோம் கரிமலை ஏற்றத்திலே
கண் கொள்ளாக் காட்சிதந்தாய் கருணை உள்ளம் படைத்தவனே (பஞ்ச)

பதறிபதறி ஓடிவந்தோம் பம்பா நதி நோக்கி
பாவமெல்லாம் தொலையக் கண்டோம் பம்பா பாலனே (பஞ்ச)

நின்று நின்று ஏறி வந்தோம் நீலிமலை ஏற்றத்திலே
நினைத்ததெல்லாம் நடத்திவைத்தாய் நித்ய பிரம்மசாரியே (பஞ்ச)

பைய பைய ஏறினோமே பதினெட்டாம் படிதன்னில்
பரவசமாய் காட்சிதந்தாய் பஞ்சலோக நாதனே (பஞ்ச)

பார்த்து பார்த்து நின்றோமே பொன்னம்பல மேடுதன்னை
ஜோதியாக காட்சி தந்தாய் ஜோதிஸ்வரூபனே (பஞ்ச)

69. இருமுடியில் இருக்குதப்பா மகிமை – அதை
எடுத்துச் சொல்லும் ஐயப்பனின் பெருமை
சபரிமலை செல்வதுதான் நம்கடமை
சரணகோஷம் ஒன்றுதானே நமதுடைம
ஐயப்பா ஐயப்பா சரணம் சரணம் ஐயப்பா (இரு)

குருவடிவில் தவமிருக்கும் தனிமை – அவன்
திருவடியில் நிறைந்திருக்கும் இனிமை
ஐயப்பனின் திவ்யநாமம் சொல்ல சொல்ல அருமை
அனுதினமும் சொல்லிவந்தால் வாழ்வுக்கு வளமை (ஐய) (இரு)

கொடுமை செய்த மகிஷிதனை தேவியாக்கினான்
கொள்ளைக்கார வாவரைதன் தோழன் ஆக்கினான்
அன்னைக்காக தேவர்களை புலிகள் ஆக்கினான்
சன்மார்க்க தத்துவத்தை படிகள் ஆக்கினான் 18 (படி)
ஐயப்பா ஐயப்பா சரணம் சரணம் ஐயப்பா (இரு)

70. *சந்தனமாம் சந்தனம் சபரிமலை சந்தனம்* (மெட்டு 1)
*சந்தனத்தை பூசிகிட்டு சந்தோசமா பாடுங்க*

சந்தனமாம் சந்தனம் சபரிமலை சந்தனம் (மெட்டு 2)
சந்தனத்தை வச்சிக்கிட்டு சபரிமலையை நாடுங்கோ (சந்)

குங்குமமாம் குங்குமம் குளத்துப்புழை குங்குமம்
குங்குமத்தை வச்சிக்கிட்டு குளத்துப்புழையை நாடுங்கோ (சந்)

அத்தருன்னா அத்தரு அச்சன் கோயில் அத்தரு
அத்தரை தெளிச்சிக்கிட்டு அச்சன்கோயில் நாடுங்கோ (சந்)

பன்னீராம் பன்னீரு பந்தளத்து பன்னீரு
பன்னீரை தெளிச்சிக்கிட்டு பந்தளத்தை நாடுங்கோ (சந்)

பேட்டையின்னா பேட்டை எரிமேலி பேட்டை
பேட்டைத்துள்ளி ஆடுவதற்கு எரிமேலி வாருங்கோ (சந்)

கற்பூரமாம் கற்பூரம் காந்தமலை கற்பூரம்
கற்பூரத்தை ஏத்திகிட்டு காந்தமலையை நாடுங்கோ (சந்)

சன்னதியாம் சன்னதி ஐயப்பன் சன்னதி
ஐயப்பனை காண்பதற்கு சபரிமலைக்கு வாருங்கோ (சந்)

71. மணிகண்டா மணிகண்டா மாமலைவாசா மணிகண்டா
மணிமயபூஷணா மணிகண்டா மந்தகாச வதனா மணிகண்டா (மணி)

மாயோன்சுதனே மணிகண்டா மாமன்னன்மகனே மணிகண்டா
மோகனரூபா மணிகண்டா மோகினிதனயா மணிகண்டா (மணி)

மாதவன்மகனே மணிகண்டா மகிஷிமர்த்தனா மணிகண்டா
சங்கரன்மகனே மணிகண்டா சபரிகிரீசா மணிகண்டா (மணி)

வில்லாளிவீரா மணிகண்டா வீரமணிகண்டா மணிகண்டா
பம்பையின் பாலா மணிகண்டா பந்தளவேந்தே மணிகண்டா (மணி)

72. வானவர் காவலன் சன்னதி – நீல வானை மோதும் சன்னதி
அழகு சிந்தும் சன்னதி – மிக அற்புதமான சன்னதி (வானவர்)

ஐயப்பன் கோயில் சன்னதி – இது ஐயம் தீர்க்கும் சன்னதி
சிந்தை கவரும் சன்னதி – எங்கள் சீலன் வாழும் சன்னதி!! (வானவர்)

மலையின் நடுவில் சன்னதி – அது மலையாள தேவன் சன்னதி
மணிகண்ட நாதன் சன்னதி – சுற்றி மக்கள் கூடும் சன்னதி!!

கற்பூர ஒளியில் சன்னதி – எங்கும் நெய் மணக்கும் சன்னதி
சந்தனம் கமழும் சன்னதி எங்கள் சாஸ்தா வாழும் சன்னதி!! (வானவர்)

பந்தளகுமரன் சன்னதி – தூய பக்தர்கள் நாடும் சன்னதி
சந்தடி நிறைந்த சன்னதி எங்கும் சரணம் கேட்கும் சன்னதி !! (வானவர்)

புகழைப் பாடும் சன்னதி – நல்ல அருளைப் பொழியும் சன்னதி
மகிழ வந்து பாருங்கள் நல்ல மனமும் உயர்ந்து வாழுங்கள் (வானவர்)

73. பாவன சாஸ்தா புலி வாகன சாஸ்தா
மாதவ சாஸ்தா குகன் சோதர சாஸ்தா
மாபல சாஸ்தா புவி காவல சாஸ்தா
ஜோதியே சாஸ்தா மறை ஆதியே சாஸ்தா (பாவன)

வேத வேதாந்தா ப்ரண வாதி நாதாந்தா
ஆஸ்தியே சாஸ்தா பவ நாஸ்தியே சாஸ்தா
ஐயனே சாஸ்தா உயர் மெய்யனே சாஸ்தா
ஹரிஹர சாஸ்தா தேவாத் பயஹர சாஸ்தா (பாவன)

பூரண சாஸ்தா புண்ய காரண சாஸ்தா
தீரனே சாஸ்தா திருமால் சுதனே சாஸ்தா
பக்தர் ஆதாரா மிகும் சக்தி பாதாரா
சித்தனே சாஸ்தா பரி சுத்தனே சாஸ்தா
உத்தம சாஸ்தா கலை வித்தக சாஸ்தா
ஐயப்ப சாஸ்தா சரணம் ஐயப்பா சாஸ்தா (பாவன)

74. சபரிமலை சாஸ்தாவும் எங்கே எங்கே – அந்த
சபரிமலை போனால் தெரியும் அங்கே அங்கே (சபரிமலை)

கன்னிமூல கணபதியும் எங்கே எங்கே?
கருணையுடன் வந்தாரய்யா இங்கே இங்கே
சாமியே ஐயப்பா சரணம்கூறி பாடப்பா
வேதநாதா ஐயப்பா வேதனையை தீரப்பா (சபரிமலை)

பேட்டைதுள்ளல் ஆட்டமது எங்கே எங்கே?
பேரின்ப ஆட்டமது இங்கே இங்கே
அழுதாநதி தீர்த்தமது எங்கே எங்கே – என்
அங்கமெல்லாம் குளிருதப்பா இங்கே இங்கே
சாமியேஐயப்பா சரணம் கூறி பாடப்பா
வேதநாதா ஐயப்பா வேதனையை தீரப்பா (சபரிமலை)

கற்பூர ஆழியது எங்கே எங்கே?
கண்ணுக்குள்ளே தெரியுது பார் இங்கே இங்ஙகே
திருப்படிகள் பதினெட்டும் எங்கே எங்கே?
திரும்பிபார்த்தால் தெரியுதுபார் இங்கே இங்கே
சபரிமலை ஐயப்பா தானிரங்கி வாருமப்பா
வில்லெடுத்து வாருமப்பா வினைதீர்க்க வாருமப்பா (சபரிமலை)

75. என்னப்பா ஐயப்பா என்னைநீயும் பாரு – உன்
கண்ணாலே பார்த்தா என்கவலை எல்லாம்தீரும்
நல்லபிள்ள, செல்லபிள்ள, நாராயணன் பெற்றபிள்ள
சபரியில் வாழும்பிள்ள, ஐயப்பா, தர்ம சாஸ்தாவும் நீதானே ஐயப்பா
(என்னப்பா)

கார்த்திகையில் மாலைபோட்டு காலைமாலை பூஜைசெய்து
மார்கழியில் கட்டும்கட்டி ஐயப்பா உந்தன்
மலைநோக்கி நடந்திடுவோம் ஐயப்பா (என்னப்பா)

எரிமேலி பேட்டைதுள்ளி எல்லோரும் ஆட்டம்ஆடி
வாவரையும் தொழுதுகிட்டு ஐயப்பா – உந்தன்
வழிநடையை தொடங்கிடுவோம் ஐயப்பா (என்னப்பா)

காளைகட்டி அழுதாமலை கடும்ஏற்றம் ஏறிகிட்டு
கரிமலை ஏறிஇறங்கி ஐயப்பா – உந்தன்
பம்பாநதி கண்டிடுவோம் ஐயப்பா (என்னப்பா)

பாசமுடன் சரணஞ்சொல்லி பதினெட்டாம் படியேறி
சன்னதியை சுற்றிவந்து ஐயப்பா – உந்தன்
சாந்தமுகம் கண்டிடுவோம் ஐயப்பா (என்னப்பா)

76. அம்பலத் தமர்ந்தவனே சபரிமலை ஈசா
ஆயகலை கற்றவனே சபரிமலை ஈசா
அச்சுதனே காத்திடுவாய் சபரிமலை ஈசா
ஆலகாலன் மைந்தனே சபரிமலை ஈசா (அம்பலத்)

காந்தமலை வாசனே சபரிமலை ஈசா
கண்கண்ட தேவனே சபரிமலை ஈசா
பதினெட்டாம் படிமேவும் சபரிமலை ஈசா
பார்புகழ் பெற்றவனே சபரிமலை ஈசா (அம்பலத்

மஹிஷிசம் ஹாரனே சபரிமலை ஈசா
மணிமகுட தீபனே சபரிமலை ஈசா
பம்பையில் பிறந்தவனே சபரிமலை ஈசா
பந்தளத்து வேந்தனே சபரிமலை ஈசா (அம்பலத்)

பண்புடன் பாடினோம் சபரிமலை ஈசா
பஞ்சபூத மானவனே சபரிமலை ஈசா
சஞ்சலங்கள் தீர்த்துவைக்கும் சபரிமலை ஈசா
சாமியே சரணமப்பா சபரிமலை ஈசா (அம்பலத்

77. சரணமென்று உனைபணிந்து சன்மார்க்க வழி நடந்து
சபரிமலையை அடைந்துவிட்டால் ஐயப்பா – நாங்கள்
பிறந்தபயனை அடைந்திடுவோம் ஐயப்பா (சரண)

பாதிவழி தூரத்திலே பம்பா நதி தீரத்திலே
சரணமென்று உனை அழைத்தால் ஐயப்பா – உடம்பில்
சக்தி வந்து சேருதையா ஐயப்பா (சரண)

சன்னதியில் வந்துஉந்தன் சிங்காரமுகம் காண்பதற்கு
பதினெட்டுபடி கடந்து வாரோம் ஐயப்பா – எம்மை
அடிமையாக்கி கொள்ள வேண்டும் ஐயப்பா (சரண)

காலமெல்லாம் உனைதுதித்து கருத்துடனே வாழ்வதற்கு
கருணைகாட்டி அருளவேணும் ஐயப்பா – எங்கள்
கர்மவினை போக்க வேண்டும் ஐயப்பா (சரண)

78. துளசிமணி மாலைகட்டி இருமுடியும் தலையில் ஏந்தி
சபரிநோக்கி நடையை போடு கன்னிச்சாமி – அங்கே
சாஸ்தாவின் அருள் கிடைக்கும் கன்னிச்சாமி (துளசி)

எரிமேலி பேட்டையிலே கரிமலையில் நடக்கையிலே (எரிமேலி)
எத்தனையோ இன்பமுண்டு கன்னிச்சாமி – அங்கே
நீயும்வந்து வரத்தைகேளு கன்னிச்சாமி (துளசி)

பாட்டுபாடி பஜனைபாடி பம்பாநதி தீர்த்தமாடி (பாட்டு)
காட்டுக்குள்ளே குடியிருப்போம் கன்னிச்சாமி – அதிர்
வேட்டுவைத்து வழி நடப்போம் கன்னிச்சாமி (துளசி)

மலையதிர சரணம் போட்டு மனமுருக பாட்டும்பாடி (மலை)
அலையலையாய் நடந்து வந்தோம் கன்னிச்சாமி – அங்கு
ஆனந்த ஜோதி பார்ப்போம் கன்னிச்சாமி (துளசி)

79. *தானே தன தன்னானனே - தன*
*தானே தன தன்னானனே.*

பச்சப்பிள்ளை பவளப்பிள்ளை – சாமி
பாண்டுரெங்கன் பெத்தபிள்ளை
பம்பையிலே பிறந்த பிள்ளை – சாமி
பந்தளத்தில் வளர்ந்த பிள்ளை (பச்ச)

கார்த்திகையில் மாலையிட்டு – சாமி
கடும்பயணம் போகச்சொல்லி
மார்கழியில் கட்டுங்கட்டி – சாமி
மணிகண்டனை பார்க்கபோறோம் (பச்ச)

அச்சங்கோவில் ஆண்டபிள்ளை – சாமி
அரசாட்சி செய்தபிள்ளை
அண்டினோரை காத்தபிள்ளை – சாமி
அனைவருக்கும் சொந்தபிள்ளை (பச்ச)

குருவின்பிள்ளைக்கு வாய்திறந்த – சாமி
குருதட்சனை கொடுத்தபிள்ளை
தாயின்நோயை தீர்த்திடவே – சாமி
புலியின்மேலே வந்தபிள்ளை (பச்ச)

கம்பங்குடி அந்தணருக்கு – சாமி
அடிமையான பச்சப்பிள்ளை
வீரசூர வாவரையே – சாமி
போரில்வென்ற வீரப்பிள்ளை (பச்ச)

80. ஜீவன் என்பது உள்ளவரை – என்
நெஞ்சம் வணங்கும் சபரிமலை
அரிகரன் புகழை பாடும்வரை
வாழ்வினில் தோன்றும் சாந்தமலை (ஜீவன்)

கார்த்திகைதோறும் மாலையணிந்து
நாற்பதுநாளும் நோன்புமிருந்து

நாவால் அய்யன் நாமம் மொழிந்து
நடந்தே சென்று கோவிலடைந்து
இருமுடி சேர்த்தேன் அவனிடத்தில்
ஒளிமழை தந்தான் என்னிடத்தில் ஐயன் (ஒளி) (ஜீவன்)

நெய் விளக்காலே அலங்காரம் கண்டு
நெஞ்சில் மறையும் அகங்காரம்
சரணம் என்னும் ஓங்காரம்
ஓங்கார சொரூப ரூபனே – சரணம் ஐயப்பா
சரணம் என்னும் ஓங்காரம் சர்வமும் அதிலே ரீங்காரம்
ஆசையில் மோதும் அலையாவும்
ஜோதியைக் கண்டால் தெளிவாகும் – மகர (ஜோதி) (ஜீவன்)

பம்பைக் கரையில் அவதரித்தான்
பந்தள நாட்டில் பணிமுடித்தான்
மகிக்ஷியை வென்றே வாழ்வளித்தான்
மழலைவடிவில் அருள் கொடுத்தான்
அன்னையின்நோய்க்கும் மருந்தளித்தான்
அகிலம் வாழவும் துணையிருப்பான் – ஐயன் (அகிலம்) (ஜீவன்)

81. கன்னிமூலை கணபதியை வேண்டிகிட்டு – நாங்க
கார்த்திகை முதல்தேதி மாலையிட்டோம் (கன்)
ஐயப்பா ஐயப்பா என்றேசொல்லி – நாங்க
ஆறு வாரம்தானே நோன்பு மிருந்தோம் (நாங்க) (கன்னி)

குருசாமி துணைகொண்டு அவர்பாதம் நம்பிகிட்டு
இருமுடியை சுமந்துகிட்டு வந்தோமையா எங்க (குரு)
ஆறுபடை வீடுசென்று கந்தனையே வேண்டிகிட்டு
யாத்திரையாய் நடந்து வந்தோமையா நாங்க (யாத்) (கன்னி)

குருவாயூர் கோவில்முதல் கன்யா குமரிவரை
தெரிசனமே செய்துகிட்டு வந்தோமையா நாங்க (குரு)
எரிமேலி பேட்டைதுள்ளி வாவரையே வேண்டிக்கிட்டு
பேரூர்த் தோட்டில் பொரி போட்டு வந்தோமையா நாங்க (பேரூர்) (கன்னி)

காளைகட்டி அஞ்சல்வந்து அழுதாமலை ஏறிக்கிட்டு
கரிமலையின் உச்சியிலே வந்தோமையா – நாங்க (காளை)
பம்பையிலே குளித்துவிட்டு பாவங்களை தொலைத்துகிட்டு (பம்பை)
நீலிமலை ஏறிக்கிட்டு வந்தோமையா – நாங்க (நீலி) (கன்னி)

பதினெட்டாம் படிதாண்டி பகவானே உனைவேண்டி
கற்பூர ஜோதிதன்னை கண்டோமையா – நாங்க (பதி)
மகரஜோதியைகண்டு மனமாற சரணம்போட்டு (மகர)
மணிகண்டா உன்மகிமை அறிந்தோமையா (மணி) (கன்னி)

சாமி யேசரணம் – ஐயப் பாசரணம், சாமி யேசரணம் சரண மய்யா
சாமியேசரணம் – ஐயப்பாசரணம் சரணம்சரணம் – சரணமய்யா
சாமியே – ஐயப்போ சாமிசரணம் ஐயப்ப சரணம் சாமியே ஐயப்போ.

82. *இருமுடி தாங்கி ஒருமனதாகி குருவெனவே வந்தோம்*

*இருவினை தீர்க்கும் எமனையும் வெல்லும் திருவடியைக் காண வந்தோம்*

பள்ளிக்கட்டு – சபரிமலைக்கு, கல்லும் முள்ளும், காலுக்கு மெத்தை
சாமியே – ஐயப்பா, சாமிசரணம் – ஐயப்பசரணம் (பள்ளி)

நெய்யபிஷேகம் – ஸ்வாமிக்கே, கற்பூரதீபம் – ஸ்வாமிக்கே
ஐயப்பன்மார்களும் கூடிக்கொண்டு ஐயனை நாடிச் சென்றிடுவார்
சபரிமலைக்கே சென்றிடுவார் (சாமியே)

கார்த்திகை மாதம் மாலையணிந்து நேர்த்தியாகவே விரதமிருந்து
பார்த்தசாரதியின் மைந்தனே உனைப் பார்க்கவேண்டியே தவமிருந்து (பார்த்த)
இருமுடி எடுத்து எரிமேலிவந்து ஒருமனதாகிப் பேட்டைத் துள்ளி
அருமை நண்பராம் வாவரைத் தொழுது ஐயனின் அருள்மலை ஏறிடுவார்(சாமியே)

அழுதை ஏற்றம் ஏறும்போது அரிஹரன் மகனை துதித்துச் செல்வார்
வழிகாட்டிடவே வந்திடுவார் அய்யன் வன்புலிஏறி வந்திடுவார்
கரிமலை ஏற்றம் கடினம் கடினம் கருணைக்கடலும் துணை வருவார்
கரிமலை இறக்கம் வந்தவுடனே பெருநதி பம்பை கண்டிடுவார் (சாமியே)

கங்கை நதிபோல் புண்ணிய நதியாம் பம்பையில் நீராடி
சங்கரன் மகனைக் கும்பிடுவார் சஞ்சலமின்றி ஏறிடுவார்
நீலிமலை ஏற்றம் சிவபாலனும் ஏற்றிடுவார்
காலமெல்லாம் நமக்கே அருட்காவலனா யிருப்பார்
தேகபலம் தா – பாதபலம் தா, பாதபலம்தா – தேகபலம் தா
தேகபலம் தா என்றால் அவரும் தேகத்தை தந்திடுவார்
பாதபலம் தா என்றால் அவர்தன் பாதத்தை தந்திடுவார் – நல்ல
பாதயைக் காட்டிடுவார் (சாமியே)

சபரி பீடமே வந்திடுவார் சபரி அன்னையைப் பணிந்திடுவார்–ர்–ர்
சரங்குத்தி ஆலில் கன்னிமார்களும் சரத்தினைப் போட்டு
வணங்கிடுவார் சபரிமலை தனை நெருங்கிடுவார்

பதினெட்டு படிமீது ஏறிடுவார் கதியென் றவனைச் சரணடைவார்
மதிமுகம் கண்டே மயங்கிடுவார் – ஐயனைத்
துதிக்கையிலே தன்னையே–யே மறந் திடுவார் (பள்ளி)

83. பகவான் சரணம் – பகவதி சரணம், சரணம் சரணம் ஐயப்பா
பகவதி சரணம் – பகவான் சரணம், சரணம் சரணம் ஐயப்பா
அகமும் குளிரவே அழைக்கின்றோமே சரணம் சரணம் ஐயப்பா
பகலும் இரவும் உன் நாமமே நீ வரணும் வரணும் ஐயப்பா (பக)

கரிமலை வாசா பாவவினாசா சரணம் சரணம் ஐயப்பா
கருத்தினில் வருவாய் கருணையைப் பொழிவாய் சரணம் சரணம் ஐயப்பா
மகிஷி சம்ஹாரா மதகஜ வாகனா சரணம் சரணம் ஐயப்பா
சுகுண விலாசா சுந்தரரூபாசரணம் சரணம் ஐயப்பா (பக)

ஆறுவாரமே நோன்பிருந்தோம் பேரழகா உனைக் காணவந்தோம்–ம் ஐயப்பா ஐயப்பா (ஆறு)
பால் அபிஷேகம் உனக்கப்பா இந்த பாலனைக் கடைக்கண் பாரப்பா
முத்திரை தேங்காய் உனக்கப்பா உந்தன் தித்திக்கும் நாமம் எமக்கப்பா
கற்பூரதீபம் உனக்



தேவன்பாதம் – தேவிபாதம் திருவடி சரணம் ஐயப்பா
நாவினில் தருவாய் கீதமப்பா தேவை உன்திருப்பாத மப்பா

நெய்யபிஷேகம் – உனக்கப்பா உன்திவ்ய தரிசனம் எமக்கப்பா
தையினில் வருவோம் ஐயப்பா அருள் செய்யப்பா மனம் வையப்பா
பகவானே – பகவதியே – தேவனே – தேவியே (பகவான்)

84. கன்னிமூல கணபதி பகவானே சரணம்
கந்தனே சிங்கார வேலனே சரணம்
அன்னை மாளிகை புறத்தம்மை தேவியே சரணம்
ஹரிஹரசுதன் ஐயன் ஐயப்ப சுவாமியே சரணம் ஐயப்பா

மாமலை சபரியிலே மணிகண்டன் சந்நிதானம்
மாபெரும் பக்தர்களும் வணங்கிடும் சந்நிதானம்
கோமகன் குடிகொண்டு குறை தீர்க்கும் சந்நிதானம்
பூமகன் மைந்தனின் புண்ணிய சந்நிதானம் (கன்னி)

பதினெட்டு படிமீது விளங்கிடும் சந்நிதானம்
விதியையும் மாற்றிவைக்கும் வீரனின் சந்நிதானம்
கவலையை போக்கிடும் கணபதி சந்நிதானம்
அவனியெல்லாம் காத்திடும் அய்யப்பன் சந்நிதானம் (கன்னி)

நாகரின் சந்நிதானம் வாவரின் சந்நிதானம்
நாளெல்லாம் நமையென்றும் கட்டிகாக்கும் சந்நிதானம்
மாளிகை புறத்தம்மனின் மனங்கவர் சந்நிதானம்
நாளெல்லாம் நம்பிக்கை ஒளிவீசும் சந்நிதானம் (கன்னி)

85. தரிசனம் கண்டேன் பரவசம் கொண்டேன்
அரிஹரன் மைந்தனை சபரிமலை தன்னில் (தரி)
தர்மத்தை காக்கவே தரணியில் பிறந்தவனை
கர்மவினை தீர்க்கும் கருணையில் சிறந்தவனை (தரி)

வைதாலும் அவர்வாழ வழிகாட்டும் மன்னவன்
வாயார வாழ்த்தி நின்றால் வந்தருள் செய்பவன்
மெய்யப்பன் ஐயப்பன் மேன்மைதரும் பாலன்
தையினில் ஜோதியாய் திகழ்ந்திடும் நாதனை (தரி)

ஐந்து மலைக்கரசன் ஐந்தெழுத் தானவன்
ஐங்கரன் தம்பியவன் ஐஸ்வர்ய தாயகன்
சிந்தையில் நின்றாடும் பந்தள பாலகன்
சின்மையன் என்னய்யன் சுகம்தரும் நாயகனை (தரி)

86. *பொன்னம்பல மேடையிலே ஐயப்பா - ஒரு*
*புனிதநிலை கனிந்ததப்பா ஐயப்பா - ஒரு*
*புனிதநிலை கனிந்ததப்பா ஐயப்பா - ஐயப்பா-ஆ-ஆ-ஆ*

அருள் மணக்கும் ஆண்டவனே ஐயப்பா
ஆதி ஞான ஜோதியப்பா ஐயப்பா
இருக்கும் வாழ்வை சிறக்க வைக்கும் ஐயப்பா

ஈர்க்கும் காந்த மலையப்பா... ஐயப்பா (அரு)

உள்ஒளியை தோற்றுவிக்கும் ஐயப்பா
ஊறி வரும் உணர்வடக்கும் ஐயப்பா – என்னை
உன்னுள் நெருங்க வைத்தாய் ஐயப்பா
ஏகநிலை உணரவைத்தாய் ஐயப்பா (அரு)

ஐம்புலனாம் புலியை வெல்லும் ஐயப்பா
ஐயம் தீர்க்கும் தெய்வம் அப்பா ஐயப்பா
ஒருமை உள்ளம் குடி இருக்கும் ஐயப்பா
ஓங்கும் மலை வேந்தனப்பா ஐயப்பா
ஔவைக்குறள் யோகம் கொண்ட ஐயப்பா
செவ்வேளின் மணிகண்டா ஐயப்பா (அரு)

h h h h h

# I குளத்தூர் பஞ்சகம்

1. எந்தனை இனம் தெரிய வில்லையோ, கூடலூர் எங்கள்
பூர்வாச்ரமத்தில் ஈற்ற புலி சாய்க்க வென்று
பெருவழியாய் வந்து ஏற்கவிலை சாஸனத்தில்,

சொந்த அடிமை என்று தூங்குவது அறிந்தும் நீர்
சோதனைகள் செய்வதுண்டோ சொல் உறுதியாய்,
எங்கள் குடிவாழ்த்த வந்த பரஞ்ஜோதியே! பூதபதியே!

உந்தன் அடியார்க்கு நீர் ஸந்ததி வரேந்திரன் என்று
ஓதுவதும் உண்மை தானோ? உபரி ஸந்தான வழி
உண்டு என்று எனக்கு நீர் உத்தரவு செய்குவீரே!

சிந்தை ஆனந்த விழி தெளிவாகி வந்து யானும் உன் .
தரிசனம் செய்ய அருள்வீர், திருமால் ஹரன்
பெற்ற செல்வக் குமாரநிதி ஐயவீர மணிகண்டனே!

2. உற்றார் எனக்கு ஒருவரும் இல்லையே உனையன்றி
இப்பூதலத்தில், எங்கும் ஒன்றாக நின்று இலங்குகின்ற
உன் மஹிமை என் ஒரு நாவினால் உரைக்க எளிதோ?

பக்த கோடியில் யான் ஒருவன் உற்ற அடிமையாய் நின்று
பரிதவிக்கின்றதாமோ? பதிவாக நீர் குடும்பாதி
குருவென்று மனம் பாவித்து இரங்கி மேலும்

கொற்ற அடிமை யான் செய்த குற்றம் பொறுத்து என்னை
ஆட்கொண்டு அருள் செய்யும் உந்தன் குவலயானந்தவிழி
அமிர்தம் தெளித்து, என்கொடி வளர்த்து அன்பு செய்யும்

சிற்றம்பலத்தில் அதி நிர்த்தம் விளைத்த குல தெய்வமே
தென்குளத்தூர் ஆதிபனே! திருமால் ஹரன் பெற்ற
செல்வக்குமாரநிதி ஐய வீர மணிகண்டனே!

3. உம்மை துதித்தபேர் உள்ளத்திலிருந்து நீர் உயிராக
வாழ்வீரென்று, உலகத்திலும் வேதம் பல வற்றிலும்
ஒதுவது உறுதி என்று போற்றும் என்னைக் குடும்பமிலை

என்று பகர்ந்த மொழி இப்பொழுது மித்யை யாமோ?
ஈற்று அடைக்காமல் உன் கருணாமிர்தம் ஏகி என்
கொடி வளர்த்து மேலும் உன் ஸன்னதிப் பணிவிடைகள்

எந்நாளும் செய்யவே ஸந்ததி வரம் தருகுவீர்,
தருணத்தில் வெள்ளம் பெருக்கினால் அல்லவோ
தான் பயிர் தழைக்கும் ஐயா! சின்னக் குழந்தையாய்த்

தென்பாண்டி ராஜனிடம் சீராடி நின்றதேவா! என்
குல மணியாய் விளங்கும் திருமால் ஹரன் பெற்ற
செல்வக் குமார நிதி ஜய வீரமணிகண்டனே!

4. இனிமேலும் உம்மை ஸ்துதிப்பதல்லாது வேறு இஷ்ட குல தெய்வம் உண்டோ?
எவ்வேளை உன் கிருபை கிடைக்கு மென்றே
காத்திருக்கும் என் ஹிருதய சாதகத்தைத்
தனது குஞ்சென்பது மறிந்து கருணாமிர்தமும் தந்து
பாலிப்பதற்கு நீர் தாமதித்தால், என்னால் சகிக்கமுடியுமோ
உன்செயல் நானும் அறியாததும் உண்டோ?

மனதில் வெறுப்போ, தென் மதுரையில் அதிகாரமான
நின் பெருமை தானோ, ஜன ஸமூஹ மஹாமேரு
தென்கரந்தா புரியில் சிந்தை பூரித்து வாழும்

எனது அந்தரங்க தெய்வமே! மனமோகரூபனே!
திருமால் ஹரன் பெற்ற செல்வ குமாரநிதி ஜெயவீர மணிகண்டனே!

5. பாசத்துடன் நெடும்பாறை தடத்துநீர் பாய்ச்சுமடு
எடுக்கவில்லையோ, பம்பா நதிக்கு உபரி உன்
பாதவசியாரம் பக்தர்களைக் காக்கவில்லையோ,

ஆசை அளவில்லாமலே சைல வீதியில் அந்தணர் அவலை
வாங்கி ஆற்றைக் கடத்தி சுமடேற்றி ஜவந்தியூர்
அத்தாழம் உண்டு, அனுதினமும் நான் பூஜிப்பதும் மேல

வாசல் பிரதான பரிபூரணானந்தனே! நான்படும்
பாடு அறிந்து என்னைக்கண் பார்த்து
இரங்கக் கவி பலது பாடினேனே,

தேசம் புகழ்ந்த மணிதாஸர் குலம் வரவு தேவனே!
பூதநாதா! திருமால் ஹரன் பெற்ற செல்வக்
குமார நிதி ஜய வீர மணி கண்டனே!

# II ஆரியங்காவு பஞ்சகம்

1. கருணாம்புதே! உனது சரணாம்புஜங்களே கதி என்று
காத்திருக்கும் கம்பங்குடிக்கு உடமை, உன்
பொன்னடிக்கு அடிமை, கண்ட லிகிதப்படிக்கும்

வருதி தப்பாமல் உன் உறுதி ஒப்பாகவே என் வம்ச
வழியாய் நடந்தேன், மற்றும் எதுவாகிலும் குற்றமது
நான் செய்து வந்திருந்தாலும் உந்தன்

விருது பெரிதாய் மனம் பொறுத்தலது தானென்று
வேதங்கள் ஓதுவதுபோல், மேலும் என்குல விருத்தி
ஆக உன் பாத பக்தி வேலைகொண்டு அடிமையையாளும்

திருமால்ஹரன் சேர்ந்த பெருமான் என்றும் சாந்ததேவன்
ஆவேசச்சித்தன் என்றும் இந்தத் திக்கெல்லாம் புகழ் பரவும்
ஸ்ரீ பூர்ண புஷ்கலாம்பிகை மருவும் திருவாரியக் கடவுளே!

2. தயவினால் அன்பர் தம் துயர் தீர்த்து வருகின்ற
தர்மசாஸ்த்ரய்யன் என்று ஸந்ததம் உனைத் தொழும்
கரந்தையர் பாளையம் ஸமூஹத்தில் அதி ஸுமுகன்,

பயநிவாரணம் செய்ய, மதவாரணத்து உபரி பவனி
வந்து அவனி ஆளும் பக்த பரி பாலனே!
முக்தி புரிசீலனே! பாண்டியர்க்கு அனுகூலனே!

நயமாக உந்தன் திரு நயனாரவிந்தக் கருணாமிருதம்
பருக நாவினால் உந்தன் ஸ்துதி பாடிடும்
எனக்கு உன் நாமஸந்தானம் உதவும்

ஐய வீரமணிகண்டர் அடி பாத பக்தர்கள் ஜன்ம
ஸாபல்யர் என்றும் இந்தத் திக்கெல்லாம் புகழ்பரவும்

ஸ்ரீ பூர்ண புஷ்கலாம்பிகை மருவும் திருவாரியக் கடவுளே!

3. அனவரதம் அம்புவிக்கு ஆதாரமான உன் அம்புஜ பாத
தூளிக்கு ஆசையானேன், உனது பூஜாதி பக்தருக்கு
அடிமையாய்த் தொண்டு செய்யும்,

எனது ஸங்கடம் அறிந்து நீர் எப்பொழுது இரங்குவீர்
ஏந்தலே! புகலும் ஐயா! இன்னமும் ஸஹிப்பதற்கு
இடமில்லை என்பதும் உன் திருவுள்ளம் அறியாததோ;

கனவு கண்டது போல் இருக்கின்ற தாஸர்கட்க்கு
இஷ்ட காம்யங்கள் தரவே, காலம் கடத்தாமல்
இது ஸமயம் எந்தனைக் கண் பார்த்து இரங்கும் ஐயா!

தினமும் உந்தன் அன்பர்க்கு உதவி செய்வதில் நீர்
கண்கண்ட தேவாதி தேவன் என்றும்
இந்த திக்கெல்லாம் புகழ் பரவும்
ஸ்ரீ பூர்ண புஷ்கலாம்பிகை மருவும் திருவாரியக் கடவுளே!

4. உன் தாரகப் பெருமையின் அருமையினால் என் உற்ற
குலதெய்வ மென்று ஒப்பு வேறு சொல்வதற்கு
இப்பாரிடம் தன்னில் உனையன்றி வேறில்லை எனவே

பந்தாடும் மோஹினி பரந்தாமனும் பரனும் தந்த
பாலனென்றும் பாரில் அவதாரமென்று ஆரணர்
தினம் தொழும் பக்தாந்தரங்க நிதியே!

சிந்தாமணிக்கு இலகு முன்தாவனத்துறைந்து
இன்பம் தரும் குடும்ப பதியே! தேடும் நிதியாக
வந்து விளையாடுமென்று ஓதினேன் செந்தமிழ் நாவினாலே

செந்தாமரைக்கு ஐயன் இந்தாவெனத் தந்த
புதிய ஸந்ததி இதென்றும் இந்த திக்கெல்லாம் புகழ்
பரவும் ஸ்ரீ பூர்ண புஷ்கலாம்பிகை மருவும்
திருவாரியக் கடவுளே!

5. பொன்னம்பல திலகா! உன்னைப் பூஜிப்பதும்
பூஜாதி பக்தி செய்யும் போதாக்கள் என்றெனது
ஞாதாக்கள் தரும் வம்ச பூர்வீக பக்தனாம்

எந்நெஞ்சத்துயரை உன்னெஞ்சம் அறியாதிருப்பதும்
எந்த விதமோ! ஏழைப் பங்காளர் எனும் கேள்வியும்
உந்தன் விருதும் எந்தன் மட்டுக்கும் இல்லையோ?

சொன்ன சொல் என்ற உறுதி என்ன சொல்லவோ?
உந்தன் அடிமை இந்தச் சோகத்தில் மூழ்கலாமோ?
ஸொந்தமொரு ஸந்தானமும் தந்து எந்தனுள்ளத்
துயரம் தீருமய்யா!

சென்னியுற மணிதாசன் உன்னடி வணங்கினேன்
சிந்தையானந்தன் என்று இந்த திக்கெல்லாம் புகழ் பரவும்
ஸ்ரீ பூர்ண புஷ்கலாம்பிகை மருவும் திருவாரியக் கடவுளே!

## III அச்சனார் பஞ்சகம்

1. கோடி ஸூர்யப் பிரபையினொடு கமனன் அன்னப் பெருமை
கொண்டு வருகின்றதைப் பார், குவலயக் கண்ணன்
திரிபுவன வச்யன், நீல கோமளாங்கப் பிரகாசன்,

தேடும் நவரத்ன கிரீட கடகாங்கதன் திவ்யகேயூரஹாரன்
செங்கையில் மாணிக்கப் பாத்திரம் கரும்புவில்
அபயம் சேர்ந்து இலங்கும் புஷ்ப பாணன்

நாடுவார்முன் அழகுடன் ஓடி விளையாடுவார் நமது
அபீஷ்டங்கள் தருவார், நம்புவோர்க்கு உபகாரி என்பதில்
இவரன்றி இந்நாட்டில் ஒரு தெய்வம் யார் காண்?

ஆடலம் பரியேறிக்கூடலம்பதி சென்று அடிமை கொண்டு
அடிமை நல்கும் ஆதிசதுர் வேதங்கள் ஓதும்
பரஞ்ஜோதியே! எங்கள் அச்சனார் கோவில் அரசே!

2. மண்டலம் புகழ் வெற்றிகொண்டு நீரும் துரகமீது ஸவாரி
வரும் வாசல் பிரதானி என்று ஆவேச ரங்கம் செய்து
வருகிறன்றவன் கறுப்பன்

தண்டலாதிபன் இண்டலயன் அண்டையில் சட்டமிடும்
பொட்டல் அடியன் சாடி வரும் காற்றாடி
ஆட்டுறுஞ்சி பூதம் தன் காடு வெட்டி கூட

புண்டரீகத்தலைவன் என்ற செல்லப்பிள்ளை ஸுமதி
முன்னோடி வருவார், தோரணம் கட்டி ஸமூஹாரணர்
தொழுகின்ற தொண்டர் அபீஷ்டங்கள் தருவார்,

அண்டர்முனி தெண்டனிடுகின்ற மணிகண்டர்
ஆராதனைக்கு ஒருவனென்றும் ஆதிசதுர் வேதங்கள் ஓதும்
பரஞ்ஜோதியே! எங்கள் அச்சனார் கோவில் அரசே!

3. சிந்தையானந்த நயனம் தெளியவிசைந்து குலதேவர்வரும்
கோஷமது காண், செங்கண் வெறிக்கலி விலங்கொலி
கலீர் எனும் சிங்கிக்கல் பங்கில் இசக்கி

வந்தவரை வழி பார்த்து இசைந்து வசமாக்குவாள்
மாளிகையின் மேல் இசக்கி, வடிவனும் காடிக்கல்
அடியினுள் இசக்கியும், வாதுக்கல் இசக்கி கூட

சொந்தமாம் பத்ரகாளியும், சொல் பெரிய பேச்சி வடிவினில்
பிரம்மரக்ஷியும் சூழ்ந்து கொண்டாடி நடக்க
முன்னோடி மாடனுடன் முழங்கியே வந்து

அந்தணர்கள் சிந்தையில் உறைந்து வரமும் தருவார்
ஆவேச தேவனென்றும் ஆதி சதுர் வேதங்கள் ஓதும்
பரஞ்சோதியே! எங்கள் அச்சனார் கோவில் அரசே!

4. விதிமனங்கொண்டு பாரதி முலைப்பால் உண்டவீரன்
ஸவாரி வருகில் வில்லம்பு கத்தி கட்டாரி வல்லயம்
ஈட்டி வேல் பரசு வாள் சுரிகையும்
குதிகொண்டு பூதங்கள் எதிர்கொண்டு ஓடிவரக்
கூடலம் காடு சென்று, குட்டிதாய்ப்புலிகளை
வட்டமிட்டு எட்டு கோடி கூட்டி நகர் ஓட்டி வந்து

நீதியரசன் மதுராதிபன் எதிராகவே சென்று தேவியின் தலைவலி
மாற்றி நின்ற மன்னன், வந்தெமது துயரகற்றி
மைந்தர் வரமும் தந்து வம்சவழி காத்திருப்பார்

அதிரூப லாவண்யன் வேத மதி பூர்ண வல்லபன்
ஹரிஹர குமாரனென்றும் ஆதி சதுர் வேதங்கள் ஓதும்
பரஞ்ஜோதியே! எங்கள் அச்சனார் கோவில் அரசே!

5. பணிகின்ற பேர்க்கு உயிர்த்துணை என்றும் காப்பவன்
பாலிக்க வந்தசீலன், பக்தாபிமானி என்று எத்திசையிலும்

புகழ் பரிபூர்ண சிந்தாமணிக்கு இணையான

மாணிக்கமணி மார்பனே! நமது இஷ்டகுல தேவனென்றும்
இவர் இருக்கும் போது கவலை ஏனோ? மன மிரங்கி
நமக்கே இன்று கண் காட்சி தருவார்

பணிவோடு கண்மணியே என்று இவர் பாத கமலத்தை
இடை விடாமல் ஏத்தியிருந்தால் நமக்கு ஏற்ற
வரமும் தருவார் கைவல்ய மூர்த்தி என்றும்

அணிவேலவர்க்கு இளைய மணிதாஸர் ஹிருதயத்தில் அருள்
தத்வ போதனென்றும் ஆதி சதுர் வேதங்கள் ஓதும்
பரஞ்ஜோதியே! எங்கள் அச்சனார் கோவில் அரசே!

## IV முத்தய்யன் பஞ்சகம்

1. மனமே நமக்காக வாய்த்த குலதேவரின் மகிமைதான்
ஆதிசேஷன் வாக்கு முழுதும் அடங்காத வண்மை
தனையான் அற்ப மானிடன் உரைப்பதாமோ?

தனது பொன்னம்பலத்திலங்கும் சந்திரோதயன் த்ரை
லோக்ய ஸம்மோஹனன் தாரணியில் அன்னை
பரிபூரணேசன் பக்தி ஸந்ததமும் செய்திருப்போம்

ஜன ஸமூஹ மஹா மேரு சிகரமணிதீரனே! தீவினைகள்
மாற்றி மேலும் செல்வங்களாம் பக்திமுக்தி கல்வி
ஸந்ததிகளும் தந்து சிந்தைதனில் வீற்றிருப்பாய்,

புனுகு ஜவ்வாது கஸ்தூரி இவையாதி மிருகபூத
கணநாதனென்றும் பொன் சொரியும் முத்துப்
பொதிகைச்சரிவில் உத்திரன் புத்ர ஸந்தான பதியே!

2. தஞ்சமென வந்தவர்க்குத் தருணத்தில் முன் நின்று
தற்காக்குகின்ற கோமான் ஸவாரி வருகின்றதைப்
பார், உலகில் அந்தணர் சதுர் வேத மாரி பொழிய,

வெஞ்சிலை பூதம் எதிரேற்றுக் கட்டியம் கூற,
வேதாளம் குடைப் பிடிக்கப் பிறகினில் ஸுந்தர
யக்ஷியும் முல்லைக்குமாரியும் வெண்சாமரங்கள் வீச,

அஞ்சாத ரண வெறியன் அடப்பம் எடுக்க அசனி
காளாஞ்சி ஏந்த, அமராதியர் புஷ்ப வர்ஷம் சொரிய,
வெடி வினோதங்கள் அகில வாத்தியமும் முழங்க,

கொஞ்சும் கருணாகரன் ஜகன் மோஹனன் பொங்கும்
பாக்யங்கள் தருவார் பொன் சொரியும் முத்துப்
பொதிகைச்சரிவில் உத்திரன் புத்ர ஸந்தான பதியே!

3. ஆதாரமான பொன்னம்பலவனும் பவனியாய்ச் சவாரி

வருகின்றதைப்பார் ஆரியப்பட்டரொடு ரணவீரன்
உடைவாள் கொண்டு அகம்படி பிடித்து வரவும்

பாதாள பூதம் எதிற் சூது சாவலன் பட்டச்சங்கன்
பெயர் பெற்ற நீலகண்டன் இருளன் அண்டையில்
பலவேசன் ஆடலதிபன் தவசி

வாதாடும் வன்னியன் தூதோடு வன்சுடலை மாடனும்
கூடி வருவார் மந்திர மூர்த்தித் தலைவனும்
துயரகற்றி நம்மனதபீஷ்டங்கள் தருவார்

பூதாதிபன் துரியவேத சாஸ்திராகம புராணங்கள்
ஓதும் பொருளாம் பொன் சொரியும் முத்துப்
பொதிகைச்சரிவில் உத்திரன் புத்ர ஸந்தான பதியே!

4. எங்கும் நிறைந்த சிவன் அங்கம் புணர்ந்து மால்
ஈற்றெடுத்து ஆண்ட பெருமான், இக்கலியுகத்தில்
கருணைக்கடல் இவர்க்கு நிகர் இக்குவலயத்தில் ஏது?

துங்கரண சிங்கனெனக் கனகச்சங்கிலித்தோளன்
இருளன் காளி தளவாய் துஷ்டரை விரட்டிடும்
அடியோட்டி கட்டாரி முத்தோடுடைய பட்டராயன்

துங்கன் சுருட்டி முருகன் சரகுருட்டியும் சூழ்ந்து
இலங்கும் பக்தாந்தரங்கனென்றும் துன்பம்
துடைத்து அருள் இன்பம் கொடுத்து உபரி
தொண்டரை ஆட்கொண்டிருப்பார்.

பொங்கு புகழ் பொன்னாட்டுச்சிங்கநகர் தென்னாட்டுப்புலி
ராஜகுல நேசனென்றும் பொன்சொரியும் முத்துப்
பொதிகைச்சரிவில் உத்திரன் புத்ர ஸந்தான பதியே!

5. சீரணி கரந்தையர் சேரிணக்கம் செய்து செல்வம்
கொடுத்ததும் இவரே! செட்டி வேஷம் பூண்டு வந்த
சில துஷ்டரைச் சிக்ஷைகள் செய்ததும் இவரே!

தாரணியில் ஆரணன் காரணத்தால் வந்து தலைச்சுமடு
எடுத்ததும் இவரே! தலை அழுத்தி ஆண்டவன்
சிலை கொண்டடித்துடன் ஸ்தானம் கொடுத்ததுமிவரே!

வாரணம் மீதேறி கோரங்கள் செய்ததில்
மஸ்தகம் உடைத்தது மிவரே! மனத்திரக்கம் கொண்டு
தனது செங்கையினால் மைந்தர் வரம் தருவது மிவரே!

பூரணானந்த ஜய வீர மணிதாஸன் போற்றும்குல
தெய்வம் இவரே! பொன் சொரியும் முத்துப்பொதிகைச்
சரிவில் உத்திரன் புத்ர ஸந்தான பதியே!

## V சபரி பஞ்சகம்

1. கருணாகரக் கடவுள் ஹரினாரிடம் சூர்ப்பகாஸுரன்
தவமிருந்து கைவைத்தபேர் சிரஸு துய்ய
நீறாகவே கருதினான் ஒரு வரத்தை

பரமகுருவாம் ஹரன் அருளினோ மென்றவுடன் அவன்
சிரஸினில் கரம் வைத்திடச் சென்றடுத்தான்;
வள்ளல் ஐவரளியில் ஒளிந்தாரென்று மாலறிந்து ஒடிவந்து

தருண மோஹினியாய் அஸுரனை வெண்ணீறாக்கிச்
சம்புவை அணைந்து பெற்ற ஸந்ததிப் பொருளாகவந்த
என் கண்மணியே! ஸங்கடம் தீரும் ஐயா!

சரணம் அய்யப்பா என்று உருகும் அன்பர்க்கு நீர்
ஸகல ஸௌபாக்கியமும் தந்து உதவும் தவயோக ஸித்தாந்த
சபரி பீடாச்ரம ஸ்தான மெய் ஞான குருவே!

2. பண்டு ஹாலாஸ்யபதி கொண்ட மீனாக்ஷி நிஜபக்தனாம்
உக்ரபாண்டியன் பாலவரம் வேண்டுமென்று
சம்புவைப் பிரார்த்திக்க அமோகவரம் தந்து

பாண்டிய பூபன் அண்டையில் மால்ஹரனும் கூடி
ஒரு மூர்த்தியாகக் குழவி வேஷம் சமைத்து
அவரை மோஹம் செய்து கொஞ்சி அவர் தஞ்சமென்று

தொண்டு செய்கின்ற நாளன்று கள்ளராம்
துஷ்டரை அடக்கி நின்ற தீரனே! தீன பரிபாலனே!
எந்தனுள்ளத் துயரமெல்லாம் தீர்த்து அபீஷ்டமுதவும்

சண்டப் பிரசண்டனே! உத்தண்ட கோதண்ட சர
சஸ்திராதி வேத்யனென்னும் தவயோக ஸித்தாந்த
சபரி பீடாச்ரம ஸ்தான மெய் ஞான குருவே!

3. பச்சை நிறம் மெச்சும் ஒரு நற்பரியின் மீதினில்
ஸவாரி வரும் தீரனென்றும், பந்தளத் தரசர்க்குமுன்
அந்திப் பகல் தரிசனம் பாலிக்கும் ஈசனென்றும்,

கச்சவடம் மெச்சமுறும் கொச்சி தெக்கேத்தனம்
கர்த்தனாம் கேமன் என்றும், கண்டிருக்கின்றதொரு
தொண்டனுக்காகவே காலனை விலங்கு பூட்டி

துச்சணம் செய்யாமல் அக்ஷணம் இருத்தி உன்
சொல் உறுதி கேட்க வைத்தாய்; சொந்தடிமையாம் எங்கள்
துயர்தீர்த்து அநுக்கிரஹம் உறுதியாய்ச் செய்யுமய்யா!

ஸச்சிதானந்த ஜய சங்கரானந்த சிவ மால்
ஸம்மோஹ னாங்கனென்னும் தவயோக ஸித்தாந்த
சபரி பீடாச்ரம ஸ்தான மெய் ஞான குருவே!

4. மாயாநு பூதியாலே யானும் உந்தனை மறந்திருந்தேன்
இதுவரையில் ஐயப்பா, மற்றொருவர் இல்லையே
இந்தத் திரிபுவனத்தில்என்வம்ச வழியான தெய்வம்

நீயாதரிக்கின்றனை என்று இப்பொழுதுதான்
எனதுளம் தெளிவு கண்டு நின் சரண தூளி எந்தன்
சிரஸினில் அணிந்தேன் நிஜபக்த ப்ரீதனே! என்

காயாம் புரித்தலைவனே! நான் கவலை கொண்டு கண்ட

இடமெல்லாம் சுற்றி வந்தேன், கண்காட்சி தந்தெனது
பண்பாடறிந்து உதவும் காருண்ய வாரி நிதியே

தாயான பூரண மஹராஜி குமாரா! நிதி தந்து
அருளும் இது ஸமயம் தவயோக ஸித்தாந்த
சபரிபீடாச்ரம ஸ்தான மெய் ஞான குருவே!

5. மங்களானந்த சரணங்களை வணங்கி அருள்
வாக்கினால் பஞ்சரத்ன மாலைபோல் ஓதினேன்
நிலமேல் ஆதிபதிக் கவிவாணர் தந்த அருளினாலே

என் கருத்துக்கு இரங்கி இந்த ஏழை சொல் செவியுணர்ந்து
இரு விழித்திருக்கருணை பெருக்கி அருள் ரஸமது
தந்த இன்பம் நிறைந்தப் பொருளாய்ப்

பொங்கி இந்த உலகத்தில் நான் எங்கெங்கு சென்றாலும்
உன்புகழ் பாடியே வாழ்வேன் புத்திர மித்திர
களத்திரபக்தி முக்தி ஞான புருஷார்த்தமும் நல்குவீர்

சங்க கோஷபதி நாமங்கள் கணகண வெனஇன்ப
மணிதாஸகுல வாஸனென்னும் தவயோக ஸித்தாந்த
சபரிபீடாச்ரம ஸ்தான மெய் ஞான குருவே!
வீரமணி தாஸரே! சரணமய்யப்பா!

## கிராதாஷ்டகம்

1. கோதண்டம் ஸ சரம் புஜேன புஜகேந்த்ர
ஆபோக பாஸா வஹன்
வாமேனச் சுரிகாம் விபக்ஷ தளனே
பக்ஷேண தக்ஷேண ச
காந்த்யா நிர்ஜித நீரதঃ புரபிதঃ
க்ரீடன் கிராதாக் ருதே
புத்ரோஸ் மாக மனல்ப நிர்மலா யசா
நிர்மாது சர்மாநிசம்

2. ஓம் ப்ரத்யர் திவ்ராத வக்ஷஸ்தல ருதிர
ஸுராபான மத்தம் ப்ருஷட்கம்
சாபே சந்தாய திஷ்டன் ஹ்ருதய சரஸிஜே
மாமகே தாப ஹந்தா
பிஞ்சோத்தம்ஸঃ சரண்யঃ பசுபதி தனயோ
நீரதாப ப்ரஸன்னோ
தேவ: பாயாத் அபாயாச் சபரவபுரஸௌ
ஸாவதானঃ ஸதா மாம்

3. ஆகேடாய வனேசரஸ்ய கிரிஜா
ஆஸக்தஸ்ய சம்போঃ ஸுதঃ
த்ராதும் யோ புவனம் புரா ஸமஜனி
க்யாதঃ கிராதா க்ருதிঃ
கோதண்ட சுரிகாத ரோகனாருசிঃ

பிஞ்சாவதம்ஸோஜ்வல:
ஸத்வம் மாமவ ஸர்வதா ரிபுகணா:
த்ரஸ்தம் தயாவாரிதே

4. யோ மாம் பீடயதி ப்ரஸஹ்ய ஸததம்
தேஹி த்வதேகாச்ரயம்
பித்வா தஸ்ய ரிபோருரச் சுரிகையா
சாதாக்ரயா துர்மதே:
தேவ! த்வத் கரபங்கஜோல் லஸிதயா
ஸ்ரீமன்! கிராதா க்ருதே!
தத்ப்ராணான் விதராந்தகாயச வபு:
காலாரி புத்ராஞ் ஜஸா

5. வித்தோ மர்மஸு துர்வசோபி ரஸதாம்
ஸந்தப்த சல்யோ பமை:
த்ருப்தானாம் த்விஷதாம் அசாந்தமனஸாம்
கின்னோஸ்மி யாவத் ப்ருசம்
தாவத்வம் சுரிகாசராஸன தரச்
சித்தே மம ஆவிர்பவ
ஸ்வாமின்! தேவ! கிராதரூப! சமய
ப்ரத்யர்த்தி வர்கம் க்ஷணாத்

6. ஹர்த்தும் வித்தமதர்மதோ மமரதாச்
சோராச்ச யே துர்ஜனா:
தேஷாம் மர்மஸு தாடயாசு விசிகைஸ்
த்வத் கார்முகான் நிஸ்ருதை:
சாஸ்தாரம் த்விஷதாம் கிராதவபுஷம்
ஸர்வார்த்ததம் த்வாமிருதே!
பச்யாம் யத்ய புராரிபுத்ர! சரணம்
ந அன்யம் ப்ரபன்னோஸ் ம்யஹம்

7. யக்ஷப்ரேத பிசாச பூத நிவஹா
துஃகப்ரதா பீஷணா:
பாதந்தே நரசோணி தோத் ஸுகதியோ
யேமாம் ரிபுப்ரேஷிதா:
சாபஜ்யா நிநதைஸ் த்வமீச! ஸகலான்
ஸம்ஹ்ருத்ய துஷ்ட க்ரஹான்
கௌரி சாத்மஜ! தேவதேச்வர!
கிராதாகார! ஸம்ரக்ஷமாம்!

8. த்ரோக்தும்யே நிரதாஸ்த்வதீய பதபத்மை
காந்த பக்த்யாச்ரயே
மாயாச்சன்ன களேபராஸ்ச விஷதா
நீசைஸ்ஸதா கர்மபி:
வச்ய, ஸ்தம்பன, மாரணாதி அகுசல
ப்ராரம்ப தக்ஷா நரீன்
துஷ்டான் சம்ஹர! தேவ தேவ!
சபராகார! த்ரிலோகேச்வர

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ஓம் | வேதகர்ப்பாய | நம: | | ஓம் | காரணாதீதவிக்ரஹாய | நம: | |
| ஓம் | விராட்ஸுதாய | நம: | | ஓம் | அநீச்வராய | நம: | |
| ஓம் | புவிந்தகன்யாபர்த்ரே | நம: | | ஓம் | அம்ருதாய | நம: | |
| ஓம் | மஹாஸாரஸ்வதப்ரதாய | நம: | (80) | ஓம் | ப்ராணாய | நம: | |
| ஓம் | ஆச்ரிதாகிலதாத்ரே | நம: | | ஓம் | ப்ராணாயாமபராயணாய | நம: | |
| ஓம் | சோரக்னாய | நம: | | ஓம் | விருத்தஹந்த்ரே | நம: | |
| ஓம் | ரோகநாசனாய | நம: | | ஓம் | வீரக்னாய | நம: | |
| ஓம் | அனந்தமூர்த்தியே | நம: | | ஓம் | ரக்தச்யாமகலாய மஹதே | நம: | (100) |
| ஓம் | அனந்தாய | நம: | | ஓம் | ஸுப்ரஹ்மண்யாய | நம: | |
| ஓம் | சிகண்டீக்ருதகேதனாய | நம: | | ஓம் | குஹாய | நம: | |
| ஓம் | டம்பாய | நம: | | ஓம் | குண்யாய | நம: | |
| ஓம் | பரமடம்பாய | நம: | | ஓம் | ப்ரஹ்மண்யாய | நம: | |
| ஓம் | மஹாடம்பாய | நம: | | ஓம் | ப்ராஹ்மணப்ரியாய | நம: | |
| ஓம் | வ்ருஷாகபயே | நம: | (90) | ஓம் | வம்சவ்ருத்திகராய | நம: | |
| ஓம் | அநந்தாய | நம: | | ஓம் | வேதவேத்யாய | நம: | |
| ஓம் | காரணோபாத்ததேஹாய | நம: | | ஓம் | அக்ஷயபலப்ரதாய | நம: | (108) |

வள்ளி தேவஸேனா ஸமேத ஸ்ரீ சுப்ரஹ்மண்யாய நம:
நாநாவித பரிமள பத்ர புஷ்பாணி ஸமர்பயாமி

உ

## ஐயப்பதேவா சரணம் மம தேவ தேவா

கண்ணில் ஒரு துளி நீர் ஐயப்பா என விழுந்து விட்டால் சபரி கீரீசன் அவன் மலை இறங்கி அருள்புரிவான்.

சங்கில் குதித்துவிட ஒரு சமுத்திரம் நினைத்தது போல் என்னுள் உறைவதற்கு ஐயன் ஓடி வருவான். உயிர் சக்திஎல்லாம் ஓரிடம் குவித்து நம்பிக்கையில் உயிரை ஊரவைத்தவர்களே ஐயன் மலைஏற அருள்புரியும் குருஸ்வாமி ஆக முடியும். நமது குருஸ்வாமி அண்ணா அவர்கள் இந்த இலக்கணம் அமையப் பெற்றவராவர். குரு என்றால் ஆசார்யன். அனேக உள்ளங்களை ஐயனிடம் சேர்க்க முற்பட்டவரைதான் ஆசார்யன் என அழைக்க முடியும்.

பரமபக்தி உள்ளவரே குருஸ்வாமி ஆகிறார். பக்தியின் ஸ்வரூபம் விளக்குவது முடியாததாகும். ஊமையின் அனுபவத்தை அவனால் பிறருக்கு விளக்க முடியாதது போல பக்தி ஆகும்.

குருஸ்வாமி அண்ணா அவர்களிடம் ஆசிபெற்ற எண்ணில் அடங்காத அனேக உள்ளங்கள் அனைத்து செல்வங்களையும் பெற்றனர். அதில் நானும் ஒருவன் என்பது அனுபவம் காட்டும் உண்மை. அல்லும் பகலும் தன்னிடம் வந்தவர்களை ஐயப்பனிடம் ரிஜிஸ்தர் செய்வதே இறைபணியாக உள்ளவர் ஸ்ரீ மான் அண்ணா அவர்கள். கீதை பிரிவு பதினெட்டும் ஐயன் சரணத்துக்கு வழிகாட்டி அல்லவா! ஸ்ரீ மான் அண்ணா அவர்களின் மணிவிழா நமது கண்ணில் பதிவாகியது போல் அடுத்தடுத்து விழா நாம் காண ஐயனை வேண்டுவோம். "ஜ" என்ற ஒலி ஓங்கி உலகெல்லாம் ஒலித்து நம்மிடமே சுற்றிவர ஐயன் திருவடியை சரணமடைவோமே

Vaideeka Rathnam

S. Narasimma

Ghanapatigal

# குருபக்தி

*குருப்ரம்மா குரு விஷ்ணு*
*குரு தேவோ மஹேஸ்வரா*
*குரு சாக்ஷாத் ப்ரப்ரம்ம*
*தஸ்மை ஸ்ரீ குருவே நம!*

இன்றைய சமுதாயத்தில் எல்லோரும் வேண்டும் நிம்மதி, அன்பு, இன்றைய உலகத்தில் குறைந்து காணப்படுகின்றன. நிம்மதி எங்கும் இல்லை. நம்முடைய தினசரி தேவைகளை பூர்த்தி செய்ய நாம் ஓடிக்கொண்டே இருக்கின்றோம். நம்முடைய வாழ்வு பூர்த்தியாக வாழ்வதற்கு மனசாந்தி, நிம்மதி, அன்பு மிகவும் அவசியம். இதை அடைவதற்கு நமக்கு குருவின் துணை மிகவும் அவசியம்.

குருநாதர் நாம் கடவுளை வணங்குவதற்கும், காண்பதற்கும் ஒரு வழிகாட்டியாக இருக்கின்றார். எந்த ஒரு மனிதன் மனதில் நிம்மதியும், மனசாந்தியும் உள்ளதோ அவனுடைய வாழ்க்கையும் அமைதியாக இருக்கும். அவன் ஒருபோதும் கோபம், மனவருத்தம் அடைய மாட்டான். ஏன் என்றால் தன்னுடைய குரு எல்லாவித பலனை தனக்கு கொடுப்பார் என்ற திடமான நம்பிக்கை. எந்தக் கஷ்டம் வந்தாலும் குருவின் பக்தியினால் அந்தக் கஷ்டங்களை எதிர் கொண்டு வாழ்வில் வெற்றி பெறுவான் என்பது உறுதி. எந்த ஒருவன் குருவிடம் பக்தியும், சரணாகதியும் அடைகின்றானோ அவனுடைய பழக்க வழக்கங்கள் வித்தியாசமாக இருக்கும். குருவின் ஆசியினால் அவனுடைய முகத்தில் ஜொலிப்பு இருந்து கொண்டே இருக்கும். எந்தக் காரியத்தை செய்தாலும் குருவின் ஆசியினால் அதில் ஒளிர்ப்பு தெரியும். குருவின் பக்தியினால் வாழ்வில் எவ்வளவு பெரிய கஷ்டம் வந்தாலும் மனம் தளரமாட்டான்.

இன்றைய சமுதாயத்தில் மனிதனின் மனம் சதாசர்வகாலம் அலைந்து கொண்டே இருக்கின்றது. நமது மனம் தினசரி வாழ்வில் ஒரு தடவை ஒரு பொருளின், மனிதரின் மேல் ஆசை கொள்ளும். ஏதாவது காரணத்தினால் அதே மனம் அந்த பொருளின் மீது வெறுப்பு கொள்ளும். நமது மனதை அடக்கி வாழ்வதற்கும், நமக்கு கஷ்டத்தை கொடுப்ப வரையும் அன்புடன் நடத்தவும் நமது மனம் திடம்படவேண்டும். நமக்கு குருவின் ஆசியினால் நமது மனம் காலப்போக்கில் திடம் ஆகிவிடும் என்பது உறுதி.

குருசுவாமி அவர்கள் 1993ஆம் ஆண்டு நல்ல சோப்ராவில் ஐயப்பன் பூஜை செய்ய வந்தார். அவரைப் பார்த்தவுடன் எனது மனதில் என்னை அறியாமல் பிரகாசம் தோன்றியது. அப்போதுகூட என்மனதில் சபரி மலைக்குச் சென்று ஐயப்பனை தரிசனம் செய்ய வேண்டும் என்று சிறிதுகூட எண்ணம் தோன்றவில்லை. 1994ஆம் ஆண்டு எனது நண்பரின் மூலம் நாமும் சபரிமலைக்கு செல்ல வேண்டும் என்ற எண்ணம் எழுந்தது. குருசுவாமி ஆசியுடன் முதன் முறையாக 1994 ஆம் ஆண்டு சபரிமலைக்குச் சென்றேன். சபரி மலைக்குச் செல்வதற்கு முன் மனதில் அமைதியின்மையும், கோபமும் இருந்தது. குருசுவாமியின் பூஜையில் கலந்து கொண்ட பிறகு கோபமும், அமைதியின்மையும் அறவே மறந்து விட்டது. குருசுவாமியுடன் சபரிமலைக்குச் செல்ல ஆரம்பித்த பிறகு வாழ்வில் எல்லாவித சௌகரியமும், மனசாந்தியும் நானும், எனது மனைவியும் அடைந்துள்ளோம். குருவின்

ஆசியிருந்தால் நமது வாழ்வு ஒளிமயமாக இருக்கும் என்பது உறுதி. குருசுவாமி எல்லோரையும் அன்பாகவும், சரிசமமாகவும் நடத்துவதைக் கண்டு நானும் என் மனதில் அவரைப்போல் எல்லோரிடமும் பழக வேண்டும் என்று உறுதி பூண்டுள்ளேன்.

எனது குருவின் பாதார விந்தங்களுக்கு நமஸ்காரத்தை தெரிவித்து கொள்கிறேன்.

## ஆன்மீகத்தின் பூரண வடிவான எங்கள் குருசுவாமி

ஒருவருடைய அகத்திலிருக்கும் நற்பண்புகள் அனைத்தும் ஒன்று திரண்டு அவருடைய ஜீவ சொருபம் முழுவதன் வாயிலாகவும் புறப்பண்பாடாக மலரும் நிலை கொண்டவர் எங்கள் குருசுவாமி. எங்கள் குருசுவாமியிடம் பலன் எதிர்பாராத தூய அன்பும், பேரானந்தமும் ஒருங்கிணைந்து ஒளிர்கின்றது. அவரது திருவடிகளை சரணடைந்து விட்டால் ஆத்மானுபதி என்னும் இலட்சியம் கைகூடுவது திண்ணம். அவர் பூரண சத்குருவாக விளங்குகிறார். தன்னுடைய சிஷ்யர்கள் ஒழுக்கத்தையும் பண்படுத்தி வருகிறார். சிஷ்யர்கள் பண்படுவதற்குரிய பக்குவத்தை பெறும் வரை அமைதியாக காத்திருக்கிறார். அதுவரை அவர்கள் செய்யும் பிழைகளை மன்னித்து, அவர்களை தனது சுயநலமற்ற அன்பால் நீராட்டுகிறார்.

குருசுவாமி சிஷ்யரிடம் அன்பை பொழிகிறார். அவர் தனது அளவற்ற அன்பின் மூலமாக சிஷ்யரை தன்னுடன் பிணைத்து கொள்கின்றார். குருசுவாமி நிதானமாக அன்பும், அதே நேரம் கண்டிப்பும் நிறைந்த உபதேசங்களின் வாயிலாக தன்னுடைய சிஷ்யருக்கு புதிய வடிவத்தை அளிக்க ஆரம்பிக்கின்றார். குருசுவாமி எல்லா சிஷ்யரையும் தமது குழந்தையாக பாவித்து செலுத்தும் அன்பில் ஒருபோதும் மாற்றம் ஏற்படுவதில்லை. அவர் எப்போதும் தனது சிஷ்யர்களை மாசில்லா மாமணியாக மாற்ற வேண்டும் என்று எண்ணுகின்றார்.

குருசுவாமி தன்னுடைய எல்லா சிஷ்யர்களுக்கும் வாழ்வின் நோக்கத்தையும், இறைவன் நமக்குள் இருக்கின்றான் என்றும், தியானம் செய்யும் முறையும், வாழ்க்கையில் நம்பிக்கை ஏற்படுவதற்கும், அகங்காரத்தை நீக்கவும், நிலையாமை அகற்றவும் ஒரு தூண்டுகோலாக இருக்கின்றார் என்பதை தெரிவித்துக் கொண்டு அவருடைய பாதார விந்தங்களுக்கு என்னுடைய நமஸ்காரத்தை தெரிவித்துக் கொள்கின்றேன்.

(J. ChandraSekar)

## சுவாமி சரணம்

என் குருநாதனே சரணம் குருவின் பாதாரவிந்தங்களே சரணம்

கண்கண்ட தெய்வம் கலியுகவரதன் ஸ்ரீ ஐயப்பனை சபரிமலை சென்று தரிசனம் செய்வதற்கு குருஸ்வாமியின் ஆசியும் வழிநடத்தலும் அவசியம் என்பது யாவரும் அறிந்த உண்மை. பொருள் தேடிச் சென்று கொண்டிருக்கும் இந்தக் கலியுகத்தில் பொதுவாக மலைக்கு அழைத்துச் செல்லும் குருஸ்வாமியும், மாலை போட்டுச் செல்லும் பக்தனும் இந்த குருசிஷ்ய உணர்வை, பாவனையை மாலை போட்டு விரதமிருக்கும் காலத்தில் மட்டுமே அனுஷ்டானம் செய்கின்றனர். மற்ற சமயங்களில் இந்த குரு சிஷ்ய உறவை அனுஷ்டிப்பதில்லை. ஆனால் எங்கள் மணி குருஸ்வாமி மாலை போட்டுக் கொண்டிருக்கும்

விரதகாலத்தில் மட்டுமல்லாது மற்ற நாட்களிலும் தனது சிஷ்யர்களின் நல்வாழ்வுக்குத் தேவையான வழிமுறைகளை எடுத்துக்கூறி, அவர்களது இன்பதுன்பங்களில் தானும் பங்கெடுத்துக் கொண்டு வழிநடத்திச் செல்கிறார். இந்த குணாதிசயத்தினால் அவர் எங்களுக்கு குருநாதனும் ஆகிறார்.

என் குருநாதர் ஒரு பெரிய நிறுவனத்தில் பெரிய பதவியில் இருந்தாலும் அவருடைய எளிமையும் அவர் எங்கள் யாவரையும் அன்புடன் அரவணைத்து எங்கள் நல்வாழ்வே தன் வாழ்வாகக் கொண்டிருக்கும் குறிக்கோளும் எழுத்தால் புரிய வைக்க இயலாது. அவர் சிஷ்யர்களில் நானும் ஒருவன் என்று கூறிக்கொள்வதில் ஒருபுறம் நான் பெருமை கொண்டாலும் இது எனது பூர்வ ஜென்ம புண்ணியமேயன்றி வேறெதுவுமில்லை என்பதில் ஐயமில்லை. என் குருநாதருடன் எனக்கு ஏற்பட்ட பல அனுபவங்களில் ஒரு சிலவற்றை உங்களுடன் பகிர்ந்து கொள்ள விழைகிறேன்.

1992ஆம் வருடம் அக்டோபர் மாதத்தில் ஒரு நாள் முதன் முறையாக என் அலுவலக நண்பர் ஒருவருடன் என் குருநாதரின் இல்லத்திற்குச் சென்றேன். ஒரு இரண்டு மணிநேரம் அவருடன் உரையாடிக் கொண்டிருக்கும் போது அவர் பொது வாழ்க்கை சம்பவங்கள் சிலவற்றை எடுத்துக்காட்டாகக் கூறி ஒரு பாதகமான விஷயத்தை தமக்கு சாதகமாக மாற்றிக் கொள்வது எப்படி என்பதையும் விவரித்துச் சொன்னார். பொதுவாக நம் எல்லோருடைய வாழ்க்கையிலும் ஏற்படும் நிகழ்வுகளை அவர் நோக்கும் விதமும் அதற்கான காரண காரியங்களை அவர் அலசுகின்ற விதமும் அவரை சாதாரண மனிதரிலிருந்து வேறுபடுத்தி காட்டியது. இப்பேற்பட்ட அரிய மனிதரை சந்திக்கும் பாக்கியம் கிடைக்கப் பெற்றதற்கு அந்தக் கண்கண்ட தெய்வம் ஐயப்பனுக்கு தலை வணங்கினேன். அது முதலாக என் குருநாதரின் வழிகாட்டுதலால் என் வாழ்க்கையிலும், ஒரு விஷயத்தை அணுகும் முறையிலும் நல்ல முன்னேற்றம் அடைந்து வருகிறேன்.

1994ஆம் வருடம் டிசம்பரில் என்னை பம்பாயிலிருந்து சென்னைக்கு இடமாற்றம் செய்து சென்னை அலுவலகத்தின் கீழ் கேரளாவில் கொச்சினிலிருந்த கிளையில் போஸ்டிங் கொடுத்தனர். மேலும் அங்கு குறைந்தபட்சம் இரண்டு வருடங்கள் இருந்த பிறகுதான் சென்னைக்கு போஸ்டிங் கிடைக்கும் என்று என் அலுவலகத்தில் கண்டிப்பாக சொல்லி விட்டனர். என் மனைவியும் வேலைக்கு செல்லும் நிலையில் என் குடும்பத்தினர் சென்னையிலும் நான் கொச்சினிலுமாக பிரிந்து வாழ்ந்து வந்தோம். என் குருநாதர் என்னைத் தேற்றி எப்படியும் ஒரு வருட முடிவுக்குள் உனக்கு இடமாற்றம் கிடைத்துவிடும் என்றும் மேலும் நான் சென்னையில் வீடும் கட்டுவேன் என்றும் கண்டிப்பாக சொன்னார். அதே போல் நான் அக்டோபர் 95ல் சென்னைக்கு இடமாற்றம் கிடைத்து வந்ததுமல்லாமல் நவம்பரில் வீடு கட்டுவதற்கான திட்டத்திலும் இறங்கிவிட்டேன்.

இது போன்றே 1998ஆம் வருடம் ஜனவரி மாதத்தில் இருமுடி பூஜை சமயத்தில் என் குருநாதர் எனக்கு அந்த வருடம் பதவி உயர்வு கிடைக்கும் என்று அருளாசி வழங்கினார். அது சமயம் நான் பதவி உயர்வுக்கான லிஸ்டில் 68ஆம் இடத்திலிருந்தேன். இதற்கு முந்தைய வருடங்களில் வருடத்திற்கு 30முதல் 35பேருக்கு மட்டுமே பதவி உயர்வு கிடைத்துக் கொண்டிருந்த நிலையில் அவரது சொல் என்னை பிரமிக்க வைத்தது.

ஆனால் அவருடைய அருளாசியின்படி மார்ச் 98இல் 34 பேருக்கும் ஆகஸ்டு 98இல் 36பேருக்குமான பதவி உயர்வு ஆணையில் என் பெயரும் இடம் பெற்று இருந்தது. இவ்வாறு எனக்கு பதவி உயர்வு பல மாதங்கள் முன்னமேயே கிடைத்தது அவரது அருளாசியினால்தானேயொழிய வேறொன்றுமில்லை.

இவ்வாறான பல சம்பவங்கள் என் வாழ்க்கையில் மட்டுமல்லாமல் என் குருநாதரின் சிஷ்யர்கள் ஒவ்வொருவருக்கும் நடந்து கொண்டிருக்கிறது. அவர் எங்கள் யாவருடைய நல்வாழ்வையுமே தன் குறிக்கோளாகக் கொண்டிருக்கும் நடமாடும் தெய்வம் என்று கூறினால் அது எவ்விதத்திலும் மிகையாகாது.

என் குருநாதர் ஐயப்பனுக்கு பூஜை செய்யும் அழகை விவரிக்க எனக்கு வார்த்தை களுமில்லை அதற்கான யோக்யதாம்சமுமில்லை. அவர் பகவானுக்குச் செய்யும் அலங்காரத் திலும் பூஜையிலும் எளிமையிருக்குமே அல்லாது பகட்டு இருக்காது. அவர் பூஜிக்கும் ஒவ்வொரு மலரையும் அந்த ஐயப்பன் நேரில் நின்று வாங்கிக் கொள்வது போலிருக்கும். ஐயப்பனது அந்த ஆனந்தமான புன்சிரிப்பை பூஜையில் கலந்து கொள்ளும் ஒவ்வொரு அன்பரும் ஆழ்ந்து அனுபவித்து வருகிறோம். அவர் நடத்தும் பூஜையில் கலந்து கொள்கின்ற ஒவ்வொரு பக்தரும் கட்டுக்கோப்பாக அமைதியாக இருந்து அனுபவிப்பதே மிகவும் பரவச மடைய வைக்கும் ஒரு தோரணையாகும். இந்த வார்த்தைகளை அவரது பூஜையை நேரில் கண்டு உணரும் பக்தர்கள் யாருமே மறுக்கமாட்டார்கள்.

உதாரணத்திற்கு ஒரு நிகழ்வை சொல்லிக் கொள்ள விழைகிறேன். சென்னையில் எனது ஊரில் பலரையும் பல வருடங்களாக மிகவும் பக்திசிரத்தையுடன் சபரி மலை யாத்திரைக்கு அழைத்துச் செல்கின்ற ஒரு பெரிய குருஸ்வாமி ஸ்தானத்திலுள்ளவர் எங்கள் குருநாதர் நடத்திய இருமுடி பூஜையில் ஒரு வருடம் கலந்து கொண்டார். அவ்வருடம் லட்சார்ச்சனை பூஜையும் நடந்தது. அந்த லட்சார்ச்சனையில் கலந்து கொண்ட ஒவ்வொரு அன்பரையும் என்குருநாதர் கருத்துடன் ஈடுபட வைத்த அமெரிக்கையைப் பார்த்து மிகவும் ஆச்சரியப்பட்டுப் போனார். அத்துடனில்லாது இது போன்ற கட்டுக் கோப்பான பூஜையை தான் முதன் முறையாகப் பார்த்து பரவசப்பட்டதை, ஆனந்தித்ததை என் குருநாதரிடம் மனம் திறந்து கூறவும் செய்தார். இது போன்ற கட்டுப்பாடு என் குருநாதரின் அன்பான அதே சமயம் கண்டிப்பான குணத்தினாலும், பூஜையில் கடைபிடிக்கும் ஒழுங்கு முறையினாலும் பக்தர்களின் ஆத்மார்த்தமான ஈடுபாட்டினாலும்தான் சாத்தியமாகிறது. இது போன்ற பூஜையை என் குருநாதர் மாலைதரிக்கும் விரத காலத்தில் மட்டுமல்லாது மற்ற நாட்களிலும் நடத்தி வருகிறார் என்பதையும் இங்கு அவசியம் குறிப்பிட வேண்டும். எங்கள் யாவருடைய நலனையும் மனதில் கொண்டு அவர் ஒவ்வொரு வருடமும் ஆடி மாதத்தில் ஐயப்பனுக்கும் அம்பாளுக்கும் லட்சார்ச்சனையை ஒரு யாகமாக நடத்தி வருவதையும் வணக்கத்துடன் கூறிக் கொள்ள விழைகிறேன்.

சமஸ்தாபராத ரட்சகனே சரணம் ஐயப்பா சத்குரு நாதரே சரணம் ஐயப்பா
சர்வமங்களநாயகனே சரணம் ஐயப்பா

குருவின் பாதாரவிந்தங்களுக்கு நமஸ்காரத்துடன்
R. Venkatramanan

# சுவாமியே சரணம் ஐயப்பா

## "குருவே சரணம் ஐயப்பா"

எங்களுக்கு எல்லாம் ஆதாரமான எங்கள் குருஸ்வாமியுடன் எனக்கு ஏற்பட்ட தொடர்பும், அதன் பிறகு என் வாழ்க்கையில் எனக்கு ஏற்பட்ட அனுபவங்கள் பற்றி என் மனதில் உள்ளவற்றை பகிர்ந்து கொள்ளும் ஆசையில் எழுதியுள்ளேன்.

1987ம் ஆண்டு செப்டம்பர் மாதம் (புரட்டாசி) ஆண்டுதோறும் எங்கள் குருஸ்வாமியின் முயற்சியால் (இன்றுவரை நடந்துவரும்) புரட்டாசி மாதம் ஒவ்வொரு சனிக்கிழமை அன்று நடந்துவரும் திவ்யநாம சங்கீர்த்தன மகாயக்ஞத்தில் அந்த ஆண்டு (1987) நடந்த 3வது சனிக்கிழமை அன்று பகவான் ஸ்ரீ பாலாஜி சன்னதியில் குருஸ்வாமியின் அறிமுகம் கிடைத்தது. அவரை சந்தித்த மாத்திரத்தில் அவருடைய அந்த சாந்தமான பாசம் கலந்த பார்வையும் அவர் அன்புடன் பேசியதும் ஏதோ பலஜென்மங்களாக அவருடன் ஒன்றாக இருந்த மனோபாவம் என் மனதில் ஏற்பட்டது. அதுவும் அந்த அறிமுகம் பகவான் ஸ்ரீபாலாஜியின் சன்னதியில் நடந்தது மிகவும் மனதில் மறக்கமுடியாத ஒரு சம்பவம் ஆகும். அதன் பிறகு மறுநாள் (ஞாயிறு) டோம்பிவிலியில் என் இல்லத்திற்கு வந்து அன்று முழுவதும் எங்களுடன் தங்கியதும் என் குடும்பத்தினருக்கும் அவர் அனுகிரஹம் கிடைத்ததும் என்னால் இன்றும் மறக்கமுடியாது. அன்றுமுதல் அவர் எங்கள் குடும்பத்திற்கு குருவாகவும், அண்ணா ஆகவும் அவரின் துணைவியார் எங்களுக்கு மன்னியாகவும் எங்கள் மனதில் ஏற்றுக்கொண்டு அதை உள்ளத்தாலும், நடைமுறையிலும் நாங்கள் கடைப் பிடித்து வருகின்றோம். அன்று எங்கள் குடும்பத்தில் நாங்களே எடுத்துக்கொண்ட சங்கல்ப்பம் இன்றுவரை அவர் வகுத்து தந்த முறையின்படி நடந்து சிறிதுசிறிதாக மனபக்குவம் அடைந்து நாங்கள் வாழ்க்கையில் நல்ல முன்னேற்றம் அடைந்துள்ளோம். அவர் அனுகிரஹத்துடன் அவருடன் இதுநாள் வரை தொடர்ந்து 17ஆண்டுகளாக மலைக்கு சென்று ஐயப்பனை தரிசிக்கும் பாக்கியம் எனக்கு கிடைத்தது ஏதோ நாங்கள் கடந்த ஜென்மத்தில் செய்த புண்ணியம்தான்.

மேலும் அவருடைய உயர்வான சிந்தனை அதாவது நாம் எப்பொழுதும் நடைமுறையில் Positive ஆகவே நினைக்க வேண்டும் என்ற அவருடைய எண்ணத்திற்கு ஒரு சிறிய ஆனால் என்னால் மறக்கமுடியாத அனுபவத்தை எழுதுகின்றேன்.

ஒரு நாள் டோம்பிவிலியில் இருந்த எனது நண்பர், ஸ்ரீ பாலாஜி கோவிலுக்குச் சென்று பகவானுக்கு ஒரு துளசியினால் ஆன பெரிய மாலை சாத்துவதற்காக மாலை வாங்கசென்றவர், மாலையின் விலையை கேட்டு மாலை வாங்க மனமில்லாமல் தரிசனம் செய்து திரும்பி வந்து அலுவலகம் சென்றுவிட்டார். அன்று மாலை அவரின் துணைவியார் கடைவீதிக்கு செல்லும் சமயத்தில் வீதியில் ஒரு கல் இடறி கால்விரலில் முறிவு ஏற்பட்டது. பிறகு உடன் வைத்தியரிடம் சென்று காலில் கட்டுகட்டி, மருந்து மாத்திரைகள் வாங்கி வீடு வந்து சேர்ந்தனர். அன்று மாலை வீடுதிரும்பிய எனது நண்பர் காலையில் பகவானுக்கு மாலை வாங்கி சார்த்தாத சம்பவத்தை மனதிற்கொண்டு தான் அன்று காலை மாலை வாங்காமல் சென்றதால் இப்படி ஒரு சம்பவமும், சிலவும் நடந்ததாக எல்லோரிடமும் கூறிவந்தார். அன்று இரவு எங்கள் குருசுவாமி டோம்பிவிலிக்கு வந்த பொழுதும் மேற்படி வர்ணனை செய்தார். அதற்கு எங்கள் குருசுவாமி கூறிய விளக்கம் பற்றி இன்று

நினைத்தாலும் என் அங்கமெல்லாம் சிலிர்க்கின்றது. அவர் கூறிய விளக்கமாவது. "உனக்கு மாலையில் உன் குடும்பத்தில் இப்படி ஒரு சம்பவம் நிகழஇருப்பதால் அதற்கு தேவையான பணம் உன்கைவசம் இருக்கட்டும் என்றும் தனக்கு (பகவானுக்கு) மாலை சாற்றுவதற்கு நிறைய பக்தர்கள் இருக்கிறார்கள் அதனால்தான் நீ மாலை வாங்காமல் தரிசனம் மட்டும் செய்து போகுமாறு ஆண்டவனின் சித்தம்" என்று சொன்னார். எவ்வளவு பெரிய சிந்திக்கும் உள்ளம்! இப்படி ஒரு சிந்தனை எந்த ஒரு சாமான்ய மனத்திற்கும் தோன்றவே தோன்றாது. அந்த நிகழ்வு நம் வாழ்வில் நாம் எப்படி சிந்திக்கவேண்டும் என்பதற்கு ஒரு சிறந்த முன் உதாரணமாக என் மனதில் ஏற்பட்டது.

மேலும் நம் வாழ்வில் செய்யும் ஒவ்வொரு செயலிலும் எப்படி ஒரு நுண்ணறிவு (Perfection) இருக்க வேண்டும் என்பது பற்றி ஒன்றல்ல பலவித நல்ல முன் உதாரணத்துடன் பரிவுடனும், பாசத்துடனும் அன்புகலந்த கண்டிப்புடனும் விளக்கியுள்ளார்.

அவர் செய்யும் பூஜையின் தொடக்கத்தில் அவர் ஸ்ரீ ஐயப்பனுக்கு செய்கின்ற அலங்காரம் பற்றி கூறவேண்டும் என்றால், ஒரு குழந்தைக்கு அலங்கரித்து மனம் மகிழ்ச்சி அடையும் தாய்போல் காண்பவர்களை பரவசம் அடையச் செய்யும். மேலும் பூஜையின் தொடக்கத்தில் பக்தர்கள் செய்யும் பாத பூஜையை பார்க்கும் பொழுது அந்த திருப்பாதங் களை உறுதியாக பற்றிக் கொண்டு அதில் சரணாகதி அடையத் தோன்றும். பிறகு அவர் பூஜை செய்யும்பொழுது அவர் வதனத்தில் தோன்றும் தெய்வீக தன்மையை ஒரு முறை பார்த்தாலே நம் வாழ்வில் அவருடைய அருள்கிடைத்து நாம் நினைக்கும் காரியங்கள் எல்லாம் தங்குதடையின்றி நடக்கின்றதற்கு எங்கள் ஐயப்பன் குழுவில் எங்கள் ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் நடக்கும் சம்பவமே ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும் அவர் சொற்படி, அவர் எந்த ஒரு எங்கள் ஐயப்பன் பக்தரின் வீட்டில் பூஜை செய்தாலும் அது எங்கள் எல்லா பக்தர்களின் வீட்டிலும் அவர் ஸ்தாபனம் செய்து வைத்துள்ள ஸ்ரீ ஐயப்பனுக்கும் சேருவதாக அவர் சொல்லும் உபமானத்திற்கு அவருடைய உயர்ந்த உள்ளம் ஒரு எடுத்துக்காட்டாக விளங்கும்.

இவை எல்லாவற்றிற்கும் அவருக்கு பக்க பலமாகவும், ஆதாரமாகவும், அவரை காணவும், அவரின் ஆசியும் வேண்டி வருபவர்களுக்கு உபசரிக்கும் பண்பில் கொஞ்சமும் மனம் கோணாமல் சிரித்த முகத்துடன் வந்தவர்களை உபசரிக்கும் எங்கள் மன்னியை காணும் பொழுது மாதா ஸ்ரீ அன்ன பூர்ணியை நேரில் தரிசனம் செய்வதாகவே எண்ணத்தோன்றும், மன்னியின் உபசரிப்பும், எங்களிடம் காட்டும் பரிவும், பாசமும் மன்னியை எங்கள் மனதில் தாயின் ஸ்தானத்திற்கு உயர்த்தியுள்ளது. அவருடைய குடும்பத்தில் உள்ள அனைவரும் அவருடைய உயர்ந்த உள்ளத்தை பிரதிபலிப்பதுபோல் மிகவும் அன்புடனும், பாசத்துடனும் சிறந்த மனதுடயவர்கள். எந்த பக்தரின் வீட்டில் ஒரு விசேஷம் நடந்தாலும் அவர் குடும்பத்துடன் கலந்து கொண்டு முன்நின்று நடத்தி தருவதில் எங்களுக்கு உண்டாகும் திருப்திக்கும் மகிழ்ச்சிக்கும் எழுதுவதற்கு வார்த்தைகள் கிடையாது.

இப்படிபட்ட உயர்ந்த தெளிவான சிந்தனையும் பரிவுடன் பாசமும் காட்டி எங்கள் எல்லோரையும் வழிநடத்தும் அவர்கள், பார்வதியும் ஈசனும் போன்று. எங்களுக்கு நல்வழி காட்டி எங்களை பக்திமார்க்கத்தில் ஈடுபட செய்தமைக்கு அவர்கள் பல்லாண்டு வாழ

வேண்டும் என்று உளமார ஸ்ரீ ஐயப்பனை பிரார்த்தனை செய்கின்றோம்.

பணிவுடன்

"குருவே சரணம் ஐயப்பா" ராஜன்

குரு கடாட்சம் பரிபூர்ணம்

குரு சரண மகிமை

வயதில், அனுபவத்தில் மிகவும் சிறியவனாக இருப்பினும் என் குருநாதரின் ஆசியினால், அவர் அருள் இருப்பதினால் நான் மிகுந்த பாக்கிய சாலி ஆகிறேன். என்னுள் பல மாற்றங்களை ஏற்படுத்தியவர் என்னுடைய குருநாதர். அவரைப் பற்றி எழுதுவதற்கு எனக்கு யோக்கியதையும், வயதும் இல்லை. எனினும் என்னுடைய உள்ளார்ந்த அனுபவங்களை சற்றே பகிர்ந்து கொள்ள ஆசைப்படுகின்றேன்.

எனது குருநாதரை கண்ட நாள் முதலே, என்வாழ்வில் ஏற்றத்தையே பார்த்துக் கொண்டிருக்கிறேன். எனது தாய் தந்தையர் வழியில் நான் சற்றே நல்ல மனநிலையைக் கொண்டிருந்தாலும், நல்ல குணங்களைக் கொண்டிருந்தாலும், எனக்கு, என் வாழ்வில் சரியான தருணத்தில் என்னை நல்வழிபடுத்திய என் குருநாதருக்கு நான் என்றென்றும் கடமைப் பட்டுள்ளேன். எனது தன்னம்பிக்கைக்கு வித்திட்டவர், வளர்த்தவர் எனது குருநாதர்.

சிறு வயதுமுதலே நான் சற்றே கோபக்காரனாகவும், பிடிவாதம் கொண்டவனாகவும் இருந்து வந்தேன். என் குருநாதரை பார்த்த நாள் முதலே, என்னுள் பல மாற்றங்களை நான் பரிபூர்ணமாக உணர்ந்தேன். அவரை பார்க்கும் ஒவ்வொரு தருணத்திலும், எனக்கு பல விஷயங்கள், வாழ்க்கையில் பின்பற்றக் கூடிய பல நல்லதொரு கோட்பாடுகள் அறியப் பெற்றேன். என்னுடைய சபரி யாத்திரை முதல்முறை குருநாதருடன் 1992ஆம் வருடம் டிசம்பர் மாதம் அமைந்தது. அந்த முதல் யாத்திரையிலேயே எனக்கு பொறுமையாக இருக்க கற்றுக்கொடுத்தார். அதனால்தான், என்னாலும் சுமார் 9 மணிநேரம் சபரிமலை தரிசனத்திற்காக வரிசையில் காத்திருக்க முடிந்தது. என் சுபாவத்தை நினைத்துப் பார்த்தால் எனக்கே ஆச்சர்யமாக இருந்தது.

மற்றவர்களைப் போல் அல்லாமல், எனக்கு மிகுந்த பாக்கியம் என்னவென்றால், நான் என்னுடைய குருநாதருடனும், அவர் குடும்பத்தினருடனும் சுமார் மூன்று வருடங்கள் சேர்ந்து இருந்தேன். அதனால், எனக்கு தினந்தோறும் புதியதொரு விஷயங்கள், ஞானங்கள் கிடைக்கப்பெற்றேன். செப்டம்பர் மாதம் 2001ம் வருடம் எனக்கு நல்லதொரு வேலையில் சேரும் வாய்ப்புப் பெற்றேன். செப்டம்பர் 22ம் தேதி நான்வேலை செய்து வந்த அலுவலகத்தில் இருந்து என்னை விடுவித்தார்கள். அக்டோபர் 1ம் தேதி சேர்ந்தாலே போதுமானது. அதனால் நான் ஒரு வாரம் 23ம் தேதி முதல் 30ம் தேதிவரை சென்னை சென்று வர யோசித்துக் கொண்டிருந்தேன். என் எண்ணத்தை என் குருநாதரிடம் தெரியப் படுத்தினேன். அவர், அதற்காக உடனடியாக பதில் ஏதும் சொல்லவில்லை. பிறகு, அவரே அவருக்குரிய நடைமுறையில், எனக்கு உடனடியாக வேலையில் சேருவதால் கிடைக்கும் பலன்களையும், இந்த வயதில் (அப்போது எனக்கு 28 வயது) வேலைதான் முக்கியம்

என்று என்னை வழிப்படுத்தினார். அவர் சொன்ன காரணங்களையும், நடைமுறையையும் நினைத்துப் பார்த்து, அவரது அறிவுரைப்படி நான் அந்த புதிய வேலையில் செப்டம்பர் 24ம் தேதி 2001ல் சேர்ந்தேன். முதலில் இந்த செயல் எனக்கு மிகவும் சாதாரணமாகத்தான் தெரிந்தது. செப்டம்பர் 25ம் தேதி, நான் வேலையில் சேர்ந்த அலுவலகத்தின் தலைமை செயலகத்தில் (From London) இருந்து ஒரு FAX வந்தது. அதன் சாராம்சம் என்னவென்றால் "STOP ALL NEW RECRUITMENTS AND CANCEL ALL NEW RECRUITMENTS WITH EFFECT FROM 25.09.2001". THE REASON IS WTC ATTACK ON 11.09.01 HAS AFFECTED BUSINESS OF JOHN CRANE GROUP IN UK/USA & EUROPE.

நான் வேலையில் சேர்ந்த புதிய அலுவலகத்தின் (John Crane) முதன் மேலாளர் (M.D) எங்களுக்கு (மும்பை கிளைக்கு) அந்த FAX தகவலை தெரியப்படுத்தினார். BEING A MNC, THEY CAN ALWAYS TAKE A SPOT DECISION. SUPPOSE, நான் முதலில் நினைத்திருந்த படி சென்னை சென்று வந்திருந்தால் என்னுடைய Appointment letter cancel ஆகியிருக்கும். இப்போது நினைத்தாலும், நான் குருசுவாமி சொல்படி சரியாக நடந்ததினால்தான் இன்றும் நான் அதே அலுவலகத்தில் பணி புரிந்து கொண்டிருக்கிறேன் என்பது எனக்கு மெய்சிலிர்க்கிறது.

I have observed that whenever I am in confused stage, I always get very right Direction from my Guruswamy which obviosly lead me in Right Prosperity in my Life & career. THERE IS NO DOUBT. எனது குருநாதருடைய தகுதிக்கும், அந்தஸ்திற்கும் என்னைப் போன்ற சாதாரண பிரஜையை அவர் கண்டு கொள்ள வேண்டிய அவசியமே இல்லை. எனினும் அவர் என்னையும் அவருடைய மற்றொரு மகனாக நினைத்து என்னை நல்வழிப்படுத்துகிறார் என்பதை நினைக்கும்போது எனக்கு எனது எண்ணங்களை வெளிப்படுத்த சரியான வார்த்தைகளே கிடைக்கவில்லை. THOUGH I AM NOT DESERVED, I AM LUCKY TO GET BLESSINGS FROM MY GURUSWAMY.

டிசம்பர் மாதம் 2003ம் வருடம், எனது சொந்த ஊரில் (பெருங்களத்தூரில்) எனது அக்கா வீட்டில் குருசுவாமியின் அருளுடன் சபரியாத்திரையின் போது பூஜை நடைபெற ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. நம் வீட்டு பூஜையாதலால் செலவு செய்ய வேண்டியது நம் கடமை அல்லவா! எனினும், எனக்கு மனதில் சற்றே சஞ்சலம், செலவு செய்யத்தான் வேண்டுமா என்று. அதனால் நான் எனது தமையனாரிடம் செலவில் சிறு பகுதியை ஏற்றுக் கொள்கிறேன் என்று ஒருபோதும் கூறவில்லை. எனக்கு பணம் கையில் இருந்தும் செலவு செய்ய மனதும் இல்லை. (அதுவும் நம்வீட்டு ஐயப்ப பூஜைக்காக).

அந்த சமயத்தில் எனது குருநாதரின் ஆன்மிக உரை நாங்கள் அனைவரும் கேட்கப் பெற்றோம்.

அவரது உரையில் சிறுபகுதி:

இருப்பவன் இல்லை இல்லை என்று சொன்னால்
இருப்பது இல்லாமல் போய்விடும்
இல்லாதவன் இருக்கு இருக்கு என்று சொன்னால்
இருப்பதும் இல்லாமல் போய்விடும்

இருப்பதை மதித்து வாழ்ந்தால், வாழ்வே மதிப்பாகிவிடும்.

இந்த எளிய உரையைக் கேட்டவுடன்தான் எனக்கு நான் செய்ய இருந்த தவறும், என்னுடைய குறுகிய மனப்பான்மையும் உறைத்தது. உடனேயே, அடுத்த நாளிலேயே எனது வங்கிக்கணக்கில் இருந்து ஒரு குறிப்பிட்ட தொகையை எடுத்து எனது தமையனாரிடம் பெருங்களத்தூர் ஐயப்ப பூஜைக்காக ஒப்படைத்தேன். சொன்னால் நம்ப மாட்டீர்கள், வருட சம்பள ஏற்றம் வராது என்று நினைத்திருந்தோம் (ஆகஸ்ட் மாதத்தில் வர வேண்டியது). டிசம்பர் கடைசி வாரத்தில், ஜனவரி மாத முதல் தேதியில் எனது அலுவலகத்தில் சம்பள ஏற்றம் சுமார் 15% Increment கிடைத்தது. THIS IS ONE OF THE CLASSIC EXAMPLES I HAVE EXPERIENCED WITH MY GURUSWAMY'S GUIDANCES.

நோயாளிக்கு மருந்து கசப்பாக இருந்தாலும் அவனது உடல்நிலைக்கு மருந்துதான் சரியானது. ஒருசில சமயங்களில் எனது குருநாதரின் அறிவுரைகள் எனக்கு கசப்பாக தோன்றியிருக்கிறது. ஆனால் அவர் சொன்ன முறைபடி அந்த செயலை செய்தால் பலன் சரியாக அமைந்திருப்பதை பலமுறை கண்கூடாக அனுபவித்திருக்கிறேன்.

ஒரு சில சமயங்களில் அவர் சொல்படி நடக்காமல் போனதன் பலனையும் அனுபவித்திருக்கிறேன்.

நான் எப்போதும் நினைத்துக் கொள்ளும் எனது குருநாதரின் அறிவுரைகளில் ஒன்று: THINK POSITIVE. CONVERT NEGATIVE INTO POSITIVE. DO WITH INTEREST AND TO PERFECTION.

ஒரு சிலர்தலைக்கு மேலே வெள்ளம் போய்விட்டது சாண் போனால் என்ன? முழம் போனால் என்ன? என்பர்.

இதனை எப்போதும் Negative ஆகத்தான் ஏற்றுக் கொள்ளத் தோன்றும். ஆனால் இதனை எனது குருநாதர் "தலைக்கு மேலே வெள்ளம் போனாலும், சாண் அளவு மேலே போனால் நமது முழங்கை அளவை நீர்மட்டத்தின் மேலே ஆட்டி, அசைத்து கரையில் இருப்போரின் கவனத்தை திருப்பி நாம் தப்பிக்க பலவாய்ப்புகள் உள்ளன. தலைக்கு மேலே முழம் அளவு வெள்ளம் போனால்தான் நமக்கு பிழைக்கும் வாய்ப்பு குறைவு" என்று கூறி NEGATIVE ஐயும் POSITIVE ஆக நினைக்க கற்றுக் கொடுத்துள்ளார். பகிர்ந்து கொள்ள பல பல விஷயங்கள், அனுபவங்கள் இருப்பினும் இதை இத்துடன் முடித்துக் கொள்கிறேன்.

EVER WANT TO BE A GOOD DISCIPLE TO MY GURUSWAMY

R. Nagarajan

**சுவாமியே சரணமய்யப்பா**
**சத்குரு நாதனே சரணமய்யப்பா**
**என் வாழ்வில் ஐயனும், குருவும்**

"குருர் ப்ரஹ்மா, குருர் விஷ்ணு குருர் தேவா மஹேஷ்வர குரு சாட்சாத் பரப்ரஹ்ம

தஸ்மைஸ்ரீ குருவே நமஹ” என்பது வாக்கு. மும்மூர்த்திகளான ப்ரஹ்மாவும், விஷ்ணுவும், மஹேஷ்வரரும் ஒன்றாகச் சேர்ந்தவர்தான் குரு. அந்த வாக்கிற்கேற்ப மூன்று தெய்வங்களும் ஒன்றாய் நடமாடும் தெய்வந்தான் எங்கள் மணி குருஸ்வாமி. ஐயனை எங்களுக்கு அடையாளம் காட்டியவர். ஐயனின் அருளாலும், தன்னுடைய அருளாலும் தன் சிஷ்யர்களின் வாழ்வில் பல அற்புதங்களை நிகழ்த்தியவர் மட்டுமின்றி நாடிவரும் அன்பர்களின் இன்னல்களையும் தன் தவவலிமையால் நீக்கியவர்.

குருநாதர் என்று நாங்கள் நினைத்தவுடனே எங்கள் கண்முன் தோன்றுவது அந்த அன்பான, அழகான, தெய்வீகமான அவரின் முகம்தான். விபூதியும் சந்தனமும் குங்குமமும் அழகாக அணிந்திருக்கும் நேர்த்தி, கழுத்தில் தவழும் மணிமாலைகள், சீராக அணிந்த காவியுடை மற்றும் என்றும் அன்புடன் அருள்பாலிக்கும் அவரின் கருணைக் கண்கள். வியாபரத்தனமான இந்நாளில் ஒரு நல்ல குரு கிடைப்பது மிக அரிது. அப்படிப்பட்ட அரிதான, மனிதரில் மாணிக்கமாக எங்களுக்கு கிடைத்தவர்தான் எங்கள் மணிகுருஸ்வாமி. தனக்கென வாழா பெருந்தகையர். அனைத்து சிஷ்யர்களிடத்தும் ஒரு சகோதர மனப்பான்மையை வளர்த்து அனைவருக்கும் அண்ணனாக வழிகாட்டுபவர். மலை செல்லும் காலம் மட்டுமின்றி, நாள்தோறும் ஐயனை ஆராதிப்பவர். அதே நெறியை தன் சிஷ்யர்களிடமும் புகுத்தியவர். சபரி செல்லும் விரதகாலம் மட்டுமல்லாது என்றுமே எங்களுக்கு குருவாக இருந்து வழிகாட்டுபவர். எந்தக் காரியத்தையும் அவரை மனக்கண்முன் கொணர்ந்து தொடங்கினாலே ஜெயம்தான். இது சத்தியம்.

குருநாதரின் பூஜை முறையும், பாங்குடன் அவர் பூஜை செய்யும் அழகும், அனைவரையும் மனமுருக ஐயன் பதம் பணியச் செய்யும். ஐயப்ப பூஜையில் தனக்கென்று ஒரு பாணியை அர்த்தத்துடன் வகுத்து அவர் ஐயனை அணுகும் நேர்த்தி மிகச் சிறப்பானது.

குருநாதர் ஐயனை, தாய் ஒரு குழந்தையை அலங்கரிப்பது போல், பார்த்துப் பார்த்து அலங்கரிப்பார். பத்து புஷ்பமானாலும் பத்துகிலோ புஷ்பமானாலும் அவர் அதை வைத்து ஐயனை அலங்கரிப்பதை காணக்கண் கோடி வேண்டும்.

பாத பூஜை ஏற்று குருநாதர் சரணம் சொல்லி பூஜை துவங்கும் போதே, பூஜை களைகட்டிவிடும். அவர் கணபதியையும், அம்பாளையும் ஐயனையும் விளக்கில் ஆவாஹனம் செய்து ஆத்மார்த்தமாக அவர்களை விளக்கில் கொண்டுவந்து விடுவார். ஒவ்வொரு அர்ச்சனையையும் ஆடாமல் அசங்காமல் மூன்று தெய்வங்களும் ஏற்றுக் கொண்டு அருளாசி வழங்குவதைக் கண்கூடாக காணலாம். பூஜையின் ஒவ்வொரு பாட்டிலும் கணபதி முதல், ஆஞ்சநேயர் வரை அனைவரையும் மனமுருகபாடி நம்முன்னே கொண்டு வந்துவிடுவார் அவர் உடலும் உள்ளமும் இணைந்து நைவேத்தியத்தை ஊட்டும் போது கணபதியும், அன்னையும், ஐயனும் ஆவலுடன் தீபஜோதி மூலமாக தலைசாய்த்து களித் துண்ணுவதைக் காணலாம். புஷ்பங்கள் நைவேத்தியத்தின் போதும் ஆரத்தியின் போதும், மற்றும் மற்ற முக்கியமான சமயங்களிலும் ஐயனின் திருப்பாதங்களிலிருந்து அழகாக உருண்டோடி வந்து ஆசி நல்குவதைக் காணலாம். ஆஹா என்ன இன்பம் என்ன இன்பம். குருநாதரின் இந்த ஆத்மார்த்தமான பூஜையில் பங்குக் கொள்ளுவது எங்களின் பூர்வ ஜன்ம புண்ணியம்தான்.

குருநாதர் ஒரு பெரிய கம்பெனியில் தலைமைப் பதவி வகித்தபோதும் அவர் கடைபிடிக்கும் எளிமை மிகவும் வியக்கத்தக்கது. எந்த ஒரு விஷயத்திலும் விளையாட்டு கூடாது என்பார். பூஜையின்போது மிகவும் கண்டிப்பானவர். ஆனால் அதே சமயம் குழந்தை மனம் உடையவர். எந்த காரியம் செய்தாலும் அதில் Perfection வேண்டும் என்பார். சொல்வதுமட்டுமன்றி, தன் வாழ்வில் ஒவ்வொரு விஷயத்திலும் அதை அவர் கடைபிடிப் பதை கண்கூடாகக் காணலாம். தன் சிஷ்யர்கள் எப்போதும் தன் கூட இருந்து பூஜைகளில் கலந்து கொண்டு ஐயனின் அனுக்ரஹம் பெற வேண்டுமென்பது தான் அவரின் ஆசை. தன் இல்லத்தில் வந்து பூஜையில் கலந்து கொள்ளும் அன்பர்கள் அனைவருக்கும் அவர் விருந்தோம்புவதைச் சொல்ல வார்த்தைகள் இல்லை. எங்கள் அன்னை குருநாதரின் துணைவியாரும் அனைவருக்கும் சிறிதும் மனம் கோணாமல் அன்புடன் சமைத்து, விருந்தளிப்பது எங்கள் மனங்கவர்ந்த விஷயம். நாங்கள் அனைவரும் குருநாதரின் வீட்டில் இருக்கும் போது எங்கள் வீட்டில் இருப்பது போன்ற உணர்வே இருக்கும். இப்பேற்பட்ட குருநாதரையும் குருபத்தினியையும் நாங்கள் எங்கள் வாழ்வில் தாய், தந்தையாய் அடைந்தது சத்தியமாக நாங்கள் எத்தனையோ ஜென்மங்களில் செய்த புண்ணியம். அத்தகைய குருநாதர் என் வாழ்வில் புரிந்த அற்புதங்களை அன்பர்களுடன் பகிர்ந்து கொள்வது என் அவா.

நான் 1991ல் என் இரண்டாவது மலைக்கு மாலை அணிந்து கொண்டுவிட்டேன். முதல் மலையில் என்னை வழி நடத்திய குருஸ்வாமி சென்னையில் ஐயன் பதம் அடைந்து விட்டார். எவ்வளவு பிரயாசைப்பட்டும் எனக்கு Group கிடைக்கவில்லை. மலை செல்வேனா என்று இருந்தேன். அப்போது என் அலுவலக நண்பர் மணிகுருஸ்வாமியிடம் அழைத்து செல்வதாகவும், இடம் இருந்தால் அழைத்துச் செல்வார் என்றும் கூறினார். குறிப்பிட்ட தினத்தில் நண்பரால் வர இயலவில்லை. நான் தனியாக குருநாதர் இல்லம் அடைந்தேன். குளித்து வந்த அவர் என்னைக்கண்டு, குளித்துவரும் படி கூறினார். Pant. Shirt டுடன் சென்ற எனக்கு தன் வேஷ்டி துண்டைக் கொடுத்து அணியச் செய்தார். பூஜையில் அவரின் பூரணத்துவத்தைக் கண்டு அன்று அவர் பதம் சரண் புகுந்தவன்தான்.

அவருடன் சென்ற அந்த வருடம் பம்பையில் இரவில் எனக்கு பலவிதமான கனவுகள் வந்து நான் பயந்து குருநாதரிடம் கூறி நான் சன்னிதானம் வர தகுதி உடையவனா என்றேன். அவரோ இது உனக்கு கூடிய சீக்கிரம் திருமணம் நடக்கப் போவதாக ஐயன் காட்டிய அறிகுறி அதனால் தைரியமாக சன்னிதானம் வா என்றார். என் Negative approach ஐ தன்னுடைய அருளாலும் அன்பாலும் Positive வாக ஆக்கினார். குருவாக்கு பொய்க்கக் கூடாது என்பதற்காக ஐயனே சர்வாபரண பூஷி தனாகக் காட்சி கொடுத்தார். அப்படிப்பட்ட ஐயனின் மனமுவந்த மணிகுருநாதரின் வாக்கும்தான் பொய்க்குமோ? எனக்கு வந்த 5 மாதங்களில் திருமணம் நிச்சயமாகி, ஆகஸ்ட்டில் ஐயனின் அருளாலும் குருநாதரின் ஆசியுடனும் திருமணமும் நடந்தது.

குருநாதருடன் மலைக்குச் சென்ற மூன்றாம் வருடம் தாமிரபரணியில் ஸ்நானம் செய்து கொண்டிருந்தோம். ஒரு ஐயப்பனின் முத்திரை மாலையும் துணைமாலையும் தாமிரபரணியில் கலந்தது. நாங்கள் அனைவரும் எவ்வளவோ தேடியும் கிடைக்கவில்லை. பின் வேறு ஒரு இடத்தில் குளித்துக் கொண்டிருந்த குருநாதரிடம் நடந்ததைக் கூறினோம்.

அவர் நாங்கள் இருந்த இடத்திற்கு வந்து கொஞ்ச நேரம் ஜபம் செய்து தண்ணீரில் மூழ்கினார். தன் காலில் தானாக வந்து சேர்ந்த முத்திரை மாலையை அந்த ஐயப்பனுக்கு அணிவித்து, இனிமேல் ஜாக்ரதையாக இருக்கும்படி கூறினார். என்ன விந்தை, ஓடும் தண்ணீரில் எங்கள் யாருக்கும் கிடைக்காத அந்த மாலையை தன் தவவலிமையால் கொணர்ந்த குருநாதரை நாங்கள் கண்ணீர் மல்க கண்டகாட்சி இன்றும் என் நினைவில் பசுமையாக உள்ளது.

சென்னையில் பெருங்களத்தூரில் வெங்கட்ராமன் ஐயப்பனின் வீட்டின் பக்கவாட்டில் கூரைவேய்ந்து கட்டோடு எங்கள் குருநாதர் பூஜை செய்தார். முழுஇரவும் ஐயன் கல்யாண உத்சவம் காலையில் இருமுடி கட்டு நிறை. குருநாதரின் ஆத்மார்த்தமான அந்த பூஜையில் அடுத்த வருடம் இந்த இடம் மாளிகையாக வேண்டும் என்று ஆசீர்வதித்தார் குருவாக்கு பொய்க்குமா! அந்த கட்டாந்தரையும் அடுத்த ஆண்டில் மாளிகையாகிய அதிசயத்தை இன்றும் நினைத்து நினைத்து மனம் பூரிக்கிறது.

அடியேனுக்கு மூன்றுமுறை தனியாக Foreign tour செல்ல டெல்லியிலிருந்து Interview வந்தது. என்ன காரணத்தாலோ நான் Select ஆகவில்லை. Delhi யில் இருந்து வந்த நண்பர் என்னை Delhi transfer பெற்று வந்தால், நிச்சயமாக Foreign tour செல்ல Chance கிடைக்குமென்றார். நான் மற்றொரு ஐயப்பனிடம் இந்தச் செய்தியை சொன்னேன். குருநாதரை இம்முறையில் பிரிய மனமில்லாததையும் கூறினேன் அதற்கு அவர் உனக்கு ஆதாயமென்றால் Delhi செல் என்றார். என்றாலும் நான் குருநாதரிடம் இது பற்றி கூறினேன் அதற்கு அவரோ, டேய் உனக்கு Foreign செல்ல யோகம் நிச்சயமாக உள்ளது இதற்காக நீ Delhi செல்லவேண்டாம். ஐயன் உன்னை இங்கிருந்தே அனுப்புவார் என்றார். என்ன ஆச்சர்யம் அந்த வருடமே எனக்கு மறுபடியும் குடும்பத்துடன் Foreign செல்ல Interview வந்தது. 2001 ஜனவரி 17–ந் தேதி நாங்கள் சபரி யாத்திரை முடித்து வந்த இரண்டு நாட்களிலேயே Indian Embassy யில் மூன்று வருடம் குடும்பத்துடன் செல்ல உத்தரவு வந்தது. நான் என் மனைவியிடம்கூடச் சொல்லாமல் முதலில் Telephone செய்தது குருநாதரிடம்தான். வார்த்தைகள் வரவில்லை எனக்கு. கண்ணீர்மல்க குருவிற்கு இந்த மகிழ்ச்சிகரமான செய்தியைக் கூறினேன். என் வீட்டில் அன்புடன் பூஜை செய்து எங்களை மனமார ஆசிர்வதித்து அமெரிக்கா அனுப்பினார்.

மூன்று வருடங்கள் அமெரிக்காவில் கழித்தாலும் ஒவ்வொரு நாளும் நான் ஐயனையும், குருநாதரையும் மனதார நினைத்து வழிபட்டு வந்தேன். அங்கும் நான் இருக்குமிடத்திலேயே ஐயன் 18படிகளுடன் கோயில் கொண்டு என்னை ஆட்கொண்டார். மூன்று வருடங்களும் நாங்கள் சிறப்பாக வாழ்ந்து திரும்பிய போது என்னை Delhi ல் Transfer செய்வதாக செய்தி வந்தது. ஐயனும், குருநாதரும் மீண்டும் என் வாழ்வில் அருள்புரிந்து என்னை பாம்பேயிலேயே Posting கிடைக்க அருள்புரிந்தார். என்னே கருணை குருவே, என்னே நின் கருணை. நான் தொடர்ந்து உங்களுக்கும், ஐயனுக்கும் பணிபுரிய இதைவிட எனக்கு என்ன பாக்யம் வேண்டும்.

நான் உடலாலும் உள்ளத்தாலும் ஐயனையும் எங்கள் மணிகுருநாதரையும் சேர்ந்த நாளிலிருந்து என் வாழ்வில் ஏற்றம் மேல் ஏற்றம் பெற்றேன் சென்ற இடமெல்லாம் வெற்றி. எடுத்த காரியம் அனைத்தும் ஜெயம். குடும்பத்தில் என்றுமே மகிழ்ச்சி. இது என் வாழ்வில்

மட்டுமின்றி, மற்ற ஐயப்ப சகோதரர்களின் வாழ்விலும் நான் கண்கூடாக கண்ட உண்மை. இப்படிப்பட்ட அன்பான, கனிவான, தூய்மையான, எளிமையான தவசியாகிய எங்கள் மணிகுருநாதரை நாங்கள் பெற்றது எங்களின் மிகப்பெரிய பேறு. அந்த நடமாடும் தெய்வமும், எங்கள் அன்னையான அவர் மனைவியும் நீடுழி வாழ்ந்து, எங்களை வாழ்நாள் முழுதும் நல்வழி நடத்திச் செல்லவேண்டுமென்று, மனதார நான் ஐயனையும், எங்கள் குருநாதரையுமே பிரார்த்திக்கிறேன்.

குருநாதரின் பாதாரவிந்தங்களுக்கு அநேக கோடி நமஸ்காரத்துடன் தாசன்

S. சிவகாமேஸ்வரன்

## SWAMIYE SARANAM AYYAPPA

My never ending Namaskaram to the Lotus Feet of Guru Swami.

My Acquaintance with Guru Swami:

One Sees Him as a wonder; and so also another speaks of him as a wonder: and as a wonder another hears of Him; and though seeing speeking , hearing none understands him fully. That is my perception of Guru Swami.

**According to Bhagwat Geeta** "Yoga is not possible for him who eats too much, nor for him does not eat at all, nor for him who is addicted to too much sleep, nor for him who is (ever) wakeful".

"To him whose food and recreation are moderate, whose exertion in actions is moderate, whose sleep and waking are moderate, to him accrues Yoga which is destructive of pain".

Those who are watching our Guru Swami knows this better.

When I Came to Bombay I was not at all having any friends except my brother.

I Was introduced to Guru Swami by one of the disciples of Guru Swami, and I wondered such a wealthy man moved with me like my brother. So I started calling him Anna and his wife Manni.

Frankly speaking he is my prophet, philosopher, Guru, Teacher whenever I make any mistake he reprimands me like my father, pouring all sorts of blessings like my mother, I am astonished, one person reflecting like a kaleidoscope. He is the eye opener for me to lead a spritual life through nuptial.

I want to share some of the events which took place with me, with the Blessingsof Guru Swami.

1. One time I had an oppurtunity to stay with Guru Swami for 45 days in this house during the Diwali Celebration. That time, I was a bachelor and my earnings were very limited. Guru Swami purchased clothes for his son as well as for me in a grand manner and that day my eyes burst with tears, such a magnanimous person I never came across so for in my life.

2. Another time, I accompanied him for Sabiri Yatra. One day I was there during the office days at a Pooja with him. My office timing was 10.00 AM I had to catch the bus from Chembur station on or before 8.30 AM in the morning. So, I thought that I will have some fruits during the course of the day, but Guru Swami instructed Manni to put the plantain leaf in front of Swami and asked me to have my food and then go. Such hospitality I have never seen throughout my life so far.

3. I got married and even never dreamt of purchasing a flat with a meager salary of mine, but it happened because of Gracious Guru Swami's Blessings.

4. Now I am leading a comfort able life with the Blessings of my Guru Swami

5. I am day by day growing with serenity only because of the Blessings of Guru Swami.
6. The magical spell sprouted on me with the glimpse of my Guru Swami.
7. When you enter his house it is the Iyyappan Sanidhanam and you can feel the Vibration.
8. Certainly HE is the ultimate attianment for me like Panchajanya (Celestial Conch) / Sudharshna for Krishna
9. On the extinction of dharmas impiety (adharma) overtakes. To overcome it in kali Yuga persons like our Guru Swami is rendering Renaissance to the un-trodden people like me, it is for the betterment of all.
10. He has many a times refrained me with do's & don'ts.
11. If a person follows the preaching of my (proudly to say) Guru Swami, definitely he (the person who is practising it) will not be deceived by any kind of ills throughout his life.
12. Guru Swami always says convert all your negative approach into positive approach & Ritual deed into Spiritual Deeds That's true, who so ever in reality adopt this methodology will definitely come up in life.
13. My Guru Swami's illustration about deeds. He Who is endowred with wisdom casts off here both good deeds and bad deeds. Wherefore apple thyself to devotion. In regard to actions, devotion is a power. When their mind, perplexed by what they have heard, shall stand firm and steady in the Self, then wilt thou attain Yoga.
14. You can ask any sort of doubt on any subject, there is an answer from my Guru Swami.
15. He whose heart is not distressed in calamities, from whom all longing for pleasures has departed, who is free from attachment, fear and wrath, he is called (as far as I am concerned) is my Guru Swami, a man of steady knowledge, keeping the self steadfast, the Yogin, freed from sins, attains with ease to the infinite bliss of contact with the (supreme)
16. My Guru Swami always says, why are we all greeting one another with Swamiye Saranam because for everybody in the whole universe, whatever the God they are devoting (this specifically Swamiye) goes to HIM. It is not specifically identified as Siva, Muruga, Krishna, anyone ever attempted to give such explanation so far, I do not Know.
17. The Theory of Problem & Experience.
18. **Problem:**

People normally consider Challenging Situations to be problems, which need to go away from one's life. During such challenging times, we do try to get rid of these situations through different means. We either try to move away from the situations and people, or we pray to God wishing for that situation to change. After the challenge has passed, we also tend to feel drained out.

**Experience:**

When I understand that problems are just a game, I am able to play whatever part I have to. Even when the most difficult problem comes my way. I am able to give my best when I understand the significance of whatevar is happening. So I experience lightness and remain happy. Because I never experience being subservient to the problem, because I am a follower of my master (Guru Swamy.)

I am concluding this message saying

"SWAMIYE SARANAM"

With humble namakaram's to my Guru Swamy

A. S. Nagarajan

**Swamiye Saranam**
**Guru Swamiye Saranam**

**HOME TRUTHS**
Being real Believing in Reality is the first step that Guru swamy exhorts us to feel real,
Avoiding any leap with out real assessment of ones ability for a possible reach as he avers further ignoring reality will cause irreparable breach
By being who we are, will even for short spell take us to thecosmicwebsite.TheGuruswamy asserts, shedding un wanted loads, give way to height
Assuring us of enlightment, redeeming our sorry plight .This state of being true to oneself is as natural as day following night .Practice this and enjoy life

Guruswamy's pet advice to find peace is acceptance this word connotes that there is no place for any reluctance. Even the man facing stark reality shouldn't make any preference as according to him peace comes alive by living with acceptance

Remember we can't sort our feelings as old and new
Guru swamy strongly commands one can only be a part of a whole
As he says we start searching that elusive goal by his yardstick this union called non - duality is still achieved
Having reached the fairmade of spiritual existence guruswamy solicits our earnest attempt with Persistence in this endeavor he declares mistake are merely pastence
Trying and experimenting, finding we have relevance
Practice this and enjoy life

**SARANAM**
**GURU SWAMIYE SARANAM**

I was indeed quite amazed at the rebuke that i received when I casually responded to the meaning he had conceived about the words Pleasure and Soul Satisfaction wrongly perceived the real meaning was in the reverse way Alas was stymied

Thwarting was absolutely necessary as organic function can only be temporal and providing perishable pleasure whilst spiritual happiness even called spiritual satisfaction can only be felt and retained as an imperishable treasure

As an eminent scholar had said a friend is a second self .In my life Guruswamy is truly a spiritual guide playing a true friend's a role as well ,whom calls off my bluff to make me more positive and perfect hence i do abide

**SWAMIYE SARANAM**
**GURU SWAMIYE SARANAM**

**Personal experience and revelations**
The humble self joins my Guruswamy on this luminious writing with deep reflections and an accomplishment of a truly life changing experience .the users of this book of ayyappa worship mode will genuinely find this book serving as a soul –friend as every word, every concept, every story, every parable, every step of procedure as they stem from gurusewamy's own personnel divine experiences, discoveries and truths, combining wisdom of the modern context and tradition as well. This is sure to awaken a true devotee mind and divines the emotions culminating into his or her absolute surrender,uplifting devotee's reality of life and more notably ennobling the mind to rise above needless preoccupations.

This devotee shishya ,offering anannthkoti namaskarams at the lotus feet of Arul Migu Guruswamy Mani Avarghal and fervently soliciting benign blessings of Lord Ayyappa is indeed privileged by their divine grace, to add some thoughtful reflections of my own experiences which has enriched my life's journey towards spirituality. Somewhere I have read and preserved the following worthy saying of a great philosopher which befits the narration contained in this marvelous book

**"Wisdom is a living stream not a icon preserved in a museum. Only when we find a spring of wisdom in our life, can it flow to future generations"**

Yes true devotees, lucky enough to go through this spiritually– oriented book, so kindly and benevolently brought out Arul Migu GuruswamyMani Avarghal on "Lord Ayyapa worship"
Will doubtless, experience the realisation of the spring wisdom in this life itself.
Now be the chosen devotee in the cause of emancipation of man-kind towards the spiritual path

BE BLESSED INDEED TO JOIN THE LORD AYYAPPA BRIGADE
OF SALVATION ARMY

Swamiye Saranam-Guru Swamiye Saranam -Devoted Disciple N. Anantharaman

